A

# TAMIL PROSE READING-BOOK:

OR

## Companion to the Hand-Book,

## NOTICE.

THE remaining parts having been delayed by the necessity of waiting for the documents furnished by order of the Madras Government, it has been thought best to issue the three first parts by themselves, reserving the fourth and fifth parts, with Notes and Supplementary Vocabularies, for a separate volume, which when issued can be bound up with this.

☞ *The price of the present Three Parts in one volume, is* TWO RUPEES, *with no abatement.*

*Head Master of the Ootacamund Grammar School.*



MADRAS:
PRINTED AND PUBLISHED BY P. R. HUNT.
Sold at the American Mission Press.
1859.
*Price 4 Rupees.*

A

# TAMIL PROSE READING-BOOK:

OR

## Companion to the Hand-Book,

**IN FIVE BOOKS:**

Book I. Fables and easy Stories.
II. The 2d Part of the Panchatantra.
III. The History of Nala.
IV. The History of Rama.
V. Miscellaneous pieces.

WITH NOTES, REFERENCES TO THE "HAND-BOOK," AND GLOSSARY.

BY

THE REV. G. U. POPE,

*Head Master of the Ootacamund Grammar School.*




MADRAS:
PRINTED AND PUBLISHED BY P. R. HUNT.
Sold at the American Mission Press.
1859.
*Price 4 Rupees.*

# ADVERTISEMENT.

This reading book contains some of the best specimens of Tamil prose. Words not in use have been replaced by ordinary words. All improper expressions have been expunged, and the stories considerably abridged.

The references are to the paras of the Hand-book.

The Vocabulary appended to the Hand-book contains nearly all the words in this book. The meaning of those not explained there will be found in the margin.

The selection has been made with a view to giving the greatest amount possible of information regarding the manners, customs and mythology of the Hindus.

The student is advised not to pause too long at a difficulty in the first reading, but to note it and pass on. On a second perusal it will be found, most probably, to have disappeared.

MOUNT EDGECOMBE,
*Ootacamund, January* 1859.

G. U. POPE.



# BOOK I.

# EASY STORIES.



### 1. THE ASCETIC AND THE FISHERMAN.

எந்த உயிரையும் கொல்லாத ஒரு சந்நியாசி ஒரு ஏரி[க்]
25. 18. 126. 70. 121. 172. 248.
கரை மேலே போனான்; போகும் போது ஒரு செம்படவன்
251. 58. 106. (2.)
Not com. அந்த ஏரியிலே மீன் பிடித்தான். சந்நியாசி செம்
251. 50. 64.
மீன் பிடிக்கிறவன். படவனை[ப்] பார்த்து, "ஐயோ! நீ எப்போது
77. 193. 10. 25.
கரை ஏறுவாய்?" என்றான். "ஐயா, என் பறி நிரம்பினால்
72. 70. 111. 37. 95.
கரை ஏறுவேன்," என்றான்.

The point is in the double meaning of கரை ஏறு.

### 2. THE SPENDTHRIFT AND THE MISER.

ஒரு செலவுகாரன் ஒரு சிக்கெனக்காரனை[க்] கடன் கேட்
181. 70.
டான். "மறுபடி நீ எப்படி[க்] கடன் தீர்ப்பாய்?" என்றான்.
126. 128.
Month by month. "என் சம்பளத்தில் மாசம் மாசம் சேர்த்து[க்]
77
கொடுப்பேன்," என்றான். இதற்கு முன்னே
72. 94.
4th case of இது. தானே நீ இப்படி[ச்] சேர்த்து[க்] கொள்ளல்
108. 148.
I remained. ஆகாதா?" என்றான். "தெரியாமல் இருந்து விட்
268. 120. 60. 254.
டேன்" என்றான். "ஆனால் நான் தெரிவிக்கிறேன்; ஏன் என்
96. 160. 269. 98.
றால், கடன் கொடுக்க மாட்டேன், போ!" என்றான். பிறகு
41. 117. 27. 225.
அவன் பணம் சேர்க்க[த்] தொடங்கினான்.
50. 62.

### 3. THE INATTENTIVE LISTENER.

ஒரு குருக்கள்[29] தம்[166] சிஷனுக்கு ஞானங்கள் உபதேசித்தார்; உபதேசிக்கும் போது, சிஷன் தன் வளையிலே நுழைய[168] [ப்] போகும்[74] எலியை [ப்] பார்த்து, அ தன் மேலே நினைப்பாக[186] இருந்தான். குரு உபதேசித்து ஆன[274. (27.)] உடனே, "சிஷா[29. (b.)] எல்லாம்[127] நுழைந்ததா?"[46] என்றான். — சிஷன், "எல்லாம் நுழைந்தது, வால் மாத்திரந் தான் நுழைய இல்லை,"[113] என்றான். ஆதலால்,[148] மூடர்களுக்கு [ச்] சொல்லுகிற[74] புத்தி இப்படி[25] இருக்கும்[72].

The plural used *honorifically.*

6th case of அது.

---

### 4. THE FOOLISH SONS.

ஒரு ஆசாரியன் சிஷன்[50. 248] வீட்டுக்கு[18] வந்து[70] சில வார்த்தைகள்[50] பேசி [க்] கொண்டு[106. (4.)] இருக்கும்[106. (2.)] போது,—"சிஷா, உன் பிள்ளை நால்வர்களில்[172. 245] யோக்கியன்[196. 180] ஆர்?"[47] என்றான்.—"சுவாமி! இதோ,[193] கூரை[131] வீட்டின்[251] மேல் ஏறிக் கொண்டு, கொள்ளி [க்] கட்டை[131] சுற்றுகிறானே,[23] இவன் தான்[108] இருக்கிறவர்களுக்குள்ளே[87][243] பரம யோக்கியன்" என்றான். குரு, "மற்றை மூவர்கள்[172] எப்படிப்[199] பட்டவர்களோ"[46] என்று,[92] மூக்கு மேலே[251] விரல் வைத்து [ப்] பெருமூச்சு[131. (e.)] விட்டு,[254] "அப்படியா?" என்று விசனப் பட்டான்.[161]

---

### 5. THE SHEPHERD AND THE SINGER.

ஒரு பாடகன் தெரு [த்][131] திண்ணையிலே[23] உட்கார்ந்து, தலை அசைத்துக்கொண்டு, சங்கீதம் பாடினான். வெகு சனம் கேட்டு

இருந்தது. அப்போது வழியிலே போகிற ஒரு ஆட்டிடை[248]-
யன் அங்கே நின்று[70], சற்று நேரம் பார்த்து [த்] தேம்பி [த்] தேம்-
பி ஓயாமல்[120] அழுதான்[60]. அங்கிருந்தவர்கள்[87], "ஆனந்[239]- [உ+இ]
தத்தாலே அழுகிறான்" என்று எண்ணி, "ஏன்[214]
அழுகிறாய்? அழாதே![121]" என்றார்கள். இடையன், "ஐயோ![193]
என் மந்தையிலே ஒரு ஆட்டுக்கு இந்த வலி வந்து, கோண [க்][274]
கோண இழுத்து[(15.)], எதினாலேயும்[126] பிழையாமல் [எது + இன் + ஆல்.]
செத்து[58] [ப்] போச்சுது[123]. அது இந்த ஒரு வயது [ப்]
பிள்ளைக்கும்* வந்ததே, என்று அழுகிறேன். ஆனால்[98] இவனுக்கு
உடனே சூடு[256] போட்டால்[95] ஒரு வேளை பிழைப்பான்" என்-
றான். அவர்கள் அவனை [த்] திட்டி [த்] துரத்தினார்கள்.

*Lit. A child of one age = a youth in the flower of his age.



### 6. THE THIEF IN THE COCOA-NUT TREE.

ஒருவனுடைய தோட்டத்தில்[18] இருந்த தென்ன மரத்திலே
தேங்காய் திருட வேண்டி ஒரு திருடன் அதன் மேல் ஏறி-
னான். மரத்துக்காரன்[243] சந்தடி அறிந்து, வீட்டிலிருந்து அதட்[245]-
டிக் கொண்டே[106. (4.)] ஓடி வருகையில்[144], திருடன் அதை அறிந்து,
மரத்தில் இறங்கி வந்தான். மரக்காரன் அவனை [ப்] பார்த்து[230],
"அடா![193] ஏன் மரத்தின் மேல் ஏறினாய்?" என்றான்.—"அண்-
ணே! நான் கன்று [க்] குட்டிக்குப் புல்லு [ப்] பிடுங்க ஏறி-
னேன்," என்றான். "ஆ! தென்ன மரத்திலே புல் இருக்கு-
மா?" என்றான். "இல்லாமையாலே தான் இறங்கி வருகி-
றேன்; இது தெரியாதா[110]?"[154] என்று பரிகாசம்பண்ணிக்கொண்டு[165]
போய்விட்டான்[254].

### 7. WHO CAN FILL THE HOUSE AT THE LEAST EXPENSE?

Cont. for சாகும் = time of death.

Or வத்தி.

ஒருவன் பதினாயிரம்[172] வராகன் வைத்திருந்தான்.[261][79] அவன் தனக்குச் சாங்[74] காலஞ் சமீபித்தது[163][87] அறிந்து[50] தன் இரண்டு பிள்ளைகளையும் அழைத்தான். ஒவ்வொருவனுக்கு[177] ஐவைந்து[177] பணங் கொடுத்து, "அதனாலே வீட்டை நிறையப் பண்ணுகிறவனுக்கு என் பொருளைத் தருவேன்,"[70] என்றான். அவர்களிலே[245] மூத்தவன்[87] ஐந்து பணத்துக்கு[242] மலிந்த பண்டம் ஆகிய[130] கருப்பஞ்[131] செத்தை வாங்கி வந்து, வீடு நிறையக் கொட்டிப் பரப்பிவைத்தான். இளையவன்[184] மெழுகு வர்த்தி வாங்கி வந்து ஏற்றி, எங்கும் பிரகாசிக்க வைத்தான். பிதா இவை இரண்டையும் பார்த்துத், தீபம் ஏற்றினவனுக்கு ஆஸ்தியை ஒப்பித்தான். ஆதலால், புத்தி உள்ளவன்[133] பெரியவன்.[191]

---

### 8. THE MERCHANT AND THE BLOCKHEAD.

= *A journey* (to another) *town.*
= *Because it had become.*

Vulg. for இருக்கவே, orig. இருக்கச்செய்தே. comp. the use of KARKAR in Hind.

ஒரு மூடன் ஒரு செட்டி[225] பின்னே[251] கூடிக் கொண்டு, ஊர்ப்[131] பயணம்[233] போனான்.[258] போகும் போது, மெத்தக் கருக்கல் ஆன படியினால்[239] ஒரு மைதானத்திலே இவன் வழியில் படுத்துக் கொண்டான். செட்டி சமீபத்திலே ஒரு செடிமறைவிலே[131] படுத்துக் கொண்டான். இப்படி இருக்கச்சே[169] வழியில் போகிற திருடர்[29] காலிலே மூடன் கால் தட்டுப் பட்டது. ஒரு திருடன், "இதென்ன?[47] கட்டை போல்[227] இருக்[35]குதே" என்றான். மூடனுக்கு [க்] கோபம் வந்து, "போ! போ!

உன் வீட்டுக் கட்டை இடுப்பிலே ஐந்து பணங் கூட முடிஞ்சு
131. 170. 123.
கொண்டு சட்டமாய் [ப்] படுத்து இருக்குமோ?"
= முடிந்து. 40.
என்றான். திருடர் அவனை [ப்] பிடித்து, அந்த [ப்]
பணத்தை [ப்] பிடுங்கி [க்] கொண்டு போகிற போது, "இந்தப்
பணஞ் செல்லுமோ, செல்லாதோ?" என்று பேசிக் கொண்டார்
72. 110.
கள்—மூடன், "ஆ! என் பணம் அப்படிப்பட்ட
199
தா? வேண்டும் ஆனால் செல்லுஞ் செல்லாததுக்கு,
39. 120. (5.) 242.
இதோ, செட்டியார் இருக்கிறார், காட்டுங்கள்,"
151. (b.) 27. c.

Lit. "*To the it will pass, it is a thing which will not pass current.*"

என்று அந்த [ச்] செட்டியை [ச்] சுட்டி [க்] காட்டிச் சொன்னான்.
அவர்கள் செட்டியிடத்தில் இருந்த நூறு வராகனையும் பறித்
துக் கொண்டு போனார்கள். ஆகையால், மூடர்கள் சேர்க்கை
50. 143.
யாற் [ல் + த்] றப்பாமற் கெடுதி வரும்.
120. 190. (h.) 70.

---

### 9. A WEIGHTY DISCOURSE.

ஒருவன் கடைவீதியிலே இராமாயணம் பிரசங்கம் பண்
50.
ணிக் கொண்டிருந்தான். அப்போது, ஒரு இ
டைச்சி தன் முட்டாள் ஆம்படையானுக்குப்
130.

Fem. of இடையன்.

புத்தி வரும் என்று எண்ணி, ஆம்படையானைப் பார்த்து, "நீ
ராமாயணங் கேட்டு வா," என்று அனுப்பினாள். அவன் அப்
படியே வந்து, மாட்டாங்கோலை மோவாய்க்
130.
கட்டையில் ஊன்றி [க்] குனிந்து கொண்டு நின்

= A stick for the cattle.

றான். அங்கே இருந்தவர்களில் ஒரு போக்கிரி அவன் முது
87.
கின்மேல் ஏறிக் கொண்டான். அந்த இடையன் பிரசங்
கம் முடியும் அளவும் அப்படியே சுமந்து கொண்டிருந்து,
211.
பிறகு வீட்டுக்குப் போனான். அந்த [ப்] பெண்டாட்டி இவ
னைப் பார்த்து, "ராமாயணம் என்னமாய் இருந்தது?" என்றாள்.—
230. 47.

"அடா! அப்பா! அது சுலுவு அல்ல. ஒரு ஆள்[43] சுமை இருந்தது" என்றான். அவள் "என்ன?" என்று கேட்டு, அவன் மூடத்தனத்துக்கு[60] விசனப் பட்டாள்.

---

## 10. THE BLIND MEN AND THE ELEPHANT.

சில பிறவிக்[190] குருடர்கள்[29] ஓர் இடத்தில் சேர்ந்து இருந்து கொண்டு இருந்தார்கள். அவர்கள் யானையைப் பார்க்க வேண்டும் என்று ஆசை கொண்டு, ஒரு யானைப்[259] பாகனை வேண்டிக் கொண்டார்கள். அவன் யானையை நிறுத்தி, "இதைப் பார்த்துப் போங்கள்" என்றான். "நல்லது"[184] என்று ஒரு குருடன் காலைத் தடவிப் பார்த்தான். ஒரு கபோதி தும்பிக்கையைத் தடவிப் பார்த்தான். ஓர் அந்தகன் காதைத் தடவிப் பார்த்தான். இப்படிப் பார்த்து விட்டு[254], இவர்கள் அப்புறம்[25] போன பிறகு, ஒருத்தர்க்கு ஒருத்தர் யானையின் தன்மை பேசத் தொடங்கினார்கள். அப்போது காலைத்[89] தடவினவன் "யானை உரல் போல் இருக்கிறது" என்றான். தும்பிக்கையைப் பார்த்தவன், "யானை உலக்கை போல் இருக்கிறது" என்றான். காதைத் தடவிக் கண்டவன், "யானை முறம் போல் இருக்கிறது" என்றான். வாலைத் தடவிக் கண்டவன், "துடைப்பம் போல் இருக்கிறது" என்றான். இப்படி ஒருவருக்கு ஒருவர் மாறு[92] படச் சொல்லி, ஒழியாமற் சண்டை இட்டுத்[263] திரிந்தார்கள்.

Incor. for ஒருவருக்கு ஒருவர் = *one to* (or *with*) *another.*

மனதுக்கு எட்டாத[120] கடவுளின் தன்மையைப் பல சமைய வாதிகளுந்* தங்கட [ள் + த்] ங்கண் மத நூலைக் கோண்டு நிச்சயிப்பது[88] இப்படியே இருக்கின்றது.

* Sectarian disputants.

## 11. THE FOOLISH POTTER.

ஒரு கிராமத்திலே ஒரு குசவன் பானைசட்டிகள் [274.] செய்து, [(7.)]
for சூளையிலே. சூளை போட்டு, விற்றுச், [co. 70.] சீவனம் பண்ணிக்
= அரண்மனை. கொண்டு இருந்தான். அவனிடத்தில் அரமனைச் [248.]
சேவகர் அடிக்கடி வந்து, [244.] பானைசட்டி கொடுக்கச் சொல்லித்,
தொந்தரைசெய்து, [165.] விலைகொடாமல் எடுத்துக்கொண்டு போ
வார்கள். [269.] இப்படி இருக்கையில், [144.] ஒரு நாள், [233.] ஒரு சேவகன்
வருகிறதைக் கண்டு, அந்தக் குசவன் பனந்தோப்பிலே [131.] போய் [77. note.]
ஒளித்துக் கொண்டான். சேவகன் வீட்டில் போய்ப் பார்த்
துக், குசவன் இல்லாமையினாலே, [154.] நானே வரலாம் என்று [108. (4.)] அந்
தப் பனந்தோப்பு வழியே [233.] போனான். இவனைக் கண்டு, குச
வன் பயந்து [107.] எழுந்து நின்று, பனைமரத்தைப் பார்க்கிறாற் [227. (5.)] போல்
இருந்தான். சேவகன் அவனை [236.] இன்னான் என்று அறியாமல்,
"என்ன மரத்தைப் பார்க்கிறாய்?" என்றான.
என்ன = why.
"இந்த [ப்] பனை கலப்பைக்கு ஆகுமா? என்று
= என்ன அடா?
பார்க்கிறேன்," என்றான். சேவகன், "நீ என்ன
Here = *blockhead.*
டா! [194.] குசவன் ஆக இருக்கிறாய்; பனைமரங் கலப்
பைக்கு ஆகுமா?" என்றான். குசவன், "நான் இங்கே இருக்
கிறது உமக்கு ஆர் சொன்னது?" என்றான். சேவகன், "நீ
Observe the place of the ஆ.
தானா குசவன்? வா!" என்று பிடித்துக்கொ
ண்டு போய், விலை கொடாமற், பானைசட்டிகளை
அவன் தலை மேலே தானே எடுப்பித்துக் [160.] கொண்டு போனான்.
ஆதலால், பேதைகள் வெள்ளத்திலே நின்றும் [100.] தாகத்துக்குத்
தண்ணீர்க்கு அலைவார்கள்.

## 12. THE FOX AND HIS CREDITOR.

மழையிலேயுங் காற்றிலேயும் அடிபட்டு, இரண்டு மூன்று நாள் வரைக்கும் இரை கிடையாமல் இருந்த ஒரு குள்ள நரி பசியோடு இரைக்குத் தள்ளாடிக் கொண்டு வெளிப்பட்டு வந்தது. வருகிற வழியிலே ஓர் ஆலமரத்தின் கீழே சில நாளைக்கு முன்னே ஒரு விறகு தலையன் மறந்து விட்டுப் போன ஒரு செருப்புச் சோடு மழையில் நனைந்து நன்றாய் ஊறிப் பக்குவமாக இருந்தது. இந்த நரி அச்சோட்டைப் பார்த்துத், தின்ன வேணும் என்கிற ஆசையினாலே, "இந்தச் செருப்புக்கு உடையவன் இவ்விடத்தில் எங்கேயோ இருக்கிறான்" என்று நினைத்து, "அய்யா! என் பசிக்கு இதில் ஒன்றைத் தயை பண்ணிக் கொடுத்தால் ஒரு பணந் தருவேன்," என்று சொல்லியது. அப்போது கர்த்தாவானவர், "நல்லது அப்படியே தந்தேன்," என்று அசரீரியாய்ச் சொன்னார்.—அதை[க்]கேட்டவுடனே, இந்த நரி சந்தோஷமாய் அதில் ஒரு செருப்பைத் தின்று பசி தீர்ந்து வருகிற போது, "இனி நின்றால் பணங் கொடுக்க ‸ வரும்," என்று அதி வேகமாக நெடுந் தூரத்திலே ஓடி, ஒரு நெருங்கிய பெரும் புதரிற் புகுந்து, மறைவாக உட்கார்ந்தது. சுவாமி அங்கே ஒரு மணி தனைப் போலே நின்று, "எங்கே பணம்?" என்றார். நரி திடுக்கிட்டுப், பின்னும் ஓடும் போது முள்ளிலுங் கல்லிலும் மரத்திலுஞ் செடியிலும் அடிபட்டு, இரத்தம் பெருகக் கண்களிலுங் கால்களிலுங் காயம் பட்டுக் கால் அசந்தோடச் சத்துவந் தப்பி, ஒரு செடி மறைவில் ஒளிப்பாக உட்கார்ந்தது. அந்த

Connect பசியோடு with தள்ளாடி and இரைக்கு with வெளிப்பட்டு.

வேண்டும்.

"If you will be so good as to give."

This belief prevails among the Hindûs.

as soon as (he) heard.

‸understand அவசரம்.

விடாக் கடன்காரன் அங்கேயும் நின்று, "எங்கே பணம்?"
220.
என்றான். நரி, "ஏது பணம்?" என்றது. சுவாமி, "செருப்புக்
காக ஏற்றுக் கொண்டாயே, அந்தப் பணம்!" என்றார். நரி,
"நன்றாய் இருந்தது! அந்த நரிக்குக் கண் ணொள்ளையா? கால்
நொண்டியாக இருந்ததா?" என்றது. "அப்படிக்கு
For அப்படி.
இல்லை" என்றார். "ஆனால், நான் அல்ல, போ!"
I'm not the person.
என்றது. பகவான் இதன் மோசத்துக்கு அதிசயித்து, மறைந்து
163.
போனார்.

---

## 13. HOW TO SATISFY THE MANES.

முன்னாலே இராச்சியம் ஆண்டு கொண்டிருந்த இராயன்
என்பவனுடைய தாயார் இறந்து போகிற காலத்தில் "மாம்
151. (a.) 151. (b.) 258.
பழத்தின் மேல் ஆசையாக இருக்கிறேன்," என்
மா + பழம், ம், euphonic.
று சொன்னாள். இராயன் அதை அழைப்பித்
துக் கொடுப்பதற்கு முன்னே இறந்து போனாள். பிறகு சில
88. 84.
நாள் பொறுத்துப் பார்ப்பாரை அழைப்பித்து, "என் தாயார்
160.
மாம்பழத்து ஆசையுடனே இறந்து போனாள்; அதற்கு என்ன
248. 239.
செய்யலாம்?" என்றான். அவர்கள், "தங்கத்தினாலே நூறு நூறு
பலத்திலே ஆயிரம் பழஞ் செய்வித்து, ஆயிரம் பிராமணருக்குக்
கொடுத்தால், அந்த ஆத்துமாவுக்கு அந்த ஆசை தீரும்," என்
றார்கள். இராயன் அப்படியே செய்வித்து, அ
For *on the anniversary* of.
வள் இறந்த நாளையில் தானம்பண்ணினான்.
A very famous jester. co. story 38.
அப்போது இராயனண்டை ஆசியக்காரனாய்
151. d. 137.
இருந்த தெனாலி இராம கிஷ்ணன் அந்தப் பிராமணர்களை
எல்லாம், "என் தாயாரைக் குறித்துக் கொஞ்சம் பிரயோசனம்
126. 230.
இப்போது செய்யக் காத்திருக்கிறேன், தயை செய்ய வேண்
டும்," என்று தன் வீட்டிற்கு அழைத்துப் போனான். அவர்கள்

உள்ளே போனபிறகு தெருக் கதவைச் சாத்திப் போட்டு, [256] வீட்டிலே வரிசையாக உட்காருவித்து, அதற்கு முன்னே அடுப்பிற் காயப் போட்டிருந்த சூட்டுக்கோலை எடுத்துக் கொண்டு வந்து, "ஐயர்களே! என் தாய் வலிப்பு நோயால் இறந்து போகையிற் 'சூட்டினால் பிழைப்பேன், என்றாள். ஆனால், சுடுவதற்கு முன்னே பரலோகத்தை அடைந்தாள். ஆகையால், அவள் சந்தோஷம் அடைய அந்தச் சூட்டை நீங்கள் குளிர்ந்த மனதோடு வாங்கிக் கொள்ளுங்கள்," என்று சில பேரைச் சுட்டான். அவர்கள் திமிறிக் கொண்டு, ஓடி வந்து, இராயனிடத்தில் முறை இட்டார்கள். இராயன் இராம கிஷ்ணனை அழைப்பித்து, "என்ன செய்தாய்?" என்று அதட்டிக் கேட்டான். அவன், "தேவரீர் [151. c.] தாயார் கேட்டதை இவர்களுக்குக் கொடுத்தாற்போல [227.] என் தாயார் கேட்டதையுங் கொடுத்து அவளுக்குச் சந்தோஷம் வரப் பண்ணுகிறேன்" என்றான். இராயன் அதற்கு வெட்கிச், சும்மா இருந்து விட்டான். [254.]

---

## 14. HOW TO CATCH FISH.

ஒரு குடியானவனுக்கு [151.] ஒரு பிள்ளை இருந்தான். அந்தப் பிள்ளை படிப்பு [190.] வாராத [267.] மூடனாய் இருந்த படியினாலே, தகப்பன் பிள்ளையைப் பார்த்துப், "பையா! நீ பெரிய பிள்ளை ஆகியுங் [100.] கொஞ்சம் ஆனாலும் [217.] புத்தி இல்லாமல் [202.] இருக்கிறாயே, இன்றைக்கு மீன் ஆவது [205.] பிடித்துக் கொண்டு வா!" என்றான். அந்தப் பையன் "நல்லது" என்று போய், அந்த ஏரியை நால் ஆறிடத்தில் வெட்டித் திறந்து விட்டான். ஏரித் தண்ணீர் எல்லாம் போய் விட்டது. பிறகு ஏரி நடுவே சேறுந் தண்ணீருமாய் [137.] இருந்த இடத்திலே கையினு

= 4 or 6 = several.

லே தடவி, ஏழ் எட்டு மீன் பிடித்துக் கொண்டு வந்து, தகப்பன் முன்னே வைத்தான். தகப்பன், இத்தனை நாளைக்குப் பிறகு இவ்வளவு ஆனாலும்[100] புத்தி வந்ததே என்று கொஞ்சஞ் சந்தோஷமாய், "அப்பா! குழந்தாய்! நீ இன்னேரஞ் சாப்பாட்டுக்கு வாராமல் இளைப்போடு[21. (b.)] ஏன் இருந்தாய்?" என்றான். "அந்த ஏரித் தண்ணீர் கொஞ்சத்திற்[251.] போக வில்லை," என்றான். "அது என்ன சங்கதி?" என்றான். தான் ஏரியை உடைத்து மீன் பிடித்த காரியத்தைச் சொன்னான். தகப்பன் தலையில் அடித்துக் கொண்டு, "என் குடியைக் கெடுத்தாயா!" என்று விழுந்து, புரண்டு, அழுது, ஏரித் தண்ணீர் போய் விட்டதினால் அந்த வருஷம் பயிர் விளையாமல் நஷ்டப் பட்டான். ஆகையால், மூடனாய் இருக்கிற பிள்ளையினாலே எப்போதும் நஷ்டமே வரும்.

An ellipsis of the 4th case.

---

### 15. HOW TO GOVERN A KINGDOM.

தன் பிதா இறந்த உடனே இராச்சிய பட்டாபிஷேகம் பண்ணிக் கொண்ட ஒரு இராச குமாரன் ஆனவன் பயன் இல்லாத காரியங்களிற் செலவு செய்ய விரும்பிய போது, மிகுதியாகப் பொக்கசத்திற் திரவியம் இல்லாமையால், மந்திரியை அழைத்து, "நமது தேசத்துக் குடிகள் வருஷந் தோறும் நமக்குக் கட்டுகிற[248.] பகுதிப்பணம் கொஞ்சங் கொஞ்சமாக வருகிறதினால் ஒரு நாளும் பொக்கசம் நிறைய வில்லை. ஆதலால் இப்போது பல சரக்கு, நன் செய், புன் செய், வீடுகள், தோப்புகள், இவை முதலானவைகளுக்குத்[151. e.] தீர்வைகளை அதிகமாக விதித்துக், கொடாதவர்களைத்[120. (5.)] தண்டித்து, அவர்கள் சொத்துக்களை விற்பித்து,[160.] இருபது வருஷத்து வரிப்பணங்களை முன்னதாக ஒருமிக்கத்[170.] தண்டிப், பொக்கசத்தை நிரப்ப

A sans. comp.

= little by little.

= முன் + அது + ஆக = before-hand.

வேண்டுகிறேன்.—உமது கருத்தென்ன?” என்றான். மந்திரி, “மகா இராசாவே! நான் செய்கிற விண்ணப்பத்தைக் கோபியாமற் கேட்டருளிப், பின்பு உழுது பயிர் செய்ய நிர்வாகம் இல்லாத

264. = advance. ஏழைக் குடிகளுக்கு முன்னே வாரக்கங் கொடுப்பித்துப், பயிர் இடுவித்து, அந்தப் பணத்தைப் பகுதி [ப்] பணத்தோடு சேர்த்துச்சிறிது சிறிதாகக் குடிகளிடத்தில் வாங்கிக் கொண்டு வந்தால், அதனாற் குடிகளும், அவர்களால் அரசரும், பலன் அடைவார்கள். எப்படி யென்

= கறவாமல். 120. The க க are often inserted. றாற், பசுவுக்குப் புல்லு முதலானவைகள் போட்டு இதம் பண்ணிக் கறக்காமல், ஒரு மாதம் வரைக்கும் கறக்கப்படுகிற பால் முழுதும் ஓரே தரத்தில் வேண்டும் என்று அதன் மடியை அறுத்தாற்[127] சிறிதாகிலும் பால் கிடைக்குமோ? மேலும், அரசனுக்குக் குடிகளைச் சந்தோஷிப்பிக்கிற

From S. root RAJ. தினால் இராசா என்கிற பெயரும், நரர்களைக்

காப்பாற்றுகிறதினாலே நிருபன் என்கிற பெய

From S. root NRI. ரும் உண்டாயின,” என்று இப்படிப் பல நியாயங்களைச் சொல்ல, இதனால் இராச குமாரன் கடிவாளத்தினாற்

Ell. of 6th case. திரும்புகிற குதிரை போற் திரும்பி, மந்திரி சொற்படி இராச்சியம் பண்ணிக் கொண் டிருந்தான்.

---

## 16. HOW MUCH IS “PLENTY?”

ஒரு செட்டி மேற்குத் தேசத்திலிருந்து பத்து மாடுகளின் மேல் வெல்லப் பொதிகள்[App. ix.] ஏற்றிக் கொண்டு வருகையில் வழியில் ஓர் மாடு துள்ளிப்,[131. (b.)] பொதியைக்[160] கீழே போட்டு விட்டது. அப்போது அந்த வர்த்தகன் அங்கே இருந்த ஒரு மாடு மேய்க்கிற பையனை அழைத்துத், “தம்பி, இந்த வெல்லப் பொதியை

என்னோடு கூடப்[170] பிடித்து, மாட்டின்மேல் எடுத்துப் போடு, பிறகு உனக்கு நிரம்ப[171] வெல்லந் தருகிறேன்," என வேண்டிக் கொண்டான். அந்தப் பையன், "நல்லது" என்று அப்படியே தூக்கி விட்டான். பிறகு அந்தச் செட்டி அவனுக்கு ஒரு உண்டை வெல்லங் கொடுத்தான். பையன், "இது கொஞ்சம்; நிரம்ப வெல்லங் கொடு" என்றான். வர்த்தகன் பின்னுங் கொஞ்சங் கொடுத்தான். "இதுவுங் கொஞ்சம்; நிரம்பக் கொடு" என்று, எவ்வளவு கொடுத்தாலும்[100-(௨.)] இப்படியே சொல்லி வழக்காடிக் கொண்டிருந்தான். அப்போது அங்கே வந்த ஒரு வழிப் போக்கன் ஒரு உபாயம் பண்ணினான்; என்ன வென்றால், ஒரு கையிலே[258] எடுத்துக் கொண்ட வெல்லத்தைக் காட்டிலும் மற்றொரு கையில் வெல்லங் கொஞ்சமாக எடுத்துக் கொண்டு[196], இரண்டு கை வெல்லத்தையுங் காட்டித், "தம்பி, இதெவ்வளவு? இதெவ்வளவு? சொல்லு," எனப் பையன், "அது கொஞ்சம், இது நிரம்ப இருக்கிறது," என்றான். "இது நிரம்ப இருக்கிறதினால் இதை வாங்கிக் கொண்டு போ," என்றான். பையன் வெட்கத்தோடே அதை வாங்கிக் கொண்டு பேசாமற் போய் விட்டான்.

Pronounced ரொம்ப.

---

## 17. LET ALL FOUR COME.

நால்வர்[172] கூடிக் கொண்டு, ஓர் ஊருக்குப் பிரயாணப் பட்டு[ப்][161] போகையில், வழியில் ஓர் பண முடிப்புக் கண்டு எடுத்தார்கள். ஆனால், அதைப் பங்கிடுவதைக் குறித்து ஒருவருக் கொருவர் வழக்கு வந்து, நெடு நேரம் பேசியுந் தீராமையால், அவ்வூரிற் கடை வைத்துக் கொண்டிருக்கும் ஓர் பெறுமான வர்த்தகனைக் கண்டு, "ஓ, செட்டியாரே! இதோ, தெரிகிற இந்தக் குளத்துக்குப் போய் நாங்கள் கட்டுச் சோறு

= பெரிய.

சாப்பிட்டு வருகிறோம், மறுபடி இதை நாங்கள் நால்வரும் வந்து கேட்டாற் கொடும்," என்று அந்தப் பண முடிப்பை அடையாளத்துடனே அவனிடத்திற் பொதுக்கட்டி, வைத்து விட்டுக், குளத்துக்குப் போய்க் குளித்து முழுகி அனுட்டானம் முடித்துப், போசனம் பண்ணி ஆன வுடனே அக்குளக் கரை ஆல மர நிழலில் இளைப்பாற உட்கார்ந்து கொண்டு, தம்மில் ஒருவனை, "நாங் கண்டு பேசி வந்த செட்டியண்டையிற் போய், ஓர் பணத்துக்கு வெற்றிலை பாக்குப்* புகை யிலை வாங்கி வா," என்று அனுப்ப, அவன், "அப்படியே ஆகட்டும்," என்று போய்ச், "செட்டியாரே! அந்தப் பண முடிப்பைக் கொடும்" என்று கேட்டான். செட்டி "அவர்கள் இல்லாமற் கொடேன்" என்றான். "ஆனால் அவர்களாற் சொல்லிக்கிறேன், பாரும்" என்று அங்கிருந்தபடி அவர்களை நோக்கி உரக்கக் கூப்பிட்டுச், "செட்டியார் நீங்கள் சொல்லாமற் கொடேன் என்கிறார் என்ன," அவர்கள் "அட்டி சொல்லாமற் கொடுங், கொடும்," என்று கூப்பிட்டுச்சொல்லச், செட்டி முடிப்பை எடுத்து அவன் கையிற் கொடுத்து விட்டான். அவன் அதை வாங்கிக் கொண்டு ஒருவருக்கும் தெரியாமற் போய் விட்டான். பின் மூவரும் ஒரு நாழிகை வரைக்கும் அவன் வாராமையாற் செட்டியிடத்துக்கு வந்து, "அவன் எங்கே?" என, அவன் "அப்போதே முடிப்பை வாங்கிக் கொண்டு வந்து விட்டானே" என, "ஓகோ! மோசம் பண்ணினாயே, செட்டி! 'நாங்கள் நால்வரும் வந்து கேட்டாற் கொடு' என்றோமே; நீ அப்படிச் செய்யாமையால் அந்த முடிப்பை ஒப்பிக்க வேண்டும்," என்று அந்தச் செட்டியை மடி பிடித்து இழுத்துக் கொண்டு அவ்வூர் நியாயாதிபதியிடத்திற் போய், இதைச் சொல்லிக் கொண்டார்கள். இதை எல்லாங்

[Margin notes: பொதுக்கட்டி = gave in trust. — அனுட்டானம்: Not com. — 274. (27.) — 131. — 251. — *An ellipsis of உம். — 169. — 140. (d.) — 110. — 160. — அங்கிருந்தபடி: Just where he stood. — 251. (4.)]

கேட்டு அறிந்த நியாயாதிபதி, “நல்லது, நீங்கள் சொன்னபடியே நால்வரும் வந்து கேட்டாற் செட்டி அந்த முடிப்பைக் கொடுப்பான்,” என, அதைக் கேட்டு வெட்கிப் போயினார்கள்.

Com. போனார்கள்.



**18.** THE NECESSITY OF A KNOWLEDGE OF THE COLLOQUIAL.

தெற்குத் தேசத்திலிருக்கும் ஓர் தமிழன் சீவனம் இல்லாமற் சங்கடப் [App. ix.] பட்டுக் கொண்டிருக்கையில் அவன், [180.] “வட தேசத்திலே ஆகிலும் போய்ப் பிழைப்போம்” என்று ஆலோசித்துப் புறப் பட்டுப் போகும் வழியிலே, தெலுங்கு தேசத்தில் ஓர் கிராமத் [251.] துக்கு அடுத்த சத்திரத்தில் ஒரு நாள் இராத்திரி வந்து தங்கி இருந்தான். வட தேசத்தில் இருக்கும் ஒரு வடுகன் அன்னம் [App. ix.] முதலானவைகளுக்கு வருத்தம் உற்றவனாய்த், “தமிழ்த் தேசத் [151. (c.)] திலே ஆகிலும் போய்ச் சேவகம் பண்ணிப் பிழைப்போம்” என்று, கையிலே ஈட்டி ஒன்று எடுத்துக் கொண்டு, ஊர்தோ [173.] றும் யாசகஞ் செய்து போசனம் பண்ணிக் கொண்டு, அவனும் அன்று இராத்திரி அந்தச் சத்திரம் வந்து சேர்ந்து படுத்து இருந்தான். விடியற் காலம் அந்த வடுகன் எழுந்து தெற்கே போக வேண்டும் என்று, தன் ஈட்டியை எடுக்கையில் அது தெற்கே இருந்து வந்த தமிழன் தொள்ளைக் காதிலே மாட்டிக் கொண்டபடியினாலே அவன் “காது காது!” என்று ஈட்டியைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டான். வடுகன் “நாதி, நாதி” என்று ஈட்டியை இழுத்தான். அப்படி இருவரும் ஒருவன் பேச்சு ஒருவனுக்குத் தெரியாமல் வாதாடிக் கொண்டிருக்கையில் வடுகுந் தமிழுந் தெரிந்த [255.] ஒருவன் அவர்கள் இருவருக்குந் தெரியச் சொல்லி விலக்கி

From village to village.

Ellipsis of 4th case.

కాదు = அல்ல in Tel.

నాది = என்னுடையது.

விட்டான். ஆகையால் ஒரு தேசத்தில் வழங்குகிற வார்த்தை தெரியாமல், "அந்தத் தேசத்திற் போய்ப் பிழைப்போம்" என்கிறது தப்பு என்று, அவ்விருவருந் தங்களுடைய தேசத்துக்[82]குப் போய் விட்டார்கள். ஆகையாற் சகல தேசத்து வார்த்தையுங் கற்றுக் கொள்ளுகிறதே யாவர்க்கும் பிரயோசனம்.



## 19. THE WAY TO PRESERVE PEACE IS TO BE PREPARED FOR WAR.

ஓர் அரசன் பொக்கசத்தில் அதிக பணம் இல்லாமல் இருக்கக் கண்டு, தன் மந்திரியைப் பார்த்து, "நான் சத்துருக்களை எல்லாம் வென்று தேசங்களைக் கட்டிக் கொண்டேன்; எல்லா இராசாக்களும் எனக்குக் கப்பங் கட்டுகிறார்கள்; ஆதலால் இப்போது எனக்கு ஒருவரும் எதிரிகள் இல்லை. ஆகையால், இந்தச் சேனைகளை எல்லாம் வைத்துக் கொண்டு வீணாகச் செலவு பண்ணுவானேன்? அவர்களை எல்லாந் தள்ளிப் போட்டுப் பொக்கசத்தை[214] நிரப்புவாய்," என்றான். மந்திரி, "இது நல்ல யோசனை அன்று, நாஞ் சேனைகளைத் தள்ளின சமயம் பார்த்துப் பகையாளிகள் சண்டைக்கு வந்தால் அப்போது நமக்குக்[181] கெடுதி வரும்; ஆதலாற் சேனைகளைக் கை விடல் ஆகாது," என்றான். இராசன், "சேனை வேண்டிய போது வைத்துக்[268] கொள்ளலாம், பணம் மாத்திரம் இருந்தால் எந்தக் காரியமுங் கை கூடும்," என்றான். மந்திரி, "பணச் செலவு பண்ணினாலும் நமக்கு வேண்டிய போது சேனைகள் கிடைக்க மாட்டாது; அது எப்படி என்றால், இராத்திரி காலத்தில் ஈகளைக் கூட்ட[117] வேண்டும் என்று வெல்லங்களைக் குவித்து வைத்து, ஈகளைப் பிரார்த்தித்தாலும் அதில் வந்து மொய்க்குமா? ஆதலாற் சேனைகளை இன்னுங் கூட்டி வைத்தால் சத்துருக்கள் பயந்து அடங்கி இருப்

A high form, much used by Brahmans; who pronounce it அன்னு: அல் + து = அல்ல.

பார்கள்," என்றான். அரசன், "இது மெய்தான்" என்று மந்திரி சொற்படி நடந்தான்.

---

## 20. THE MEDITATIVE HORSE-KEEPER.

ஓர் அரசன் தன் பட்டத்துக் குதிரை இறந்து போனதைக் குறித்துத் துயரப் படும் போது பிரதானி யானவன், "ஐயா!
Arabia. என்னை அனுப்பினால் அரபி தேசத்துக்குப் போய்,
நல்ல குதிரை கொண்டு வருகிறேன்" என்றான்.
அப்படியே அதற்கு வேண்டிய திரவியத்தைக் [269] கொடுத்து அனுப்பினான். அவன் தேசத்துக்குப் போய் இராசனிடத்தில் முன்
Not com. னிருந்த பரியிலும் [196] அதிவேகமுங் குணமும் உள்
Not com. ளதாய்ப் பதினாயிரம் ரூபாய்க்கு ஓர் அசுவம்
=திரும்பி. வாங்கிக் கொண்டு, தன் தேசத்தை நோக்கி மீண்டு
=இரா. வருகையில், இடை வழியில் ஓர் சத்திரத்தில்,
இரவு தங்கி இருக்கும் போது அவ்விடந் திரு
"Because that place was one where there was fear of robbers." டர்பயமுள்ள தாகையாற் குதிரைக்காரனைப் பா
ர்த்து, "இங்கே சோர பயம் உண்டு, ஆதலால் நீ தூங்காமல் விழித்து இருக்க வேண்டும்; அதற்காக யாதொரு பெரிய காரியத்தைக் குறித்து ஆராய்ச்சி பண்ணிக் கொண்டி [190] ருந்தாய் ஆனால் [98] தூக்கம் வராது" என்று உபாயமுஞ் சொல்லிக் கொடுத்து விட்டுப், படுத்துக் கொண்டான். மறுபடி பிரதானி இரண்டாஞ் [175] சாமத்தில் விழித்துக் கொண்டு, "குதி
ரைக்காரா! விழித்து இருக்கிறையா? வேன்
=இருக்கிறாய. =என்ன. னா?" என, "ஆம், ஐயா!" என்றான். "என்ன
விழித்திருக்கிறாய் is end. ஆலோசித்துக் கொண்டு?" என்றான். "இந்த
வானத்தில் இவ்வளவு நட்சத்திரங்களைப் பண்ணிப் பதித்தவன் ஆர், என்று ஆலோசிக்கிறேன்," என,—"நல்

லது, அப்படியே விழித்து இரு!" என்று உறங்கிப் போய், மூன்றாஞ் சாமத்தில் அப்படியே குதிரைக் காரனைக் கூவி, "இப்போது என்ன எண்ணுகிறாய்?" என, "ஐயா! இக்கடற் றோண்டினவன் யாரோ என்றும், அந்த மண்ணை எங்கே போட்டானோ?" என்றும் ஆராய்கிறேன்" என, "நல்லது, சாக்கிரதையாய் இரு!" என்று, படுத்துக் கொள்ளுகையில், மீண்டு குதிரைக்காரனுஞ் சற்று நேரந் தன்னை மறந்து தூங்கி, விழித்துக் கோள்ளுதற்குள்ளே,[251] ஓர் திருடன் அந்தக் குதிரையைக் கொண்டு போய் விட்டான். பிறகு எசமானன் விழித்துக், "குதிரைக் காரா! எதைக் குறித்து நினைக்கிறாய்?" என்றான். குதிரைக் காரன் "ஐயா! குதிரை தான் களவு போய் விட்டதே; இருக்கிற சேணை முதலிய சாமானை நீர் எடுத்துக் கொண்டு வருவீரோ, அல்லது நானே எடுக்க வேண்டுமோ,[205] என்று ஆலோசிக்கிறேன்," என்றான். பிரதானி "ஐயோ! குதிரை போய் விட்டதா?" என்று ஓடி வந்து, பார்த்து, "மோசம் போனேனே!"[258] எனத் துக்கித்துக் கொண்டு அரசனிடத்திற்குப்[251] போய் விட்டான்.

ல் + த = ற்ற.

App. xl.

கொள்ளுகிறதற்கு. 94. 148.

Prop. சேணம். com. pronounced ஜீனி.

---

## 21. WHOSE FACE IS UNLUCKY?

சகதிலகம் என்னும் பட்டணத்திற்கு அரசன் ஒருநாள் அதிகாலையில் எழுந்து, தன் அரமனைக்குப் பின்னே இருக்கும் இராச வீதியை எட்டிப் பார்த்த பொழுது, அங்கே கடைகளிலே சிந்திக்கிடக்கும் பண்டங்களைப் பொறுக்கிக் கொண்டிருந்த ஒரு சின்ன வேளாளப் பிள்ளையை அந்த அரசன் கண்டு, மறுபடி தலையை

=ORNAMENT IN THE BROW OF THE WORLD.

உள்ளே வாங்குகிற போது வாசற்படி தலையில் இடித்துக்,

= appeared.
காலத்து = காலத்தில். co. 248. (1.)
not com.

கொஞ்சம் இரத்தங் கண்டது. "இன்று நாம் உதய காலத் தெழுந்து இவன் முகத்தைப் பார்த்ததால் நமது தலையிற் காயம் பட்டு, உதிரங் கண்டது. இப்படியே நாடோறும் [App. xi. p. 204.] இவன் முகத்தை எத்தனை மனிதர் பார்ப்பார்களோ, அவர்களுக்கு எல்லாம் என்னென்ன பொல்லாங்கு நேரிடாது? ஆகையால் வெகு சனவிரோதியைப் பூமியில் வைப்பது தருமம் அல்ல," என்று அங்கிருந்த படியே கொலையாளிகளை அழைப்பித்து, "இந்தப் பையனைக் கொண்டுபோய் வெட்டிப் போட்டு வாருங்கள்" என்றான். அவர்கள் வந்து இந்தச் சிறுபிள்ளையைப் பிடித்துக் கொண்டு, "உன் முகத்தில் விழித்ததினால் இராசாவுக்கு வாசற் படி தலையில் அடித்து உதிரங்கண்டதினால் உன்னைச் சிரச்சேதம் பண்ணச் சொன்னார், வா!" என்று இழுத்தார்கள். அதைக் கேட்டு இந்தப் பையன், "நான் இராசாவைக் கண்டு ஒரு வார்த்தை சொன்ன பிறகு வெட்டிப் போடுங்கள்," என்று அவர்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். அவர்கள் அதை இராசாவுக்கு அறிவித்து, அவர் [248.] உத்தரவினால் இவனை இராசன்முன் [251.] கொண்டு போய் விட்டார்கள். இந்தப் பையன் இராசாவைப் பார்த்து, வணங்கி, "ஓ! மகா ராசனே! இப்போ உமக்குண்டாகிய அற்ப உபத்திரம் இன்றைக்கு முதல் என் முகத்தில் விழித்ததினாலே சம்பவித்தது, என்று என்னை வெட்டிப் போடச் சொன்னீர். தூங்கி எழுந்து முதல் உமது திருமுகத்தைப் பார்த்த எனக்கு இப்படித் தலை போகத் தக்க பொல்லாங்கு நேரிட்டதே; இதற்கென்ன தீர்ப்பு? என்று கேட்டுக் கொண்டு, பிறகு என் தலை கொடுக்கலாம் என்று வந்தேன்," என்று சொன்னான். அதைக் கேட்டு [103.] இராசா திடுக்கிட்டு, வெட்கப்பட்டு, அவனைத் தனக்

குள்ளே மெச்சிக் கொண்டு, அவனைத் தன் அரண்மனையில் வைத்துக் கொண்டு, சகல கலையும் படிப்பித்துப், பின்பு தனக்கு மந்திரியாக வைத்துக் கொண்டான்.



## 22. THE WHOLE VILLAGERS CUT OFF THEIR NOSES.

R. அறு = cut. அறை = a segment. "One whose nose is cut off."

= *Did as follows.*

ஓர் ஊரில் இருந்த மூக்கறையன் ஒருவன் தன்னைப் பார்க்கும் பலரும் நகைக்கிறதை ஆற்றக் கூடாமல், தனக்குள் ஓர் உபாயத்தை எண்ணிச் செய்ததாவது: ஒவ்வொரு[177] வேளையில், இருந்தாற்[227] போல் இருந்து, வானத்தை ஏறெடுத்துப் பார்த்து, "லோக கர்த்தாவே! உம்மைச் சிநேகிக்கிறேன், வாழ்த்துகிறேன், வணங்குகிறேன். இப்பாவமான பிரபஞ்சத்திற் கிடந்து வருந்துகிற இந்தக் கொடியோனுக்கு[184] உமது திருக் கைக் கொடுத்தருளும்[264]! உமது திருமேனிப் பிரகாசத்தை எதற்கு ஒப்பிடு[263]வேன்?" என்று இவ்வாறு கண்ணீர் ததும்ப, உடம்பு சிலிர்த்து நடுங்க, வாய் குழறிச் சொல்லிப், பின்பு சூழ்ந்து நிற்கிற சனங்களை நோக்கிச்[230], "சனங்களே! இதோ, நிற்கிற கடவுளைப் பாருங்களேன்[214]! ஐயோ, வீணாக நின்று காலங்கழிக்கிறீர்களே!" என்று இரங்குவான்[269]. இதைச் சிலர் நம்பி, "ஐயா! எங்கள் கண்களுக்குஞ் சுவாமியைத் தெரிவிக்க வேண்டும்," என்று காலில்[245] வீழ்ந்து, இரந்த போது மூக்கறையன், "சுவாமி எளிதிற் தெரிவாரோ? என்னைப் போல் மூக்கில்லாமல்[202] இருந்தாற் காணலாம்," என்று சொல்ல, அவர்கள் அப்படி மூக்கறுத்துக் கொண்ட பிறகுஞ் சுவாமி தெரியாமல், "இவன் மோசஞ் செய்தான்" எனத்[92] தெரிந்து, மூக்கிருக்கிறவர்கள் தங்களையும் நகைப்பார்களே என்று நினைத்துச், "சுவாமி எங்கள் கண்ணுக்கு நன்றாகத் தெரிகிறார். கொஞ்ச

Co. விழுந்து.

நஷ்டத்தினால் எவ்வளவு பெரிய இலாபம் பெற்றோம்! என்ன ஆனந்தத்தை அனுபவிக்கிறோம்![199]" என்று சொல்லிக் கொண்டார்கள்.[259] இதை நம்பி அவ்வூரார்[180] எல்லாருஞ் சில நாளையில் மூக்கறுத்துக் கொண்டார்கள்.

ஆதலாற் கெட்ட மார்க்கத்தில் இருக்கிற ஒருவன் மற்றவர்களையும் அதில் இழுக்கப் பிரயாசப்படுவான்.



## 23. HOW TO MAKE A PEOPLE CONTENTED AND PROSPEROUS.

ஓர் இராசன் பொருளாசையினாலே குடிகளிடத்தில் விளைந்த நன்செய், புன்செய் முதலானவைக்கு அதிக மேல்வாரமும்[93], பட்டுப் போன சாவிக்கும், உழுது[60] விட்ட புழுதிக்கும், பலன் கொடாத செடி மரங்களுக்குந் தீர்வையும் விதித்துப், படுதண்டமாகப் பணம் வசூல் பண்ணியும், வர வரப்[274. (15.)] பணங் குறைவதனாற் குடிகளை அதிக தண்டனை செய்தும், இப்படிக் கொடுங் கோல்[131. (e.)] செய்து கொண்டிருந்தான். ஆதலால் தேசத்துக் குடித்தனம் நொந்து[58], குடிக்கக் கஞ்சியும் உடுக்கக் கந்தையும் அற்று, இராசாவின் மேல் வெறுப்பு அடைந்து, பரதேசத்து இராசாவின் மேல் விருப்பமாயிருந்தது[137]. இதை மந்திரி அறிந்து, இதினால் நம்முடைய இராசனுக்குப் பொல்லாங்கு நேரிடும் என்றும், இராசா அஞ்ஞானத்தால் ஒரு பொல்லாங்கில் நடக்கும் போது தன் பிராண நஷ்டத்தையும் பாராமல் அவனைத் தடுத்துச் சொல்லுகிறவன் அல்லோ[193] மந்திரி என்றும் ஆலோசித்து, இராசாவுக்குச் சொன்னதாவது: "ஐயா! உருண்டு ஓடுகிற குண்டுங்[56. (III.)] கன் மேல் வைத்த பொருளும், குடி சமாதானம் இல்லாத இராசன் தலை மேல் வைத்த முடியும் நில்லாது[110]. ஆதலால், உம்முடைய துரைத்தனம் குடிகளுக்கு அசமாதானமாய்

அதிகம்.

For கல்.

இருக்கையால் இந்த இராச்சியத்தை உடனே இழந்து போவீர்; ஏரி உடைகிறதற்கு முன்னே அணைபோட வேண்டும்," என்று இவ்வாறு பல விதமாய்ச் சொன்னான். இராசன், "ஆனால் குடி ராசி எப்படி வரும்?" என்றான். "இளைத்த குடிகளுக்கு வாரக்கம் கொடுத்து, உழவு செய்து, பயிரிடுவித்து, விளைந்ததற்குத்தக்கதாக இறை வாங்கி, எளியார் வலியாரை ஒப்ப எண்ணிப், பெருந் [157. (c.)] தண்டனையும் அதிக [184.] அபராதமும் [170.] நீக்கி, இப்படிக் காப்பாற்றினால் குடி ராசியும் உமக்கு இலாபமும் உண்டாம். முன்னே தானே எரு தழைகள் போட்டுக், களை களைந்து, தண்ணீர் இறைத்து, வேலி இட்டுக் காப்பாற்றின தோட்டக்காரன் அல்லோ பிறகு நல்ல பலன்களை அனுபவிப்பான்," என்றான். இராசா இவை எல்லாங் கேட்டு, மெய் என்று அறிந்து, அப்படியே செய்யத்தொடங்கினான். ஆதலால், நல்ல அமைச்சு இல்லாத அரசு விழி இன்றி [202.] வழிச் செல்வோன் [88.] போல் ஆம்.

Co. 226.

உண்டு + ஆகும்.

அமைச்சு = மந்திரி.
A high form for
செல்பவன்.

---

**24. ARE YOU POLITE TO ME OR TO MY FINE CLOTHES?**

ஒரு கல்விமான் ஒரு பட்டணத்துக்குப் போனபோது அவ்விடத்திற் தேசாந்தரிகளுக்கு விருந்திடுகிற உதார முள்ள ஒருவனைக் குறித்துக் கேள்விப் பட்டான். அதற்கு மேற் தன்னுடைய பழந் துணியுடனே அவனிடத்திற்குப் போய்க் காத்திருந்தான். அவ்வுதாரி இவனுக்கொரு உதவியுஞ் செய்யாதிருந்ததும் அன்றி [202.], உட்காரவும் இடங் கொடுக்க வில்லை. ஆதலால் அந்த எழுத்து வாசனை உள்ளவன் கலக்கப் பட்டுப் போய் விட்டு, மறு நாள் ஓர் சிறப்பான உடுப்பை இரவலாக வாங்கி, அதை உடுத்திக் கொண்டு, அங்கே மறுபடியும் போனான்.

அவன் இவனைக் கண்டவுடனே மரியாதை பண்ணித், தன்
அருகில் உட்கார்த்தி, வார்த்தை சொல்லிக் கொண்டிருந்து,
பின்பு வந்தவனோடு போசனத்தில் உட்கார்ந்த உடனே இந்தக்
கல்விமான் ஒரு கவளத்தை எடுத்துத் தன் உடுப்பின் மேலே
போட்டான். அதை வீட்டுக்காரன் பார்த்து, "நீ ஏன் இதை
இப்படிச் செய்தாய்?" என, அப்போது அவன் சொன்னது:
"நான் நேற்றுப் பழந்துணிகளுடனே வந்த போது யாதொரு
126.
சாப்பாடுங் கிடைக்கவில்லை; இப்போது நன்றாய் உடுத்திக்
கொண்டு வந்தபடியால், இதோ! நேற்றியான போசனங் கிடைத்
தது; ஆதலால், இந்தச் சாப்பாடு என் துணிக்கு அல்லது எனக்
205.
குப்போட்டதா?" என்று பிரதியுத்தரவு கொடுத்தான். அப்
போது அந்த வீட்டுக்காரன் தனக்குள்ளே வெட்கப்பட்டுப்
போக்குச் சொல்லிக் கொண்டான்.



## 25. WHICH IS THE MOTHER OF THE CHILD.

ஒருவன் இரண்டு பெண்சாதிகளைக் கலியாணம் பண்ணிக்
கொண்டிருந்தான். அவன் இறந்து போகிற போது பெண்
சாதிகள் இரண்டு பேர்க்கும் இரண்டு குழந்தைகள் இருந்து,
பிறகு ஒரு குழந்தை இறந்து போச்சுது; மற்றை ஒரு குழந்
123.
தையை இருவரும் பால் கொடுத்துப் பேதம் இல்லாமல் வளர்த்
துக் கொண்டு வந்தார்கள். அப்படி இருக்கையில் இரண்டு
பெண்சாதிகளுக்கும் விரோதம் வந்த படியினாலே அந்தப் பிள்
ளையைக் குறித்து இரண்டு பேரும் "நான் பெற்ற பிள்ளை!"
"நான் பெற்ற பிள்ளை!" என்று சண்டை போட்டுப் பிறகு
நீதிக்காரனிடத்தில் போனார்கள். நீதிக்காரனுக்குப் பெற்றவன்
181.
இன்னாள் என்று சாட்சிகளால் இருசு ஆகாததினால் ஓர் உபாயஞ்
274. (16.)

செய்தான். என்னென்றால், அவர்களைப் பார்த்து, "இந்தப் பிள்ளையை இரண்டாக வெட்டி உங்கள் இரண்டு பேர்க்கும் கொடுக்கிறேன்" என்றான். அப்போது ஒருத்தி, "நல்லது என்று சம்மதித்தாள்." மற்றொருத்தி, "ஐயா! பிள்ளையை வெட்டாதேயும்! எனக்கு அந்தப் பிள்ளை வேண்டாம். அவளுக்கே இருக்கட்டும்," என்று அழுது நடுங்கினாள். நீதிக்காரன் "இவளே[140] பிள்ளைக்குடையவள்[185]" என்று தீர்ப்புப் பண்ணிப் பொய் சொன்னவளைத் தண்டித்தான்.

= to the two *of you.*

---

## 26. THE LEARNED BUT FOOLISH BROTHERS.

நாலுபேர் சகோதரர்கள் பரதேசத்திற் போய், ஓர் உபாத்தியாயரிடத்திற் சகல சாத்திரங்களும் படித்தார்கள். ஆனால் அவர்களில் நாலாஞ் சகோதரன் நன்றாய்ப் படிக்க வில்லை. அப்படி இருக்கையில்[175] ஒரு நாள் அவர்கள் நாலுபேரும்[113] கூடி யோசித்தது[144] என்ன வென்றால், முதற் சகோதரன் சொன்னது: "நாம் இனி மேற்றூரதேசத்தில் இருக்கிற இராசாவினிடத்திற்குப் போய், நம்முடைய வல்லமையைக் காண்பித்ததனால் வருகிற வெகுமானத்தை நாலு பேரும் பங்கிட்டுக் கொண்டு, பிறகு நம்முடைய வீட்டுக்குப் போவோம்"[263] என்றான். அவர்களில் இரண்டாஞ் சகோதரன், "நாம் பிரயாசப் பட்டுப் படித்த வித்தையினால் வருகிற பணத்தை நாம் மூன்று பெயரும் பங்கிட்டுக் கொள்ள வேண்டும். நாலாஞ் சகோதரன் படியாத முட்டாள்; ஆகையால், அவனுக்குப் பங்கு கொடுக்கல் ஆகாது" என்றான். மூன்றாஞ் சகோதரன், "சகோதரர்களே! நம்முடைய நாலாஞ் சகோதரன் படியாதவன், ஆனாலும் லோக காரியத்திற் சமர்த்தனாய் இருக்கிறான். லோககாரியந் தெரிந்தவர்

சாஸ்திரம்.

ல்+த = ற்ற

களால் இராசாக்களுக்குக் காரியம் இருக்கிறது; அதனால், அவர்களை இராசாக்கள் பெருமை பண்ணுகிறார்கள். ஆதலால், அவனையுங் கைவிடாமல், அழைத்துக் கொண்டு போய், அவனுக்கும் பங்கு கொடுப்போம்" என்றான். அப்படியே எல்லாருஞ் சம்மதித்து, நால்வருங் கூடிக் கொண்டு போம் போது ஒரு காட்டில் இறந்து கிடந்த புலியைப் பார்த்துப் படித்த மூவருஞ் சொன்னதாவது: "இறந்தவர்களைப் பிழைப்பிக்கிற [160] வித்தையை இந்தப் புலியினிடத்திற் பரிட்சிப்போம்," என்றார்கள். அப்போது படியாதவன், புலியினிடத்திற் பரிட்சை பண்ணல் ஆகாது, அதற்கு உயிர் வந்தால் அதனாலே நமக்குக் கெடுதி வரும்," என்று தடுத்தான். மூன்றாஞ் சகோதரனும் "அவன் மொழியை நம்ப வேண்டும்," என்றான். மற்றவர்கள் வித்தியா கர்வத்தினாலே, "நீயும் மூடனாய் இருக்கிறாய்; என்ன?" என்று அவர்களை அசட்டை பண்ணிப், புலியை எழுப்பத் தொடங்கினார்கள். இவர்கள் இருவரும் "துஷ்டர்களைக் கண்டால் தூரத்தில் இருக்க வேண்டும், அல்லவோ?" என்று ஓடிப் போய், ஒரு நீண்ட மரத்தின் மேலே ஏறிக் கொண்டார்கள். அவர்கள் அந்தப் புலியை மந்திரத்தினால் எழுப்பின உடனே புலி அவர்களைப் பிடித்துக் கொன்று விட்டது.

S. Comp. = வித்தையினால் உண்டான கர்வம்.



## 27. THE TOO OBEDIENT WIFE.

ஒரு மூடச் சேவகன் தன் மனைவியை நாடோறும் அடித்துக் கொண்டிருக்கையால் அவள், "சற்றுங் குற்றஞ் செய்யாது, நன்மைக்காரணம் இல்லாமல் அடிக்கிற [120. (2.)] இம்மூடனுக்கு நல்ல புத்தி வருவிக்க வேண்டும்" என்று நினைத்துக் கொண்டிருக்கையில், ஒரு நாள் அவன் வழக்கப் படியே அடித்தான். அவள் "நீ எதற்காக இப்படி அடிக்கிறாய்?" என்று கேட்க [169]

= "without rhyme or reason."

Or வழக்கத்தின்படி, according to custom.

அவன், "நான் ஏதாகிலும் ஒன்று சொன்னபடியே செய்யாமையால் அடிக்கிறேன்"[217] என்றான். அவள், "இனிமேல் நீ சொன்னபடியே செய்வேன். அப்படிச் செய்யும் போது என்னை அடியாமற் றிட்டாமற் பட்சமாய் இருக்க வேண்டும்," என்று சத்தியம் பண்ணுவித்துக் கொண்டாள். பின்பு ஒரு நாள் "அடி! அடி! எங்கே[193] போகிறாய்?" என்று அழைத்தான். அவள் ஓடி வந்து, ஒரு தடியால் அவனை அடித்தாள். அவன், "என்ன காரியஞ் செய்தாய்? அடி!" எனப், பின்னும் ஒரு தரம் அவனை அடித்து, "நீ சொன்னபடியே செய்தேன்" என்றாள். மற்றொரு நாள் புருடனுக்குக் கலத்திற் சோறிடும் பொழுதில் அவன், "அடி! தலை மேலே உமி" என்றான். அவள் ஒரு தரம் அடித்துத்[6] தலை மேலே எச்சிலை உமிழ்ந்தாள். பின்னொரு நாள், "இந்தப்பணத்தை வீட்டுக் குள்ளே வை" என, அவள், "மூர்க்கனுடைய பணமே! மூடனுடைய பணமே! மடையனுடைய பணமே!" என்று வைது கொண்டிருந்தாள். பின்பு அவன், "இவை எல்லாம் பார்த்து, அறிந்து, வெட்கப் பட்டுக், கோபத்தை விட்டு, அவளை உபசரித்து, அவள் புத்தி கேட்டு நடந்து, நல்லவன் ஆனான். ஆகையால் அறிவில்லாதவன் பெண்டுகளிடத்திலும் தாழ்வு படுவான்.

Ellipsis of உம் twice.

அடி = 1. பெண்ணே! 2. அடிக்கவேண்டும்.

= புருஷன்.

உமி = 1. நெல்லின் உமி. 2. உமிழ். [Imp.]

Observe the two meanings of வை.



**28. WHO IS RESPONSIBLE FOR THE MISCHIEF CAUSED BY THE CAT?**

நாலு பேர் பங்காகப் பஞ்சுவர்த்தகம் பண்ணினார்கள்; பஞ்சு[136] மூட்டைகளை எலிகள் கடிக்காதிருக்கும் பொருட்டு அவர்கள் ஒரு பூனையை வளர்த்தார்கள்.[137] வளர்க்கும் போது, அதனுடைய நாலு கால்களையும் ஆளுக்கு

For கடியாது.

ஒவ்வொரு காலாகப் [136] பங்கு வைத்துக் கொண்டு, அவனவன் [108.*] தன் தன் பங்காகிய [130] காலுக்குத் தண்டை கொலுசு சதங்கை முதலானதுகளால் அலங்கரித்துச் சிறப்பாக வைத்திருந்தார்கள். அப்படி இருக்கையில் அந்தப் பூனைக்கு ஒரு காலிலே காயம் பட்டது. அந்தக் காலுக்குச் சுதந்தரக்காரன் எண்ணெய்ச்சீலை சுற்றி வைத்தான். அது அடுப்பண்டையிலே [151. (d.)] போன போது அடுப்புத்தீயினால் பற்றிக் கொண்டது. அதனுடனே அந்தப் பூனையானது [151] பஞ்சு மூட்டைகளின்மேல் விழுந்து ஓடிப்போகையால் அம்மூட்டைகள் பற்றிக் கொண்டு வெந்து போய் விட்டதுகள். அதைக் கண்டு எண்ணெய்ச் சீலை சுற்றின கூட்டாளிகையில் [181] மற்றை மூன்று பேரும் தங்களுக்கு அந்த நஷ்டத்தை வாங்கிக் கொடுக்கும் [157] படியாக மரியாதை இராமனிடத்திலே பிரியாது அர்ஜி கொடுத்தார்கள். அந்த நியாயாதிபதி பிரதிவாதியை அழைப்பித்து, விசாரணைசெய்து, அவன் மனம் அறிந்து செய்ததல்லாமையினாலே, வாதிகள் [156] செய்த பிரியாது அநியாயம் என்று அறிந்து, அந்த வாதிகளைப் பார்த்து, "பிரதிவாதி பூனைக்கு எண்ணெய்ச் சீலை சுற்றி வைத்த கால் காயம் உள்ளதாய் [185] இருக்கிற படியால் நடக்கிற தற்கு [94] உதவாதே! காயமில்லாத [133] உங்கள் மூன்று பேர்களுடைய கால்களினாலே நடந்து போகையால் இப்படிப்பட்ட சேதம் வந்தது; ஆகையால், நீங்கள் மூன்று பேருமே பிரதிவாதியினுடைய நஷ்டத்தைக் கொடுக்க வேண்டும்" என்று தீர்ப்புச் செய்தான். வாதிகள் மூன்று பேரும், (யானை தன் தலையிலே தானே மண் போட்டுக் கொள்ளுகிறது போலத்,) தங்களுக்குத் தாங்களே முன் வந்ததோடு பின்னும் நஷ்டந் தேடிக் கொண்டார்கள். திக்கற்றவனுக்குத் [138] தெய்வமே துணை என்கிற பழ

அது + அன் + உடன் + ஏ = *together with it.*

For விட்டன.

The name of a celebrated judge.

அ + அ. Because he had not done it wilfully.

மொழிப் படி அதிக விசனம் அடைந்த பிரதிவாதி தெய்வ சகாயத்தினாலே தன் பட்சந் தீர்ப்பானது கண்டு, அதிக சந்தோஷத்[50]தை அடைந்தான்.

---

## 29. GIVE *what you like.*

For வராகனை.

ஒருவன் தன் மரண காலத்திலே தன்னிடத்தில் இருந்த பதினாயிரம் வராகன்களையும் தனக்குப் பழக்கமுள்ள ஒரு சாவகாரி கையில் கொடுத்து, "என் புத்திரன் பெரியவன் ஆன பின்பு இந்த வராகன்களில் உனக்கு இஷ்டமானதைக் கொடு" என்று சொன்னான். பின்பு சாவகாரி அதுகளைத் தன் வீட்டிலே கொண்டு போய் வைத்திருந்தான். பிள்ளை பெரியவன் ஆன பின்பு சாவகாரியிடத்திற்குப் போய்த், தன் தகப்பன் கொடுத்த பொருளைக் கேட்டான். அதற்குச் சாவகாரியானவன், "உன் தகப்பன் எனக்கு இஷ்டமானதை உனக்குக் கொடுக்கச் சொன்ன படியினாலே, எனக்கு இஷ்டமானது இந்தத் தொகைதான்"[239. (7.)] என்று, ஆயிரம் வராகன் கொடுக்கப் போனான். அந்தப் பிள்ளையாண்டான், "வேண்டாம்!" என்று விசனத்தை அடைந்து, மரியாதை இராமனிடத்திலே போய்ப் பிரியாது பண்ணினான். மரியாதை இராமன் சாவகாரியை அழைப்பித்து விசாரித்து, அவன் வாய்ச்சொல்லைக் கொண்டே "உனக்கு இஷ்டமானது ஒன்பதினாயிரம் வராகன்; ஆகையால், நீ எடுத்துக் கொள்ள நினைத்தாய்; அந்த ஒன்பதினாயிரம் வராகனை இந்தப் பிள்ளைக்குக் கொடுத்து விடு; இந்தப் பிள்ளைக்குக் கொடுக்க நினைத்த உனக்கு இஷ்டம் ஆகாத ஆயிரம் வராகனை நீ எடுத்துக் கொள்," என்று தீர்ப்புப் பண்ணினான். "ஊரார் உடைமைக்குப் பேயாய்ப் பறந்தாலும் வருமோ?" என்கிற பழமொழிப் படியே சாவகாரியினுடைய அதிக ஆசை பயன் படாமற் போயிற்று.

### 30. THE MAN WHO INSISTED UPON HIS STRICT RIGHTS.

ஒரு துலுக்கனிடத்தில் ஒரு வேளாளன் தன் பிள்ளை கலியாணத்திலே ஊர்க்கோலங் காட்ட யானை இரவலாக வாங்கிக்[50] கொண்டு வந்தான். அந்த யானை ஊர்க்கோலம்[50] வந்து கொண்டிருக்கும் போது ஆகஸ்மீகம் ஆகச் செத்துப்[206] போயிற்று. அந்த வேளாளன் உடனே துலுக்கனிடத்திற்குப்போய்த், "தெய்வீகமாக உன்னுடைய யானை செத்துப் போச்சுது, அதற்கு விலையானாலும் பதிலாக யானை யானாலும் உனக்குக் கொடுக்கிறேன்" என்றான். அதற்குத் துலுக்கன், "நீ சொன்ன இரண்டுக்கும் நான் சம்மதிக்கிறதில்லை, என் யானையே எனக்கு வேண்டும் என்று சொல்லிப், பின்பு மரியாதை இராமனிடத்திலே சொல்லிக் கொண்டான். மரியாதை இராமன் பிரதிவாதியை அழைப்பித்துக் கேட்கும் போது அவன் நடந்த உண்மையைச் சொன்னான். மரியாதை இராமன் துலுக்கனைப் பார்த்துத் "தெய்வீகமாக நேரிட்டபடியால் பதிலாக யானையாகிலும் வாங்கிக் கொள்ளு, அல்லது விலையானாலும் வாங்கிக் கொள்" என்று பல விதத்திலுஞ் சமாதானஞ் சொன்னான். அதற்கு அந்த முரட்டுத் துலுக்கன், "இரண்டுக்கும் நான் சம்மதிக்க மாட்டேன். அந்த யானையே எனக்கு வேண்டும், வேறொன்றும் வாங்கேன்"[110] என்று கடவுள் பேராலே ஆணை இட்டான். அதைக் கேட்டு, வேளாளன் கலங்கினான். பின்பு மரியாதை இராமன் ஆலோசித்து, "நீங்கள் நாளையத்தினம் வாருங்கள்" என்று அனுப்பிவிட்டு, இரகசியமாக வேளாளனை அழைப்பித்து, "நாளையத்தினம் நீ வரவேண்டாம்; உன் வீட்டு நடையிலே கதவோரமாகப் பழம் பானைகளை அடுக்கி வைத்துக் கதவைச் சும்மா சாத்தி வைத்துக் கொண்டிரு, துலுக்கன் வந்தவுடனே 'உன்னெதிரி வரவில்லை, ஆகையால் நீ போய்

S. Without any reason.

Co. 207.

Co. 207.

அழைத்துக் கொண்டு வா' என்று அனுப்புவிக்கிறேன்; அவன் அவசரமாக வந்து கதவைத் திறப்பான், அப்போது பானைகளெல்லாம் தெரிந்து போம். பின்பு 'எங்கள் பெரியோர்கள் நாள் முதற்கொண்டு ஆய் வந்த பானைகளை உடைத்துப் போட்டான்[259. (13.)]' என்று அழுது, அயல்வீட்டாருடனே[239.] கூச்சலிட்டுச் சொல்லிக் கொள்ளு. அதற்காக அவன் என்ன சமாதானஞ் சொன்னாலும்[100.], 'என் பானையே எனக்கு வேண்டும்' என்று நீ வந்து பிரியாது பண்ணிக் கொள்" என்று சொல்லி அனுப்பி விட்டான். மறுநாள் அந்தப் படியே[199.] நடந்த பின்பு வேளாளன் வந்து, "வெகு காலமாக ஆய் வந்த என் பானைகளை உடைத்துப் போட்டான். என் பானைகளே எனக்கு வேண்டும்" என்றான். மரியாதை இராமன் அந்தத் துலுக்கனைப் பார்த்து, "நீ இதற்கு என்ன சொல்லுகிறாய்?" என்றான். அதற்குத் துலுக்கன், "யானைக்கும்[242.] பானைக்கும் சரியாய்ப் போச்சுது; போ!" என்றான். கன மூடன் கைப்பொருள் இழப்பான் என்கிறதைத்[82.] துலுக்கனிடத்திலே காட்டினான்.

For அனுப்புகிறேன்.

ஆகிவந்த = which have existed.

---

### 31. HOW LONG WAS THE BOND?

ஒரு குடியானவன் ஒரு செட்டியினிடத்தில் சீட்டெழுதிக் கொடுத்து, நூறு வராகன் கடன் வாங்கி இருந்தான். சில நாள் போன பிற்பாடு செட்டியானவன் கடனைக் கேட்டான். குடியானவன் "நாளைய உதயத்தில் ஊருக்கப்புறங் கொல்லை மேட்டிலே இருப்பேன். அவ்விடத்தில் சீட்டைக் கொண்டு வந்தால் முதலும் வட்டியுங் கொடுத்து விடுகிறேன்" என்று சொன்னான். அந்தப் படியே சீட்டைக் கொண்டு போனான். அதை வாங்கிப் பார்க்கிறது[227.] போலக் கிழித்துப் பக்கத்திலே

முட்டம் போட்டிருக்கிற நெருப்பிலே போட்டு விட்டு, "உனக்
குக் கொடுக்க வேண்டிய தில்லை" என்று, போகச் சொன்னான்.
செட்டி துன்பத்துடன் மரியாதை இராமனிடத்திலே சொல்
லிக் கொண்டான். அவன் குடியானவனை அழைப்பித்து, "ஏன்
சீட்டைக் கிழித்துப் போட்டாய்?" என்று கேட்டான். அதற்கு
அவன், "நான் அவனிடத்தில் கடன் வாங்கினதும் இல்லை, சீட்
210.
டைக் கிழித்ததும் இல்லை," என்று சொன்னான். செட்டியைத்
தனியே அழைத்துச், "சீட்டு எவ்வளவு நீளம்?" என்று நியா
யாதிபதி கேட்டான். "சாணீளம்" என்று சொன்னான். உன்
App. xi. iii. (vi.)
னைக் கேட்கும் போது "முழ நீளஞ் சொல்" என்று சொல்
லி வைத்து, நியாயஸ்தலத்தில் அழைப்பித்துச், செட்டியைப்
261. (3.)
பார்த்து, "நீ பொய் சொல்லாதே, அந்தச் சீட்டு எவ்வளவு
115.
நீளம்?" என்று கேட்டான். "ஐயா! நான் மெய்யாகவே சொல்
லுகிறேன், அது ஒரு முழ நீளச் சீட்டு, அதையுங் கிழித்துப்
போட்டுப், பணமும் வாங்கினதில்லை என்று பொய் சொல்லு
கிறான்" என்றான். குடியானவனுக்குக் கோபம் பிறந்து, அவ
257.
சரத்திலே "ஐயா! உங்களிடத்திலே தானே சாண் சீட்டை
முழச் சீட்டு என்று பொய் சொல்லுகிறானே! மற்ற இடத்திலே
எத்தனை பொய் சொல்ல மாட்டான்?" என்றான். அதைக் கேட்
டு நியாயாதிபதி, "நீ அவனிடத்தில் சீட்டெழுதிக் கொடுத்துக்
கடன் வாங்கா திருந்தாய் ஆகில் சாண் சீட்டென்று எப்படி
98.
அறிந்தாய்?" என்று சொல்லிப், பொய் சொன்னதற்காக அவ
னைத் தண்டித்துச், செட்டிக்கு வட்டியும் முதலுங் கொடுத்து
விடும் படி கட்டளை இட்டான். ஆத்திரக்காரனுக்குப் புத்தி
மட்டு என்பதற்குக் குடியானவன் திருஷ்டாந்தம் ஆனான்.
212. 213.

### 32. THE FEATHERS STICKING IN THE HAIR.

ஒருத்தியினுடைய கோழியை அண்டைவீட்டுக்காரி திருடிக் கொன்று தின்று விட்டாள். அவள் வீட்டுக்குள்ளே போன கோழி மறுபடியும் வாராமற் போனதைப் [50.] பார்த்துக் கொண்டிருந்த சொந்தக்காரி அந்தத் திருடியினிடத்திற்குப் போய், "என் கோழி உன் வீட்டுக்குள்ளே வந்ததே; அது எதோ?" என்று கேட்க, அவள், "நான் பார்க்கவே [113.] இல்லை," என்று சாதித்தபடியால் மரியாதை இராமனிடத்திற்குப் போய்ப் பிரியாது செய்தாள்.

எ added to the infin. = I *have never seen it at all.*

அந்தத் திருடியை அழைப்பித்துக் கேட்டபோது, "நான் அந்தக் கோழியைப் பார்க்கவே இல்லை," என்று சாதித்தாள். நியாயாதிபதி சாட்சி இல்லாமையினாலே அவ்விரண்டு பேருக்கும் வீட்டிற்குப் போக உத்தரவு கொடுத்து விட்டுக், கொஞ்சந் தூரத்திலே போகிற போது கிட்ட இருக்கிறவர்களைப் பார்த்து, "ஒரு ஸ்திரியானவள் [170.] கோழியைத் திருடித் தின்று விட்டு, அதன் மயிரையுந் தலையிலே வைத்துக் கொண்டு, இந்தச் சபையிலே நின்று, 'நான் அறியேன்' [112.] என்று சாதிந்து விட்டுப் போகிறாளே. அவளுடைய தைரியத்தைப் பார்த்தீர்களா?" என்று அவளுக்குக் கேட்கும் படியாகச் சொன்னான்.

= *For her to hear.*

அந்தத் திருடி இந்தச் சொல் தன் காதிலே விழுந்த மாத்திரத்திலே கையினாலே மெள்ளத் தன் கொண்டையைத் தடவிப் பார்த்தாள். அதைக் கண்டு, நியாயாதிபதி அந்தத் திருடியைப் பிடித்துக் கொண்டு வரச் சொல்லி, அவள் வாயைக் கொண்டே திருட்டை வெளிப் படுத்தி, அதற்குத் தகுந்த அபராதம் [239.] வாங்கிக், கோழிக்காரிக்குக் கோழி பதிலுக்குக் [244.] கொடுக்கும் படி உத்தரவு செய்தான். பொய் நின்று மெய்யை வெல்லுமா? என்றதை அத்திருடி அன்றைக்குத் [App. I.] தான் நிஜம் என்று நம்பினாள்.

### 33. THE FIRST TRIAL OF THE RIVAL MINISTERS.

A celebrated minister.

ஒரு நாள் இராயர் பெண்சாதி அப்பாஜி உத்தியோகத்திற்கு [50] மற்றொருவனைக் கொண்டு [50] வந்து விட்டு, இராயருக்குச் சிபாரிசு செய்தாள். இராயர் "அப்பாஜி வல்லமை இவனுக் குண்டா?" என்று கேட்டார். அதற்கு அவள் "அதிகமாகவே இருக்கலாம் என்று நினைக்கிறேன்" என்றாள். "[104] ஆனால் பரீட்சை செய்வோம்," என்று சொல்லி, அவனுக்குப் [99] போகும்படியாக உத்தரவு கொடுத்தார். பின்பு ஒரு நாள் இராத்திரி அந்தப்புரத்திலே இராயர் குழந்தை அவர் மார்பிலும் முகத்திலும் காறி உமிழ்ந்து, கால்களால் உதைத்து, விளையாடிக் கொண்டிருந்தது. சூரியோதயம் ஆன பின்பு இராயர் அப்பாஜி உத்தியோகத்திற்கு வந்த மனுஷனை அழைப்பித்து, அவனைப் பார்த்து, "இராத்திரி ஒருவன் வந்து என் முகத்திலும் மார்பிலும் காறி உமிழ்ந்து, காலால் உதைத்தான். அவனுக்கு என்ன செய்யலாம்?" என்றார். அவன், "உலகத்துக்கு எல்லாம் தலைவன் ஆயிருக்கிற உங்களை இப்படி அலட்சியம் செய்தவன் வாயில் ஈயத்தை உருக்கி வார்த்துக், கால்களை வெட்டி விட வேண்டும்" என்றான். அவனை அப்புறம் போகச் சொல்லி, அப்பாஜியை அழைப்பித்து, முன் அவனைக் கேட்ட படியே கேட்டார். அதற்கு அப்பாஜி, "உங்களை உதைத்த பாதம் எதுவோ, அதற்குப் பொற் சதங்கையும் தண்டையும் போட்டு, [217] உங்கள் மேலே உமிழ்ந்த வாய் எதுவோ அதனை முத்தம் இட்டுக் கொள்ள வேண்டும்" என்றான். அதன் பின்பு இராயர், "நீ சிபாரிசு செய்த மனுஷனை அப்பாஜியிலும் வல்லவன் என்று புகழ்ந்தாயே. இவ்விருவர் [196] விவேகத்தையும் பார்த்தாயா?" என்று கேட்டார். அதற்கு அவள் "ஒரு பரீட்சையிலே தானே எப்படி நிச்சயிக்கலாம்?" என்றாள்.

S. = Dishonour.

### 34. THE THREE IMAGES.

The *Pâdishâh.* of Delhi.

A rather disdainful imperative = அனுப்பவேண்டும்.

கரம் + சரணம் + ஆதி. A sans : comp.

Lit. *in the measure of* = when.

Not com. Sans. = *middling*

Not com. S. = *lowest.*

டில்லி பாச்சா அப்பாஜி வல்லமையை அறிதற் பொருட்டு,[157] ஒரே மாதிரியான மூன்று விக்கிரகங்களையும், "இவைகளிலே எதைப் போலிருக்கிறவன் உத்தமன், எதைப் போலிருக்கிறவன் மத்திமன், எதைப் போலிருக்கிறவன் அதமன், என்று பரீட்சித்து, அந்தந்த விக்கிரகத்தின்[227] மேலே எழுதி அனுப்புகிறது," என்று எழுதிய ஒரு தாக்கிதையும் இராயருக்கு அனுப்பினான். இராயர் அந்த நிருபத்தை வாசித்துப் பார்த்துச், சபையாருக் கெல்லாம் அந்த விக்கிரகங்களைக் காண்பித்துக், குணகுணங்களைச் சோதிக்கச் சொன்னார். மூன்றும் ஒரே மாதிரியாக இருக்கிற படியால் அவைகளிற் பேதங் கண்டு பிடிக்க மாட்டாமல் மயங்கினார்கள். அப்பாஜி அந்த விக்கிரகங்களுடைய கரசரணாதி அவயவங்களை எல்லாம் உற்றுப் பார்த்துக், காதுகளிலே சிறு துளைகள் இருக்கிறதை அறிந்து, மெல்லிய ஈர்க்கை அத்துளைகளில் நுழைத்துப் பார்த்தான். நுழைத்துப் பார்க்கும் அளவில், ஒன்றுக்கு வாய் வழியாகப் புறப்பட்டது; மற்றொன்றுக்கு மற்றொரு காதின் வழியாகப் புறப்பட்டது; வேறொன்றுக்கு வெளிப் படாமல் உள்ளே போய் விட்டது. உள்ளே போய் விட்டதைப் போலக் கேட்ட சமாசாரத்தை உள் அடக்குகிறவன் உத்தமன் என்றும், மற்றொரு காதின் வழியாகச் சென்றதை போல்த் தான் கேட்ட செய்தியை மற்றொரு காதின் வழியாகச் செலுத்துகிறவன் மத்திமன் என்றும்; வாயின் வழியாகப் புறப்பட்டதைப் போலத் தான் கேட்ட சங்கதியை அடக்காமல் வெளியிலே கொட்டி விடுகிறவன் அதமன் என்றும் நிச்சயித்து, அந்தப்படியே அந்தந்தப் பதுமைகளுக்கு மேல் எழுதி அனுப்பிவிடச் சொன்

ஞன். இராயர் அதிக சந்தோஷத்தை அடைந்து, பாச்சா விடத்திற்கு அனுப்பி விட்டார்.

## 35. THE VAGUE WORDS INTERPRETED.

= போய்.
= வயல்.
ஆம் = ஆகும் = *will serve for.*

இராயரும் அப்பாஜியும் ஒரூர் வழியிற் போகிக் கொண்டிருக்கும் போது, ஒருவன் உழுது கொண்டிருந்த கழனியைப்பார்த்து, மூன்று ஸ்திரிகளில் ஒருத்தி "இது முகத்துக்காம்" என்றாள். மற்றொருத்தி "இது வாய்க்காம்[72]" என்றாள். வேறொருத்தி "இது பிள்ளைக்காம்" என்றாள். "இவர்கள் இப்படிச் சொன்னதுகளின் பயன் என்ன?" என்று அப்பாஜியைக் கேட்க அப்பாஜி, "முகத்துக்காம் என்றது மஞ்சள் பயிரிடுதற்கு ஆன நிலம்," என்றும், "வாய்க்காம் என்றது வெற்றிலைக் கொடி நடுகிறதற்கான நிலம்," என்றும், "பிள்ளைக்காம் என்றது தென்னம் பிள்ளை வைத்தற்கான நிலம்," என்றும் சொன்னது ஆம் என்று சொன்னான். அதைக் கேட்டு, இராயர் அந்த ஸ்திரிகள் மூன்று பேரையும் அழைப்பித்து, அவர்கள் வாய்ப் பேச்சையும் விசாரித்து அறிந்து, மிகவும் மனம் மகிழ்ந்தார்.

= வைத்தலுக்கு + ஆன.

## 36. JUDGING OF OTHERS BY ONE'S SELF.

Sometimes க்ஷவரம்.

ஒரு நாள் இராயர் தனக்குச் சவரம் செய்து கொண்டிருக்கிற அம்பட்டனைப் பார்த்து, "இந்தப் பட்டணத்தில் எல்லாரும் சௌக்கியமாக இருக்கிறார்களா?" என்று கேட்க, அதற்கு அவன், "எவ்வளவு எளியவர்களாக (Co. 217.) இருக்கிறவர்களுக்குள்ளேயும் எலுமிச்சங் காய் அளவு பொன்னுக்குக் குறைச்சல் உள்ளவர்கள் ஒருவரும் இல்லை," என்றான். சமீபத்தில் இருந்த அப்பாஜியைப் பார்க்க, அப்பாஜி

சற்று நேரம் யோசித்துப் பார்த்து, அம்பட்டனுக்குத் தெரியாமல் தன்னுடைய ஊழியக்காரன் ஒருவனை விட்டு அவன் அடைப்பத்தைச் சோதித்து, அதில் இருந்த எலுமிச்சங் காய் அள 211. வுபொன்னை எடுத்து, அம்பட்டன் போன பின்பு இராயருக்குக் காண்பித்து, "இதனாலே தான் அவன் தனக்குள்ளது உலகத்திற்கும் உண்டு, தனக்கில்லது உலகத்திற்கும் இல்லை என்று நினைத்து, அப்படிச் சொன்னான் 185. என்று தெரிவித்து, அதைப் பத்திரப்படுத்தி வைத்து, இன்னொரு சவரத்துக்கு அவனை இப்போது கேட்டது போலக் கேட்டால் அப்போது அவன் சொல்லுகிற சங்கதியும் தெரியலாம் என்றான். இராயர் அப்படியே அவனை மறு சவரத்துக்குக் கேட்ட பொழுது, "எப்படிப் பட்ட மகா ராஜருக்குள்ளேயும் மேல் டம்பமே அல்லாமல், எலுமிச்சங் காய் அளவு பொன்னுடையவர்கள் ஒருவரும் இல்லை என் Co. 250. றான். பின்பு இராயர் அப்பாஜியைப் பார்த்து, "உன்னைப் போலும் விவேகம் உள்ள மந்திரி எந்தத் தேசத்திலுங் கிடைப்பது மிகவும் அரிது" என்று மெச்சி, அம்பட்டனுக்கு அவன் பொன்னைக் கொடுத்து விட்டார்.

= இல்லாதது.

Here used for *great* people.



## 37. THE UNPRACTICAL PEDANTS.

வட தேசத்திலே பத்து வயது முதலாக முப்பது வயது வரைக்கும் தர்க்க சாஸ்திரம் ஒன்றையே படித்த 211. 212. ஒரு தர்க்கிகனும், வியாகரண சாஸ்திரம் ஒன்றையே கற்ற ஒரு வையாகரணியும், பாத சாஸ்திரம் ஒன்றையே அப்பியாசித்த ஒரு பாடகனும், ஜோதி சாஸ்திரம் ஒன்றையே வாசித்த ஒரு ஜோஷ்யனும், வைத்திய சாஸ்திரம் ஒன்றையே ஆராய்ந்த ஒரு வைத்தியனும், ஆகிய இவ்வைந்து பேரும்

= Logician. Not com.

= Grammarian. Not com.

= Astrologer. Not com.

கூடிக் கொண்டு தேசாந்தரம் போய்ப் பணம் சம்பாதித்துக் கலியாணம் பண்ணிக் கொள்ள ஆலோசிக்கும் போது, வேலூரில் இராயர் வித்துவான்களுக்கு வேண்டிய படி கொடுக்கிறார், என்று அவனைக் காணும் படியாக, அதுவரைக்கும் துணை கூட்டிக் கொண்டு வந்து, துணையாக வந்தவர்களை அனுப்பி விட்டு, இராயருடைய சபைக்குப் போய், அவனவன் தன் தன் வித்தையின் வல்லபத்தைக் காண்பித்தார்கள். இராயர் அப்பாஜியைப் பார்த்து, "இவர்கள் மிகவும் கெட்டிக்காரர்கள்" என்று புகழ்ந்தார். அதற்கு அப்பாஜி, "இவர்கள் வித்தையிலே எவ்வளவு கெட்டிக்காரர்களோ அவ்வளவு லௌகிக [213] காரியங்களிலே மூடர்களாய் இருக்கலாம் என்று நினைக்கிறேன்" என்றான். இராயர் அந்த மூடத்தனத்தை எனக்குக் காட்ட வேண்டும் என்று கேட்க, அதற்கு அப்பாஜி, "அப்படியே காண்பிக்கிறேன்; இன்றைக்கு இவர்களைச் சாப்பிட்டு வரும்படி அனுப்பி வையுங்கள்," என்றான். அப்படியே இராயர் அனுப்பிவிட்டார். பின்பு அப்பாஜி, அவர்களை அறியாமல் நடக்கிற காரியத்தைப் பார்த்து வரச் சொல்லிச் சில [122] சேவகரை அனுப்பினான். அவ்வைந்து பேர்களுக்குள்ளே தர்க்கிகன் நெய்க்குப் போய், ஒரு தொன்னையிலே வாங்கிக் கொண்டு வரும் போது, கையிலே இருக்கிற நெய்த் தொன்னையைப் பார்த்து, "நெய்க்குத் தொன்னை ஆதாரமோ? தொன்னைக்கு நெய் ஆதாரமோ?" என்று தர்க்க யுக்திகளைக் கொண்டு, நெடு நேரம் யோசித்துப் பார்த்து, சந்தேகந் தீராமையால், தொன்னையைக் கவிழ்க்க, நெய் முழுதும் ஒழுகிப் போனதைக் கண்டு, நெய்க்குத் தொன்னையே ஆதாரம் என்று நிச்சயித்துக் கொண்டு வந்து சேர்ந்தான். வியாகரண வித்துவான் தயிர் வாங்கப் போய், ஓர் இடைச்சி "தயிரோ!" என்று கடைசி ஓகாரத்தைப்

Vellore = The town of the Javelin.

= Scientific rules.

பத்து மாத்திரை அளவாக நீட்டிக் கூவுகிறதைக் கேட்டு, "இந்த இரண்டு மாத்திரை உள்ள ஓகாரத்துக்கு அதிக மாத்திரைகொடுத்து வியாகரணத்துக்கு விரோதமாக உச்சரிக்கிறாயே! பைத்தியக்காரி!" என்று நெடு நேரம் அவளுடனே சண்டைபோட்டுக், கோபித்துக் கொண்டு, தயிர் வாங்காமல் வந்தான். பாடகன் உலையில் அரிசியைக் கழுவிப் போட்டு, அது தள தள[273] வென்று கொதிக்கிற ஓசையைக் கேட்டு, அதற்குச் சரியாகத் தாளம் போட்டு, அத்தாளத்திற்கு ஒத்து[244] வாராமையினாலே கோபங் கொண்டு, சோற்றுப்[248] பானையை உடைத்து விட்டான். ஜோதிட சாஸ்திரி இலை பறிக்கப் போய்ப் பாதி மரத்திலே ஏறும் போது கெவுளி சொன்னதைக் கேட்டு, ஏறுதற்கும்[157] இறங்குதற்கும் தடையாய் இருக்கிறதை அறிந்து, வெகு நேரம் அங்கே தானே இருந்து, பின்பு சும்மா வந்து விட்டான். வைத்தியன் கறி காய் வாங்கிக் கொண்டு வரப் போய், தன்னுடைய வைத்திய நூற்படி அந்தந்தக் கறிகாய்களில் இருக்கிற தோஷத்தை அறிந்து, அவைகளை எல்லாந் தள்ளி விட்டு, வெறுங் கையனாய்[180] வந்து விட்டான்.

Ellip. of உம்.

இந்தச் சமாசாரம் எல்லாம் தான் அனுப்பிய மனுஷரால் அறிந்து, அப்பாஜி இராயரைக் கொண்டு சேவகரை விட்டு அவ்வைந்து பேரையும் அழைப்பித்து விசாரிக்கும் அளவில், நடந்த சங்கதிகளை எல்லாம் அவர்கள் சொல்லக் கேட்டு, இராயர் ஆச்சரியப் பட்டு, அப்பாஜியைப் புகழ்ந்து கொண்டாடினார்.

= when



### 38. HOW RÂMA KISHNAN BECAME A COURT JESTER.

வட தேசத்திலே தென்னாலு என்கிற ஊரிலே இராமன் என்று ஒரு பிராமணப் பிள்ளை பிறந்திருந்தான். அவனை ஒரு

நாள் வீதியிலே கண்ட ஒரு சன்னியாசி இவனுடைய ரூபத்தையும் குணாதிசயத்தையுங் கண்டு, ஒரு மந்திரத்தை உபதேசம் பண்ணி, "இந்த மந்திரத்தை மூன்று கோடி* ஒரு ராத்திரியில் காளி கோவிலிலே போய்ச் செபித்தாய் ஆனால், காளி ஆயிரம் முகத்துடனே உனக்குப் பிரத்தியட்சம் ஆவாள். அப்போது நீ அவளைக் கண்டு, அஞ்சாமலிருந்து, வேண்டிய வரங்களைப் பெற்றுக் கொள்" என்றார். இராமன் நல்ல வேளை பார்த்துக் கொண்டு, தன்னூர்ப் புறத்தில் இருக்கிற காளி கோவிலுக்குள்ளே போய், விதிப்படி அந்த மந்திரத்தைச் செபம் பண்ணினான். பத்திரகாளி ஆனவள் ஆயிரம் முகமும் இரண்டு கையுமாகப் பெரிய ரூபத்தை எடுத்துக் கொண்டு பிரசன்னம் ஆனாள். அப்போது மிகுந்த தயிரியம் உடையவனாகி அந்த இராமன் அவள் அகோர ரூபத்தைப் பார்த்து, அஞ்சாமல் நகை செய்தான். காளி, "ஏண்டா! நகைக்கிறாய்" என்று கேட்டாள். கேட்டதற்கு இராமன், "அம்மா! எங்களுக்கு ஒரு மூக்குக்கு இரண்டு கைகள் இருந்தும் சலதோஷங் கண்டால் சிந்துகிறது வருத்தமாயிருக்கிறது; ஆயிரம் முகம் இருக்கிறபடியால் ஒரு வேளை ஜலதோஷங் கண்டால் இரண்டு கையினாலே இந்த ஆயிரம் மூக்குகளையும் எப்படிச் சிந்துவாய்?" என்றான். அதற்குப் பத்திரகாளி, அடா! பையா! நீ என்னைப் பார்த்து விகடம் பண்ணின படியால் நீ இன்று முதலாக விகட கவியாகப் போகக் கடவாய்" என்றாள். "ஆ ஆ! நல்ல வரங் கொடுத்தாய்; அப்படிப் பார்த்தாலும் விகடகவி தான், இப்படிப் பார்த்தாலும் விகடகவி தான்" என்றான். அதைக் கேட்டு, இரக்கம் வந்து, "உன்னுடைய உபசரணைக்கு இராஜ சபை மெச்சும் படியான விகடகவியாய் இருக்கக் கடவாய்"

= குணம் + அதிசயம் A S. Comp. = his marvellous qualities.

Three Kôdi of these mantras.

An Ellip. of உடையவள்.

For ஏன் அடா!

விகடகவி reads the same both ways.

= such as will praise.

140.

என்று மறைந்து போய் விட்டாள். அது முதல் விகடம் பண்ணுகிறதிலே வெகு சமர்த்தனுகி, இராயரிடத்திலே போய்ச் சேர்ந்து, ஜீவனம் பண்ணிக் கொண்டிருந்தான்.

Written ஜீவனம்.

---

## 39. YOU CA'NT MAKE A BARBER A BRAHMAN.

ஒரு நாள் இராயர் உதயமாகி நாலு நாழிகை வரைக்கும் நித்திரை செய்து கொண்டிருந்தார். அன்றைக்குச் சவரம் பண்ணிக் கொள்ளுகிற தினம், ஆகையால் அம்பட்டன் வந்து பார்த்து, நித்திரை பங்கம் வர ஒட்டாமல், படுக்கையிலே தானே மெதுவாகச் சவரம் பண்ணி விட்டுப் போனன். இராயர் நித்திரை தெளிந்த பிற்பாடு எழுந்து, நிலைக்கண்ணுடியைப் பார்த்தார். சவரம் வெகு நேத்தியாகச் செய்திருக்கிறது* தெரிந்தது; அதனுலே, மிகவுஞ் சந்தோஷம் அடைந்து, அம்பட்டனை அழைத்து, "உனக்கு என்ன வேண்டும்?" என்றார். "சுவாமி, என்னைப் பிராமணன் ஆக்க வேண்டும்" என்றான். பிராமணர்களை எல்லாம் அழைப்பித்து, "ஆறு மாதத்திற்குள்ளே இந்த அம்பட்டனைப் பிராமணன் ஆக்கிப் பந்தியிலே வைத்துக் கொண்டு சாப்பிடாமற் போனல் உங்களுக்கு விட்டிருக்கிற மானியங்களை எல்லாம் ஜப்தி செய்து விடுவேன்" என்றான். பிராமணர்கள் எல்லாம் விசனப்பட்டுக் கொண்டு, வெளிக்கு நல்லதென்று அழைத்துக் கொண்டு போய், நித்தியமும் மூன்று காலம் ஸ்நானம் பண்ணுவித்து, நித்தியாக்கினி, சந்தியாவந்தனம், செபதபங்கள் முதலாகிய சமஸ்த காரியங்களை நடப்பித்துக் கொண்டு வருகையில், ஆருவது மாசக் கடைசியில் இராயர், பிராமணர்களுடைய பந்தியில் அம்பட்டன் கூட உட்கார்ந்து சாப்பிடுகிறதைப் பார்க்க வேண்டும் என்று, அக்

*Ellipsis of என்று or ஆக.

p. 205. அ+அ.

கிராரத்துக்குப் போகும் போது, அந்தப் பிராமணர்கள் தென்னாலுஇராமனிடத்தே போய் அழுதார்கள். அதற்கு, "நீங்கள் அஞ்ச வேண்டாம், நான் உபாயஞ் செய்து தப்புவிக்கிறேன்" என்று, இராயருக்கு முன்னே தென்னாலுஇராமன் ஒரு கறுப்பு நாயின் கழுத்திலே கயிற்றைக் கட்டி, இழுத்துக் கொண்டு போய், அக்கிராரத்தின் சமீபத்தில் இருக்கிற ஒரு குளக் கரையில் ஓமகுண்டம் போட்டு, நாலு பேர் பிராமணர்களை வைத்து, ஓமம் பண்ணச் சொல்லித், தான் கொண்டு வந்த நாயை முழுகப் படுத்தி, அது வாள் வாளென்று கத்த, அதை இழுத்துக் கொண்டு ஓம குண்

A pit for a sacrifice.

273. டத்தைச் சுற்றிச் சுற்றி வந்து, மறுபடியும் நாயை இழுத்துக் கொண்டு போய் முழுகப் படுத்தி, ஓமகுண்டத்தைப் பிரதட்சணம் செய்வித்தான். இப்படியாகச் செய்து கொண்டிருக்கையில் இராயர் வந்து, "இந்த நாயை ஏன் இப்படிச் செய்கிறாய்?" என்று கேட்டார். தென்னாலுஇராமன், "இந்தக் கறுப்பு நாயை வெள்ளை நாய் ஆக்கப் போகிறேன்" என்றான். இராயர் "அடா! பித்தனே! எங்கே ஆகிலும் கறுப்பு நாய் வெள்ளை நாய் ஆகுமா? ஆக மாட்

= to this dog.

217. டாது," என்றார். அதற்குத் தென்னாலுஇராமன்: "அம்பட்டன் பிராமணனாகிற போது கறுப்பு நாய் வெள்ளை நாய் ஆகிறது ஆச்சரியமா?" என்றான். அதைக் கேட்டவுடனே இராயர் "சரிதான், யோசனை பண்ணாமற் சொன்னோம்" என்று மனதுக்குள்ளே வைத்துக் கொண்டு, அக்கிராரத்துக்குப் போகாமல் அரண்மனைக்கு வந்து, அம்பட்டனை அழைப்பித்து, வேறொரு விதத்தில் சமாதானம் பண்ணி அனுப்பிவிட்டார். அதைக் கேட்டுப் பிராமணர்கள் எல்லாஞ் சந்தோஷித்தார்கள்.

## 40. WHO WILL TAKE CARE OF MY FAMILY?

தென்னாலுஇராமன் ஒரு நாள் மிகவும் விசனமாக இருக்
கிறதை இராயர் தெரிந்து கொண்டு, "நீ என் துக்கிக்கிறாய்?
உனக்கு என்ன குறைபாடு?" என்றார். அப்போது தென்னாலு
இராமன் "ஐயா! சோதிஷர்கள் என்னை இரண்
= one or two.
டொரு மாதத்தில் இறந்து போவாய் என்கி
றார்கள். ஆனால், இறப்பைக் குறித்து யாதொன்றும் நான்
சிந்திக்க வில்லை, எனக்குப் பிற்காலத்தில் என் குடும்பத்தை
என்னைப் போல் ஆதரிப்பார் ஒருவரும் இல்லை
= ஆதரிப்பவர்கள்.
83.
யே!" என்று கிலேசப் படுகிறேன் என்றான்.
இராயர், "அதைக் குறித்து எவ்வளவும் நீ அஞ்சாதே! உன்
னிலும் பதின் மடங்கு அதிகமாக உன் சமுசாரத்தைக் காப்
பாற்றுவேன். எனக்கு இது ஒரு பெரிதா"?
= பெரிய காரியமா ?
என்று நம்பிக்கையாகச் சொல்லினார். பின்பு
= சொன்னார்.
தென்னாலு இராமன் அன்று முதலாக வர வர நோய் அதிகரிக்
கிறாப் போல் பாசாங்கு பண்ணிக் கொண்டிருந்து, ஒரு நாள்
இறந்து போனதாக எல்லாரும் நம்பும் படி
= some thing or other.
136.
ஏதோ ஒரு உபாயம் பண்ணித், தன் பெட்டி
யிலிருந்த பணங்களையும் ஆபரணங்களையும் பாத்திரங்களையும்
வேறே ஓரிடத்தில் வைத்து, அதில் தான் புகுந்து கொண்
டிருந்தான். இவன் இறந்தான் என்ற செய்தி இராயர் கேட்
டமாத்திரத்தில் தென்னாலு இராமனிடத்தில் திரவியம் அதிகமாய்
இருக்கிற தென்று கேள்விப் பட்டபடியினால் அப்போதே சில
சேவகர்களை அனுப்பி, அவன் வீட்டுப் பணப் பெட்டியைச்
சீக்கிரத்தில் எடுத்து வரச் சொல்லிக், கட்டளை இட்டார். அவர்
கள் அவ்வாறே அதைத் தன் அரண்மனையிற்
மாத்திரம்.=a moment; as soon as.
கொண்டு வந்த மாத்திரத்தில் ஆசையோடு அப்

பெட்டியைத் திறந்து பார்க்கையில், தென்னாலுஇராமனைப் பார்த்து, "ஓகோ! நீ செத்துப் போனாய் என்றார்களே!" என்றார். அவன், "உங்களை நம்பிச் சாகலாமா? நீர் தானா என் குடும்பத்தைக் காப்பாற்றுகிறவர்?" என்றான். இராயர் வெட்கிப் பேசாமல் இருந்து விட்டார்.

---

### 41. THE MUCH-ENDURING THIKF.

ஒரு திருடன் ஒரு நாள் இராத்திரி ஒரு கோமட்டி வீட்டு அவரைப் பந்தலில் ஒளித்துக் கொண்டிருந்தான். அந்த வீட்டுக் கோமட்டி கை கழுவப் போய்த் திருடன் இருக்கிற ஜாடை கண்டு, (சாடை.) பெண்சாதியை ஒரு பெரிய தவலை நிறையத் தண்ணீர் கொண்டு வரச் சொன்னான். அவள் அப்படியே கொண்டு வந்து கொடுக்க, அதனை அவன் வாங்கிக் கொண்டு, கொப்பளித்துக் கொப்பளித்துத், திருடன் மேலே உமிழ்ந்து, தண்ணீர் முழுதும் செலவான பின்பு மறுபடியும் ஒரு தவலைத் தண்ணீர் கொண்டு வரச் சொல்லி, அதனைக் கொப்பளித்துக் கொப்பளித்து உமிழ்ந்தான். அதற்கு அவன் பெண்சாதி, "ஏன் இப்படி வீணாகக் கொப்பளித்துக் கொப்பளித்து உமிழுகிறாயே?" என்று கேட்டாள். கேட்கவே, அவள் மேலே நாலு வாய்த் தண்ணீரைக் கொப்பளித்து உமிழ்ந்தான். அவள் அது கண்டு, தன் புருஷனுக்குப் பித்த குணம் கண்டதாக நினைத்துப் பயந்து, தெருவிலே ஓடிப் போய்ப் பல பேரைக் கூவிக் கூட்டிக் கொண்டு, உள்ளே போனாள். அவர்கள் கோமட்டி அண்டையில் வந்து, "உனக்கென்ன? பித்தம் பிடித்ததா? (What's the matter with you?) உன் பெண்சாதி மேலே ஏன் கொப்பளித்து உமிழ்ந்தாய்?" என்று கேட்டார்கள். அதற்கு அவன், "ஐந்து வயதிலே இவளைக் கலியாணம் பண்ணி, ஆயிரம் வரா

கன் உடைமையும் போட்டு, இது வரையிலே சுகத்திலே வைத்துக் கொண்டிருக்கிற நான் இப்போது நாலு வாய்த் தண்ணீரைக் கொப்பளித்து உமிழ்ந்ததற்கு இவள் சகிக்காமல் உங்களுடனே வந்து சொல்லிக் கொண்டாளே! இந்த அவரைப்பந்தலின் கீழே இருக்கிற மனிதனுக்கு நான் ஒரு உபகாரமுஞ் செய்ததும் இல்லை, அறிந்ததும் இல்லை. அப்படி இருக்க இரண்டு தவலைத் தண்ணீரை எல்லாம் கொப்பளித்துக் கொப்பளித்து மேலே உமிழ்ந்தேன். அதற்கு அவன் சகித்துக் கொண்டிருந்தான். இது மெய் பொய் அறிய வேண்டும் ஆனால் அவனை இருசுவிலே கேட்டுக் கொள்ளுங்கள்" என்றான். அதற்கு மேல் திருடனைப் பிடிக்கிறதற்காக இந்த உபாயஞ் செய்தான் என்று அந்தத் திருடனைக் கைப்பிடியாகப் பிடித்துக் கொண்டார்கள்.

= because I have.

= மெய்பேர், பொய் பேர் என்று.

---

## 42. FRIENDSHIP SWORN IN THE DARK.

ஒரு கோமட்டிக்கு மிகுந்த ஆப்தன் ஆன சினேகிதன் ஒரு நாள் இராத்திரி வந்தான். அப்போது கோமட்டி காசுப் பையைக் கொட்டி எண்ணிக் கொண்டிருக்கையில், விளக்கு நின்று போய் விட்டது. அப்போது பணத்தை எடுத்துக் கொள்ளப் போகிறான் என்று சந்தேகப் பட்டுக் கோமட்டி ஒரு உபாயஞ் செய்தான். அதாவது, சினேகிதனுடைய இரண்டு கைகளையுந் தான் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, "நான் ஒரு வாக்குக் கேட்கிறேன், இது வரைக்கும் நீ என்னிடத்தில் அதிக விசுவாச முடையவனாக இருந்ததுபோல உன் ஆயுசு வரைக்கும் இருக்க வேண்டும். அந்தப் படிக்கு இதோ தீபம் வருகின்றது, அத்தீபம் அறியக்

S. = one's own, an intimate friend.

= went out.

கை போட்டுக் கொடு" என்று சீக்கிரமாகத் தன் பெண்சாதி
யைத் தீபங்கொண்டு வரச் சொல்லிக், கொண்டு வருகிற வரைக்
கும் கைவிடாமல் இருந்து கொண்டு, வந்த வுடனே தீபம் அறி
யக் கை போட்டுக் கொண்டு கையை விட்டான்.



### 43. WHOSE HORSE IS IT?

ஒரு கிராமாதிபதியினுடைய குதிரையைச் சமீபத்தில் இருக்
கிற ஒரு பாளையக்காரன் திருடிக் கொண்டு போய், வாலைக் கத்
தரித்துப் போட்டுத், தன் வீட்டிலே வைத்துக் கொண்டான்.
கிராமாதிபதி போகடி பிடித்து, இராசாவினிடத்திலே போய்ப்
பிரியாது செய்தான். இராசா "அது உன்னுது தான் என்பதற்குச் சாட்சி உண்டா?" என்றார்.
"என் கிராமத்தில் கடைக்கார கோமட்டி இருக்கிறான்," என்
றான். பாளையக்காரனை அழைத்து விசாரணை செய்ய, "அது
தன் குதிரையே என்றும், தனக்கும் பிரதிவாதியின் சாட்சியே
சாட்சி என்றுஞ்" சொன்னான். அரசன் கோமட்டியையும் குதி
ரையையும் அழைப்பித்துக் கோமட்டியைப் பார்த்து, "இது கிரா
மாதிபதி குதிரையா? பாளையக்காரன் குதிரையா?" என்று கேட்
டார். கோமட்டி கிராமத்தானுது என்று மெய் சொன்னால் தன் வீடு கொள்ளை போம் என்றும், பாளையக் காரனுது என்று சொன்னால் கிராமத்தை
விட்டு ஓடிப்போக வேண்டிய தல்லாமலும் அந்தப் பொய்
வெளிப் பட்டால் தண்டனை கிடைக்கும் என்றும், சற்று நே
ரம் ஆலோசித்து, இரண்டு பேருக்கும் அனுகூலம் போலே
தோன்றும் படியாகவும், உண்மை வெளிப்படும் படியாகவும்,
உபாயந் தெரிந்து கொண்டு, இராசாவைப் பாத்து, "சுவாமி!
இந்தக் குதிரையை முன்னே பார்த்தால் கிராமத்தான் குதிரை

p. 205. அ+அ.

Vulg. for உன்னுடையது, உனது.

= கிராமத்தானது, of or belonging to the villager.

போலவும், பின்னே பார்த்தால் பாளையக்காரன் குதிரை போலவுந் தோன்றுகின்றது" என்முன். இராசா மிகுந்த புத்திசாலியான படியால், அவன் உபாயமாகச் சொல்லி, அதற்கு முன்னே யென்றதால், திருடி வருவதற்கு முன்னே என்றும், முகம் பழைய படி இருக்கிற தென்றும், பின்னே என்றதனால் திருடி வந்த பின்னே என்றும், வால் நூதனமாகக் கத்தரிக்கப் பட்ட தென்றும், பொருள் கொண்டு, அந்தக் கோமட்டி புத்தியை மெச்சிக் கொண்டு, கிராமத்தான் பட்சந் தீர்ப்புச் செய்தான்.



**44.** A MODEST REQUEST.

நித்திய தரித்திரனுகியும் பிறவிக் குருடனுகியுங் கலியாணம் இல்லாதவனுகியும் இருந்த ஒரு கோமட்டி ஒரு தெய்வத்தைக் குறித்து நெடு நாளாகத் தபசு செய்தான். அந்தத் தெய்வம் ஆனது இவன் கோமட்டி ஆகையால் எத்தனை வரங்களைக் கேட்பானே, என்று யோசனை செய்து, இவனை முன்னுதாகத் திட்டம் பண்ணிக் கொள்ள வேண்டும் என்று நினைத்து, "ஓய் கோமட்டி! உன் தபசுக்காக மிகவுஞ் சந்தோஷப்பட்டேன். உனக்கு வேண்டிய ஏதாவது ஒரு வரங் கேளு, அதிகமாகக் கேட்டால் கொடுக்க மாட்டேன்" என்று சொல்லிற்று. கோமட்டி "நான் அநேக வரங்களை வாங்கலாம் என்றிருந்தேன். சுவாமி இப்படிச் சொல்லி விட்டாரே! இதற்கு என்ன செய்வது?" என்று ஆலோசித்துத் தெய்வத்தைப் பார்த்து, "என் ஆண்டவனே! உம்முடைய திரு வுள்ளத்தின் படியே கேட்கிறேன், என் பேரனுக்குப் பேரன் ஏழு நிலை மாடத்தில் இருந்து, பொன் கலத்திலே பாலும் அன்னமுமாகச் சாப்பிட என் கண் களிக்கப் பார்த்து விட்டுச் சாகும் படியாக இந்த ஒரு வரம் மாத்திரம் அனுக்கிரகம் பண்ணினுல் போதும்," என்று கேட்டான். இப்படி இவன் கேட்டதிலே சம்பத்தும் புத்திர பௌத்திர பாக்கி

யங்களும் பூரண ஆயிசும் மேலான வீடும் நேத்திரமும் என்கிற இவை முதலாகிய சமஸ்த வரங்களும் அடங்கி இருக்கையினுலே தெய்வம் அவன் யுக்திக்காகச் சந்தோஷத்தை அடைந்து, அப்படியே கொடுத்து அருள்செய்தது.



### 45. GOING TO WASH AND SMEARING ONE'S SELF WITH MUD.

மதுரா புரி என்னும் பட்டணத்தில் பாண்டிய ராஜன் சபையிலே இருபது வருஷ காலம் தினந் தோறும் போய் வந்து கொண்டிருந்து, அந்த ராஜாவின் தயவு சம்பாதித்திருந்த ஒரு குடித்தனக்காரன் வீதியிலே போகையில், எதிரே அவசரமாக வந்த ஒருவன் கை தன் மேல் பட்டபடியால், "ஏண்டா! முட்டாளே! ஒற்றிப் போகல் ஆகாதா?" என்றான். அதற்கு அவன், "நீ ஒதுங்கிப் போகல் ஆகாதா? தேவடியாள் மகனே!" என்றான். உடனே அந்தக் குடித்தனக்காரன் அரசனைக் கண்டு, "என்னை ஒருவன் தேவடியாள் மகனே! என்று தூஷணம் செய்தான்," என்று சொல்ல, அரசன் "உம்முடைய பெருமைக்கு அதை ஒரு காரியமாக நினைக்கல் ஆகுமா?" என்றான். அது கேட்டு அந்தக் குடித்தனக்காரன், "மகா ராஜாவே! நெடுங்காலமாக உங்கள் சமுகம் காத்திருக்கிற என் மேலே உங்களுக்கு ஏதோ தயவு தப்பி இருக்கிறதாகத் தோன்றுகின்றது. அப்படி இலேசாக விடவேண்டாம். உங்கள் சபையில் அவனை அழைப்பித்து விசாரணை செய்ய வேண்டும்" என்றான். அரசன் நகை செய்து, அவனை அழைப்பித்து, "நீ இந்தப் பெரிய மனுஷனைத் தேவடியாள் மகனே, என்று சொல்லலாமா?" என்றார். அதற்கு அவன், "நான் அவசரமாகப் போகும் போது இவர் சந்தித்தார்; அப்போது என் கை இவர் மேலே பட்டது. அதற்கு

மதுரா புரி = மதுரை.

போய் வந்து கொண்டிருந்து = having been a constant frequenter.

ஏதோ = For some cause or other.

இவர் 'முட்டாளே!' என்றார். அந்தக் கோபத்தினாலே, 'தேவடியாள் மகனே!' என்றேன்" என்றான். அரசன் அந்தக் குடித் தனக்காரனைப் பார்த்துத், "தான் சொல்லியது மெய்தான் என்று சொல்லுகிறான். இனி நடக்க வேண்டுவ தென்ன? சொல்," என்றார். அதற்கு அவன், "நேற்றுப் பல பேர் நடந்த வீதியிலே சொல்லியது இன்றயத்தினம் உங்களுடைய மகா சபையிலே தானே ருசு ஆச்சுதே; 'மகா ராஜாவின் சபையில் இருக்கிற குல ஸ்திரீ மகனாகிய இன்னானை இன்று முதலாகத் தேவடியாள் மகன் என்று யாவரும் சொல்ல வேண்டியதில்லை,' என்று பட்டண மெங்கும் பறை சாத்துவிக்கச்" சொல்லிக் கேட்டுக் கொண்டான். அப்படியே அரசன் உத்தரவு செய்தார். அப்பறை சாத்துதல் கேட்டு, எல்லாரும் அவனைத் தேவடியாள் மகன் என்றே நினைத்தார்கள். ஆகையால், புத்தி யீனர்கள் குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக் கொள்ளுவார்கள்.



**46. THE COVETOUS DISCIPLE AND THE EXPECTANT GURU.**

ஒரு சிஷ்யனை அவனுடைய ஆசாரியர் வருஷாவருஷம் தட்சணைக்காக நெடுந் தூரத்திலிருந்து வந்து கண்டு கொண்டே வந்தார். வந்த போதெல்லாம் தனக்குக் கையில் இல்லாமல் இருக்கிறதாக இதவாகப் பேசி, "வரும் வருஷத்திற்குக் கொடுக்கிறேன், தயவு பண்ணிப் போய்வாருங்கள்," என்று உபசாரஞ் சொல்லிக் கொண்டே வந்து, பின்பு ஒரு தடவை "மேலை வருஷத்துக்கு அவசியமாகக் கொடுப்பேன்" என்று அனுப்பினான். இந்தத் தடவை தப்பாமற் கொடுப்பான் என்று ஆசாரியர் வந்தார். உடனே சிஷ்யன் எழுந்து, ஆசனங் கொடுத்து, உட்கார்ந்த பிற

= சீஷன்.

= இதமாக = putting him off civilly.

= வருகிற = *the next.*

பாடு சேவித்துக் கொண்டு, சாப்பாடு விசாரித்துச், "சுவாமி! இருங்கள், சீக்கிரமாக வந்து அனுப்புகிறேன்," என்று தான் போய்ச் சாப்பிட்டுப் போட்டுப், பெட்டியை எதிராகக் கொண்டு வந்து வைத்துத் திறந்து, உள்ளே வலது கையைப் போட்டு, மூடிப் 274. பிடியாகப் பிடித்துக் கொண்டு, ஆசாரியரிடத்திற்கு வந்து, "இனி சுவாமி, எழுந்திருங்கள்!" என்றான். ஆசாரியர் "இத்தனை நாள் கொடாமல் கெடுவு வைத்துக் கொண்டு வந்தாலும், இப்போது ஒரு பிடி வராகன் கொடுக்க எடுத்துக் கொண்டு வந்தான்" என்று பொங்கிக் கொண்டு புறப் பட்டார். பின்னாலே சிஷ்யனும் போனான். நாலு நாழிகை வழிதூரம் போன பிற்பாடு சிஷ்யன், "சுவாமி! இது என்ன மாசம்?" என்றான். ஆசாரியர் "இது மார்கழி மாசம்" என்றார். சிஷ்யன் மூடிக்கொண்டு வந்த கையை மார்கழி மாசம் முதல் பதினைந்து மாசம் வரைக்கும் விரலை விட்டு எண்ணிக் காட்டிப், பதினைந்தாம் மாசத்தில் வரச் சொல்லிக் கெடு விட்டான். ஆசாரியர் எண் சாணுடம்பும் ஒரு சாணுடம்பாகக் குன்றி, திகில் அடைந்து, வெட்கிப் போய் விட்டார். ஆகையால், பொய்யான பொருளாசை மெய்யான அருளாசையை விலக்கும் என்பது உண்மையே.

= Counting on his fingers.

———«◆»———

### 47. THE OVER OFFICIOUS PEON.

ஒரு இராஜாவானவர் குந்தளம்[1] இழைத்து இரத்தினம் பதித்த அருமையான ஒரு வீணையை அப்பியாசம் பண்ணிக் கொண்டே வருவார். அவர் ஒரு நாள் [2]சுதிக்குத் [3]தந்திகளைச் சரிப் படுத்தும் படியாக முறுக்காணிகளைப் பிடித்துப் பலதரம் முறுக்கிப் பார்த்தார். அப்போது அவர் பக்கத்திலே நின்ற ஒரு மூடச்சேவகன் அதைப் பார்த்து,

1 Precious stone.
2 The pitch.
3 The strings.

“இவர் இந்த வீணையை ஒடிக்க மிகவும் வருத்தப் படுகிறார்” என்று நினைத்து, இராஜா எழுந்து அந்தப்புரத்துக்குப் போய் வருகிற தற்கு முன்னே வீணையை ஒடித்துப் பொடிப் பொடி ஆக்கி விட்டு, அதிக சந்தோஷத்துடன் இராஜாவின்[274] வரவை எதிர்ப் பார்த்துக் கொண்டிருந்தான். இராஜா வந்து பார்த்து, “இப்படிப் பொடிப் பொடியாகும் படி எப்படி ஒடித்தாய்?” என்று கேட்டார். சேவகன் தன்னை மெச்சுகிறதாக நினைத்து, “இது, சுவாமி, தங்கள் அன்ன விசேஷத்தால் எளி திலே ஒடிக்கத் தக்க வல்லமை அடியேனுக்கு வந் தது” என்றான். இராஜா புத்தி யீனர்கள் புத்தி யாகச் செய்வதும் விபரீதம் ஆம் என்று சொன்னார்.

= By the excellence of the food you give me.



## 48. WHAT IF THE CAT SHOULD EAT THE HATCHET?

ஒரு மடையனுடைய பெண்சாதி ஒரு காசுக்கு மீன் வாங் கி வந்து வைத்தாள். அதைப் பூனை தின்று விட்டது. அப்பூனை தின்னும் போது பார்த்திருந்த மடையன் தான் காடு வெட்டுங் கோடாலியைப் பெட்டியில் வைத்துப் பூட்டிட்டு வருவான். அவன் பெண்சாதி “கோடாலியைத் தினந் தோறும்[263] பெட்டியிற் போட்டுப் பூட்டுவதேன்?” என்றாள். “ஒரு காசு மீனைத் தின்ற பூனை[214] நாலு பணத்துக் கோடாலி யைத் தின்று விட்டால் நாம் என்ன செய்யலாம்[248]?”[131] என்றான்.

= A cash worth of fish.



## 49. THE MEDDLESOME DONKEY.

ஒரு பெருங் கிராமத்துப் புடவைகள் வெளுக்கும் வண் ணான் அவ்வுடைமைகளைச் சுமக்கிறதற்கு ஒரு கழுதையையுந் தன் வீட்டுக்குக் காவலாக ஒரு நாயையும் வைத்திருந்தான்.

இப்படி இருக்குங் காலத்தில் ஒரு நாள் இரவில் நல்ல கருக்க லிலே ஆறு பேர் திருடர் அவன் வீட்டில் கன்னம் இட வந் தார்கள். அப்பொழுது அங்கிருந்த நாய் குலையாமல் சும்மா இருந்தது. கழுதையானது, "நாயே! நீ ஏன் சும்மா இருக்கி றாய்? நம்முடைய எசமானன். வீட்டில் திருடு கிறதற்குக் கள்ளர் வந்து உள்ளே பதுங்கி இருக் கிறார்களே! நம்முடைய வசத்தில் இருக்கிற விலை யேறப் பெற்ற ஆடைகளெல்லாம் போய் விட்டால் எசமான் நொந்து போவான்," என்றது. அதற்கு அந்த நாயானது, "கழுதையே! இப்படி இவர்கள் அனேகம் முறை திருடவந்தார்கள். அப்பொ ழுது நான் குலைத்துக் குலைத்து எசமானனை எழுப்பி விட்டேன். கள்ளர் ஓடிப்போனார்களே. அதை நீயும் அறிவாயே. அந்த நன்றி அறிகிற குணம் நம்முடைய எசமானனிடத்தில் இல்லை. ஆதலால், அவர்கள் புகுந்து திருடிக் கொண்டு போனால் போ கட்டும், நமக்கு நிமித்தியம் இல்லை," என்று நாய் சொல்லிற்று. இந்த முறை தான் ஆகிலும் கூப் பிட்டுத் தன் எசமானனை எழுப்பி விடுவோம் என்று, கழுதை இடி முழக்கம் போலக் கதறிக் கூப்பிடத் தொடங்கிற்று. திரு டர் அப்புறம் பதுங்கி இருந்தார்கள். வண்ணான் அவ்விரைச் சல் பொறுக்க மாட்டாமல் எழுந்தோடி வந்து, "கொழுத்த கழு தையே! என்று வைது, தடியால் இடுப்பு ஒடிய அடித்து விட்டு, கோபத்துடனே படுத்துக் கொண்டான். திருடர் மீண்டு உள் ளே வந்து புகுந்து, துணி மணிகளை எல்லாம் வாரிக் கட்டிக் கொண்டு போய் விட்டார்கள். பார்த்திருந்த நாய் கழுதை யைப் பார்த்து, "நான் சொல்லியுங் கேளாமற் போனாயே! நீ செய்த நன்றிக்கு நம் ஆண்டவன் செய்த நன்றியைக் கண் டாயே! ஆகிலும் நான் செய்யும் வேலையை நீ செய்ததால் இப் படி வந்தது. ஆதலால், அவன் அவன் வேலையை அவனவனே

= எசமானன்.

= It's no concern of ours.

செய்ய வேண்டும். ஒருவன் செய்கிற வேலையை ஒருவன் செய்தால் இப்படியே வந்து நேரும்" என்றது.



**50.** OUT OF THE FRYING-PAN INTO THE FIRE.

ஒரு குடித்தனக்காரன் அடிமைப் பறையனை வைத்துக் கொண்டு, அவனை "உன் பேர் என்ன?" என்று கேட்டான். "ஐயா! என் பேர் பெருமாள்" என்றான். அந்தக் குடித்தனக்காரன் வைஷ்ணவன் ஆகையால் இந்தப் பறையனைப் பெருமாள் என்று அழைக்கச் சம்மதியாமல், "நீ வேறே பேர் வைத்துக் கொள்ளுகிறாயா?" என்று கேட்டான். "ஐயா! வைத்துக் கொள்ளலாம். கொஞ்சஞ் செலவு பிடிக்கும்," என்றான். "அதற்கு எவ்வளவு பிடிக்கும்? சொல்லு," என்றான். "என் தகப்பன் இருக்கையில் பத்து வராகனும் பதின் கல நெல்லுஞ் செலவழித்து நாலு பறைச்சேரிகளுக்கும் சாப்பாடு போட்டு, இந்தப் பேரிட்டான். இப்போது இதைத் தள்ளுகிறதற்கும் வேறே பெயரிடுகிறதற்கும் முன் செலவுக்கு இரட்டத்தனைச் செலவு பிடிக்கும்" என்றான். அந்தப்படி சம்மதித்து, இருபது வராகனும் இருபதின் கல நெல்லுங் கொடுத்தான். அதை வைத்துக் கொண்டு சொஸ்தமாகச் சில மாசம் சாப்பிட்டுப் போட்டுப் பெரிய பெருமாள் என்று பெயரிட்டுக் கொண்டு வந்தான். வைஷ்ணவன் அடிமையைப் பார்த்து, "என்ன பெயரிட்டுக் கொண்டு வந்தாய்?" என்று கேட்டான். "சாமி! இப்போது இட்டுக்கொண்டு வந்த பெயர் பெரிய பெருமாள் என்றான். அதைக் கேட்டு ஆண்டை வெட்கிப் போனான். ஆதலால் வீண் விபரீதத்தால் பேதையர் வீண்செலவு செய்ய உடன்படுவார்கள்.

A name of vishnu.

= When my Father was alive.

172.

## 51. A GOOD MAXIM CHEAPLY BOUGHT.

= பாராதவன்.

ஒருவன் ஆய்ந்து பாராதான் காரியஞ் சாந்துயரந்தரும் என்கிற வாக்கியத்தை ஒரு நறுக்கிலே எழுதி வைத்துக் கொண்டு ஒரு பெரிய பட்டணத்திலே இது ஆயிரம் வராகன் என்று தெருத்தோறும் விலை கூறித் திரிந்தான். பெரிய யுத்தத்துக்குப் போக எத்தனமாய் இருந்த ஒரு ராஜகுமாரன், இதன் பலனை அறிவோம் என்று, ஆயிரம் வராகன் கொடுத்து, அந்த நறுக்கை வாங்கித், தன் படுக்கை வீட்டிலே தூக்கிட்டிருக்கிற [263] கட்டாரியை உருவி அந்த உறைக்குள்ளே போட்டுக், கட்டாரியைச் சொருகி முன்னிருந்த படியே தூக்கிட்டுப் போட்டுத், தான் நெடுந் தூரத்திலே யுத்தத்துக்குப் போய்ப், பதினாறு வருஷம் யுத்தம் பண்ணி வெற்றி கொண்டு தன் வீட்டிற்கு வந்து, தான் போனபோது பிள்ளை உண்டாய் இருந்த தன் பெண்சாதி பெற்ற பிள்ளைக்குப் பதினாறு வயதாச்சுது: அந்த பிள்ளையும் அவளுமாகக் கட்டிலின் மேலே படுத்துக்கொண்டிருந்தார்கள். [136] அதைப் பார்த்துத் தன் பெண்சாதி சோரபுருஷனை வைத்துக் கொண்டிருக்கிறதாக நினைத்து, இரண்டு பேரையுங் குத்திப் போடுகிறதற்கு முன் தூக்கிட்டிருந்த கட்டாரியை உருவினான். அப்போது அதற்குள்ளிருந்த சீட்டு கீழே விழுந்தது. அதை எடுத்து, ஆய்ந்து பாராதான் காரியம் சாந்துயரந் தரும் என்றிருக்கிறதைப் பார்த்துக் கோபம் அடங்கி, "இது காரியத்தைப் பொறுத்து ஆய்ந்து பார்ப்போம்" [274. (21.)] என்று விசாரித்துத், தன் பெண்சாதி பக்கத்திலே படுத்திருந்தவன் தன் புத்திரன் என்று அறிந்து, "என் அருமைப் பிள்ளையையும் பெண்சாதியையும் வீணாகக் கொல்ல நினைத்தது இந்தக் கட்டுவாக்கியத்தினாலே அல்லவா தப்பியது" என்று அளவற்ற சந்தோஷத்தை அடைந்து, "இந்தச் சீட்டுக்கு நான் கொடுத்தது தகுதியான விலை அல்ல, இன்னம் அதிகமாகக் கொடுக்கலாம்," என்று மெச்சினான்.

## 52. THE LUCKY SOOTHSAYER.

ஒருவன் இராஜாவுக்கு ஆரூடம் சொல்லி அனேக வெகுமானங்களைப் பெற்றுக் கொண்டு வந்தான். அதைப் பார்த்து மனம் பொறாமல் அவன் பக்கத்து வீட்டுக்காரி தும்முட்டிப் பட்டன் என்கிற தன் மூட்டாள் புருஷனைப் பார்த்து, "எங்கே ஆகிலும் போய் ஆரூடம் கற்றுக் கொண்டு வா," என்று கட்டுச் சாதங் கட்டிக் கொடுத்தாள். அந்த மூடன் அதை வாங்கிக் கொண்டு போய் ஒரு குளத்தண்டையிலே சாப்பிட்டுப் போட்டு, அங்கிருக்கிற மரத்தின் நிழலிலே படுத்துக் கொண்டிருக்கையில் வளை தோண்டிக் கொண்டிருந்த ஒரு எலியைக் கண்டு, "எலி வளை தோண்டக் கண்டேன்" என்றும், புற்றின் மேலே விழித்துக் கொண்டிருந்த ஒரு ஆந்தையைக் கண்டு, "புற்றிலே ஆந்தை விழிக்கக் கண்டேன்" என்றும், ஒரு பனைமரத்தைக் கண்டு, "நெட்டைப் பனைமரம் நிற்கக் கண்டேன்" என்றும், ஓடிய ஒரு மானைக் கண்டு, "மானோடக் கண்டேன்" என்றும், பாடம் பண்ணிக் கொண்டு வீட்டிற்குப் போய், "ஆரூடம் கற்றுக் கொண்டு வந்தேன்" என்றான். அன்று இராத்திரி அவனும் பெண்சாதியுமாய்ப் படுக்கை வீட்டில் இருக்கையில் திருடன் வந்து, அந்த வீட்டுச் சுவரிலே கன்னம் போட்டுக் கொண்டிருந்தான். அப்போது, அவள் தன் புருஷனை, "நீ கற்றுக் கொண்டு வந்த ஆரூடத்தைச் சொல்ல வேண்டும்" என்றாள். "எலி வளை தோண்டக் கண்டேன்" என்றான். அதைக் கேட்கவே கன்னம் இட்டுக் கொண்டிருந்த திருடன் தான் தோண்டுகிறதை அவன் மறை பொருளாகச் சொன்னான் என்று திடுக்கிட்டு விழித்தான். "புற்றிலே ஆந்தை விழிக்கக் கண்டேன்" என்றான். தான் விழிக்கிறதை அவன் சொல்லுகிறான் என்று எழுந்து நின்றான். நெட்டைப் பனை மரம்

ஆரூடம் = Soothsaying.

தும்முட்டி: This is also the name of a tree.

விழிக்க = விழிக்க.

நிற்கக் கண்டேன்" என்றான். தான் நிற்கிறதை அவன் சொல்லுகிறான் என்று ஓட்டம் பிடித்தான். "மான் ஓடக் கண்டேன்" என்றான். தான் ஓடுகிறதை அவன் சொல்லுகிறான் என்று காற்றாய்ப் பறந்தான். இவைகளைப் பார்த்துக்கொண்டிருந்த ஒருவனால் அந்த முட்டாள் உள்ளது, உள்ள படி ஆரூடஞ் சொல்லுகிறவன் என்ற பெயர் பட்டணம் எல்லாம் பரவியது. அதைக் கேட்டிருந்த வண்ணான் தன் கழுதை காணாமற் போனதைக் குறித்து ஆரூடம் கேட்டான். அதற்குக் "கழுதை மறைந்தால் குட்டிச்சுவர் தான்" என்றான். அந்தப்படியே வண்ணான் ஒரு குட்டிச்சுவரை எட்டிப் பார்த்தான். அங்கிருந்து கழுதை அகப்பட்டது. அந்தச் சமாசாரத்தை வண்ணான் இராஜா வரைக்குந் தெரியப் படுத்தினான். அரசன்வீட்டிலிருந்த உடைமைப் பெட்டியை மூக்கி என்கிற வெள்ளாட்டியும் நாக்கி என்கிற வெள்ளாட்டியும் திருடிக் கிணற்றிலே போட்டு விட்டு அறியாதவர் போல் இருந்தார்கள். இராஜா தன் வீட்டிற் போன திருட்டைக் குறித்து அந்த மூட சோசியனை அழைத்துக் கேட்டான். "எட்டு நாளையிலே பிடித்துக் கொடுக்கிறேன்" என்று கெடுவு சொல்லி, வந்து, ஏழு நாள் மட்டும் சும்மா இருந்து, எட்டாம் நாள் காலமே "கெ[211.]டுவு ஆய் விட்டதே. இனி எனக்கு நாக்கே போமோ? மூக்கே போமோ" என்று சொல்லிக் கொண்டே குளக்கரையிலே[258. (12.)] பல் விளக்கிக் கொண்டிருந்தான். திருடின இரண்டு பெண்டுகளும் தண்ணீருக்கு வருகிற போது அவன் சொல்லுகிறதைக் கேட்டுத் திடுக்கிட்டுத் தாங்கள் திருடினதைத் தெரிந்து கொண்டு தான் சொல்லுகிறான் என்று சமீபத்திலே வந்து, "ஐயா! உடைமைப் பெட்டியைத் திருடினவர்கள் நாங்களே. அதைக் கொண்டு வந்து கொடுத்து விடுகிறோம். எங்களுக்கு ஒரு தண்ட

*=She of the nose, and she of the tongue.*

ளையும் இல்லாமல் காப்பாற்ற வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்கள். அவன் "நல்லது" என்று அவர்களையும் உடைமைப் பெட்டியையும் அரசனிடத்திலே கொண்டு போய்ச் சேர்த்து, "இவர்கள் குற்றத்தை மன்னிக்க வேண்டும்" என்ருன். அப்படியே அரசன் மன்னித்து, சோசியனுக்கு வெகுமானமுஞ் செய்து, சம்பளம் பண்ணித் தன்னிடத்திலே வைத்துக் கொண்டு, பிற்பாடு ஒரு நாள் தானும் சோசியனுமாக வேடிக்கையாகப் போகிற போது ஆற்றங் கரையிலே ஒரு சின்ன தும்மட்டிக்காயைப் பறித்து, சோசியனுக்குத் தெரியாமல் தன் கைக்குள்ளே வைத்து மூடிக்கொண்டு "இது என்ன?" என்று கேட்டான். சோசியன் தான் அகப்பட்டுக் கொண்டேன் என்று நினைத்து, "அங்கே தப்பி இங்கே தப்பி அகப் பட்டுக் கொண்டான், தும்முட்டிப் பட்டன்" என்று சொன்ஞன். அது கேட்டு அரசன் தும்மட்டிக் காய் என்று கண்டு பிடித்தான் என்று மிகவுஞ் சந்தோஷப் பட்டு, வேண்டிய வெகுமதிகளைக் கொடுத்து, அனுப்பி விட்டான்.



### 53. THE OLD MAN WHO COULD PLEASE NO ONE.

குதிரையைப் படைத்த ஒரு கிழவன் தான் ஏறிக் கொண்டு பன்னிரண்டு வயதுடைய தன் பிள்ளையை நடத்திக் கொண்டு போஞன். அது கண்டவர்கள் "இவன் மகா பாவி, அறியாத பிள்ளையை நடத்திக் கொண்டு தான் குதிரை ஏறிக் கொண்டு போகிருன்," என்ருர்கள். தான் குதிரை விட்டிறங்கிப் பிள்ளையை ஏற்றிக் கொண்டு போஞன். அது கண்டவர்கள் தள்ளாத கிழவன் அல்லவோ குதிரை மேல் ஏற வேண்டும்? ஓடிவரத் தக்க பையனை ஏற்றிக் கொண்டு தான் நடந்து போகிரு

னே! இதென்ன அநியாயம்!" என்றூர்கள். பிற்பாடு தானும் ஏறிக் கொண்டு பிள்ளையையும் ஏற்றிக் கொண்டு போனுன். அது கண்டவர்கள் இது இவரது சொந்தக் குதிரையே அல்ல. அதினூலே தான் எப்படி ஆகிலும் போகட்டும் என்று இரண்டு போராக ஏறிக் கொல்லுகிறூர்கள்," என்றூர்கள். பின்பு தாங்கள் இரண்டு பேரும் இறங்கிக் குதிரையை நடத்திக் கொண்டு போனூர்கள். அது கண்டவர்கள் "இவர்கள் குதிரை எப்போதும் ஏறி வாழ்ந்தவர்கள் அல்ல," என்றூர்கள். அப்புறம் குதிரையினுடைய நாலு காலையுங் கட்டித் தண்டு போட்டு எடுத்துக் கொண்டு போனூர்கள். அது கண்டவர்கள் "இது வரைக்கும் குதிரை மனுஷனை எடுக்கிறது அறிவோம், மனுஷர் குதிரையை எடுத்துக் கொண்டு போகிறது ஆச்சரியம்" என்று கூக்குரலிட்டுச் சிரித்தார்கள். அவைகளைக் கேட்டுக் குதிரைக்காரன் ஒரு விதத்துக்காவது சம்மதியாத படியினூலே "உலகம் பலவிதம்" என்று சொல்லிப் பின்பு தன் மனதின் படியே நடந்தான்.



### 54. WHEN IS A STONE A STONE?

இரண்டு பேர் மூடர்கள் ஒரு ஆலயத்திலே சிவ தரிசனம் பண்ணப் போன இடத்தில், "மைத்துனு! சுவாமி என்கிறூர்களே. இது தானு சுவாமி? கல் ஆச்சுதே," என்றூன். கோவில் அதிகாரி அதைக் கேட்டுச் "சுவாமியை நிந்திக்கிறூயா?" என்று நன்றூக அடித்துத் துரத்தி விட்டான். அதைப் பட்டுக் கொண்டு மைத்துனனுந் தானுமாக ஒரு வீட்டிலே போய்ச் சாப்பிட்டார்கள். அந்தச் சாப்பாட்டிலே கல் இருப்பதைக் கண்டு, "மைத்துனு! சாதத்திலே கல் இருக்குது" என்றூன். முன் அடிபட்டவன் அதைக் கேட்டுக் கோபித்துக் கொண்டு, "அடா! புத்தி

கெட்டவனே! கல் என்று சொல்லாதே! இப்போது நான் அடி பட்டதைப் பார்க்க இல்லையா? சின்ன சுவாமி என்று சொல்லடா!" என்று கை கொண்ட மட்டும் இரண்டு அறை கொடுத்தான். இரண்டு அறையும் நன்றாகப் பட்ட படியால் "இனி மேல் இப்படிச் சொல்ல மாட்டேன்" என்றான்.

END OF BOOK I.

# BOOK II.

# TAMIL PROSE READER.

## சுகிர்ல்லாப தந்திரம்

அல்லது—நட்புப்பேறு.



THE ACQUISITION OF FRIENDSHIP. SÔMASENMÂ'S THESIS.

"புத்திசாலிகள் [181] ஆய் இருக்கிற சிநேகிதர்கள் திரவியம் இல்லாதிருந் [133] தாலும், [100] வேறே சாதனங்கள் இல்லா விட்டாலும், [123] காகமும் எலியும் ஆமையும் மானும் நட்பினால் ஒன்றை ஒன்று காப் பாற்றினாற் [227] போல ஒருவர்க்கு ஒருவர் உதவுவார்கள்" எனச் [82] சோமசன்மா சொல்ல, [169] ராஜ குமாரர்கள், "அதெ ப்படி?" என,—சொல்லத் தொடங்கினான்:

The Brahman who instructs the King's sons in the Panchatantra.



### 1. §. THE CROW. THE NET SPREAD. THE PIGEONS.

கோதாவரிக்[1] கரையில் இருக்கிற ஒரு பெரிய வன்னி மரத் தில் லகுபதனன்[2] என்னுங் [132] காகம் இருந்து கொண் டிருக்கையில், [144] ஒரு நாள் விடியற்காலத்தில் அங் கே யெமனைப்[3] போல மிகவும் பயங்கரமாய் ஒரு வேடன் வந்தான். லகுபதனன் அவனைப் பார் த்து, பயப்பட்டு, "இந்தத் துராத்மா[4] என்ன பண் ணுவானோ, தெரிய வில்லை; ஆகையால், இதைச் சோதிக்க

1. The river Gôdâvari.
2. Light—goer.
3. See இயமன்.
4. Evil-soul, bad fellow.

வேண்டும்" என்று இரை தேடுகிற யத்தனத்தை[5] விட்டிருக்க,[169] இதற்குள்ளே அவ்வேடன் வலையை விரித்து, பலவகைப்பட்ட தானியத்தைத் தெளித்து, அங்கே ஓர் செடி மறைவிற் பதுங்கிக் கொண்டிருந்தான்.[248] அதன்[22] பிறகு,[225] தன் பரிவாரத்தோடு அந்த மரத்தில் வந்து இறங்கின சித்திரக்கிரீவன்[6] என்னும் புறா அரசு அங்கே இறைத்திருக்குந் தானியத்தைப் பார்த்து,[269. 74.] தன் பரிவாரப்[131] புறாக்களுடனே[239] சொல்லுகிறது: "இந்த நிர்மானுஷியம்[7] ஆன காட்டில் தானியம் எப்படி வரும்? யார் ஆனாலுங்[217] கொண்டு வந்து போட்டிருக்க வேண்டும்; இது நமக்குத் தெரிந்தால் அல்லாமல் இதைப் பட்சிக்கல் ஆகாது; ஏனென்றால், ஒரு பிராமணன் பொன் காப்புக்கு ஆசைப்பட்டு, புலியினால் எப்படி மரணம் அடைந்தானோ, அப்படிக்கு இது ஏதோ ஒரு விபரீதமாகத் தோற்றுகிறது" என,—புறாக்கள் அதைக் கேட்டு, "அதெப்படி மஹா ராஜாவே!" என,—சித்திரக்கிரீவன் சொல்லுகிறது:

5. See யத்தனம். S. YATNA.

6. *Variegated-Neck.*

7. *Destitute of men.* நிர் + மனுஷன், formed into an abstract noun.



**2. §. THE DOVE-KING'S STORY OF THE OLD TIGER AND THE BRAHMAN.**

"நான் தென் காட்டில் மேய்ந்து கொண்டிருக்கையிற் பார்த்தேன், அதைக் கேளுங்கள்: ஒரு கிழப் புலி பலவீனத்தால் ஆகாரம் சம்பாதிக்கக் கூடாமல் ஓர் ஏரிக் கரையில் நீராடி, கையில் தர்ப்பை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கையில், ஒரு பிராமணன் அந்த வழியில் வந்தான்; புலி அவனைப் பார்த்து, 'ஓ பிராமணா! இந்தப் பொன் காப்புத் தருகிறேன் வா,' என— இதைக் கேட்டு அப்பிராமணன் அந்தப் புலியைப் பார்த்து ஆலோசிக்கிறான்; எப்படி என்றால், 'இந்தக் காப்பு நமக்கு வலியக் கிடைக்கிறது, ஆனால் மரணத்துக்கு இடம் ஆகிய புலி

யின் கிட்டப் போகல் ஆகாது. ஆகையால், இந்தக் காப்பில் ஆசை[151. d.] வைக்கல் ஆகாது என்போம் ஆனால் மரணத்துக்கு நாலண்டையும் வழி, ஆகையால் இதைக் குறித்துப் பிரயத்தனம் அவசியம் பண்ண வேண்டும்,' என்று தன் துராசைக்கு ஏற்பத் தனக்குள்ளே நிச்சயித்துக் கொண்டு சொல்லுகிறான்: 'ஐயா! புலியாரே! காப்பெங்கே இருக்கிறது?' என—புலி கையில் வைத்துக் கொண்டு 'இதோ பாரும், பிராமணோத்தமா!'[1] எனக் காண்பித்து, பின்பு பிராமணன்: 'உன்னிடத்தில் எனக்கு எப்படி நம்பிக்கை?'[2] என, புலி: 'நான் வைகறையில் முழுகி, நித்திய தானம் பண்ணிக் கொண்டிருக்கிறேன். நானோ நகமும் பல்லும் போன கிழவன் ஆய் இருக்கிறேன். இப்போது என்னிடத்தில் நம்பிக்கை இல்லையா? வேட்டல், ஓதல், கொடுத்தல், தபம், சத்தியம், உறுதி, பொறுமை, ஆசையின்மை என்னும் இவ்வெட்டுத் தருமங்களையும் நான் அறிந்திருக்கிறதினால் இந்த அபூர்வ வஸ்துவை யாருக்காகிலுங் கொடுக்க இச்சிக்கிறேன். இதனால் என்னிடத்தில் நற்குணம் இருக்கிறது என்றும் எவ்வளவானாலுந் துர்க்குணம் இருக்கிறது என்றும் அறிய இல்லையா? என்ன?' என,—அப்போது பிராமணன்: 'இது மெய்தான், ஆனால் புலி மனிதனை அடித்துத் தின்னுகிறது என்று மிகவும் லோகாபவாதம் இருக்கிறது' என,—புலி: 'நான் தரும சாஸ்திரமும் அறிந்திருக்கிறேன், தன் பிராணன் தனக்கு எப்படித் தித்திப்போ, அப்படி எல்லாருக்கும் இருக்கும் என்று அறிந்து சாதுக்கள் பிராணிகளிடத்தில் தயையாய் இருக்கிறார்கள். தன்னைப் போலச் சுக துக்கங்களைப் பிறரிடத்தில் நினைக்கிறார்கள். நீ மிகவுந் தரித்திரன், ஆகையால் உனக்குக் கொடுக்கப் பிரயத்தனம் பண்ணுகிறேன். சாஸ்திரமும் இப்படியே இருக்கிறது; எப்படி என்றால், ஏழைக்கே கொடுக்க வேண்டும்.

1. Most excellent Brahman! பிராமணன் + உத்தமன்.

2. How am I to trust you?

செல்வம் உள்ளவனுக்குக் கொடுக்கல் ஆகாது; ஏனென்றால், மருந்து நோயாளிக்கு எப்படிக் குணங் கொடுக்குமோ, அப்படி நோய் இல்லாதவனுக்கு ஆகுமா? ஆதலால், நீ இந்த ஏரியிலே முழுகி வந்து, காப்பை வாங்கிக்கொண்டு, வீட்டுக்குப் போ,' என்ற உடனே பிராமணன்; (ஐயோ, பிராமணனுக்குப் பின் புத்தி ஆகையால்!) புலியின் பேச்சை நம்பி, ஸ்நானம் பண்ணுகிறதுக்கு ஏரியில் இறங்கின உடனே உளையில் புதைந்து, காலைப் பிடுங்கிக் கொண்டு, வரக் கூடாமல் திகைத்தான். புலி அதைப் பார்த்து, 'பிராமணா! பயப்படாதே! நான் உன்னைச் சேற்றினின்றும் எடுக்கிறேன், சற்றிரு' என்று சொல்லிக் கொண்டு, மெல்லெனப் போய், அவனைப் பிடித்துக் கொண்டது. அப்போது பிராமணன் எண்ணுகிறான், என்னென்றால், 'துஷ்டர்கள் வேதாத்தியயனம் பண்ணி இருந்தாலுந் தரும சாஸ்திரம் படித்திருந்தாலும் அவர்கள் வார்த்தையில் நம்பிக்கை வைக்கல் ஆகாது; ஏனென்றால், எவன் சுபாவம் எப்படியோ அது எப்போதும் போகாது. இப்படி இருக்கையில் நம்முடைய சாதிக்கு இயல்பாய் இருக்கிற பேராசையினால் இந்தத் துஷ்டனிடத்தில் விசுவாசம் வைத்து, மோசம் போனேன்,' என்று இப்படிப் பச்சாத்தாபப் பட்டுக் கொண்டிருக்கையில் அந்தப் புலி கொன்று தின்றது.

---

### 3. §. THE PIGEONS IN THE NET.

"ஆகையால், மிகவும் ஆலோசனை பண்ணி ஏதொன்று செய்யத் தக்கதோ, அதைச் செய்ய வேண்டும் அப்படிச் செய்தால் யாதொரு தீங்கு நேரிடாது," என்று இப்படிச் சித்திரக்கிரீவன் வார்த்தையைக் கேட்டு, ஒரு புறா கர்வத்தோடு சொல்லுகிறது: "இப்படி ஆலோசித்தால் ஓர் இரையும் நமக்கு அகப்படாது. மேலும், வெட்கப்படுகிறவன், பொறுமையுள்ளவன், சந்தோ

ஷப்படாதவன், குரோதமுள்ளவன், தீராச்சந்தேகமுள்ளவன், பிறர்பொருளாற் சீவிக்கிறவன், இவ்வாறு பெருந்துக்கத்தையே அனுபவிப்பார்கள்" என, இதைக் கேட்டுப் புறாக்கள் எல்லாந் தானியத்தைத் தின்னும் பொருட்டுப் போய் நிலத்து இறங்கி, வலையில் அகப்பட்டன. புறா அரசன் அதைப் பார்த்து, "எல்லாரும் என் சொல்லைக் கேளாமற் போனார்கள், இப்போது நான் ஒன்றியாய் இருந்து[1] பலன் இல்லை" என்று சொல்லி, அதுவும் வலையில் வந்து அகப்பட்டது. பிறகு வேடன் பட்சிகள் வலையிற் சிக்கிக் கொண்டதைப் பார்த்து, அதனிடத்திற்கு வரத் தொடங்கினான். அதைப் புறாக்கள் கண்டு, சித்திரக்கிரீவனைப் பார்த்துச் சொல்லுகின்றன: "நாங்கள் நீசன் புத்தியைக் கேட்டு உன்னை அவமானம் பண்ணினோம், அதன் பலன் பிராப்தி ஆயிற்று" என, அப்போது சித்திரக்கிரீவன்: "இப்போது இதைச் சொல்லிப் பயன் என்ன? இதற்கு ஓர் உபாயம் இருக்கிறது; எல்லோரும் வலையோடு கூட ஒருமிக்கப் பறந்து, வேறிடத்திற்குப் போக வேண்டும். அப்படிச் செய்தால்தான் பிராணனைக் காப்பாற்றல் ஆம்" என, இதைக் கேட்ட உடனே எல்லாப் பறவைகளும் வலையோடு கூடச் சடுதியில் பறந்து போயின. அதை வேடன் தூரத்திலிருந்து பார்த்து, ஆச்சரியப் பட்டுச் சொல்லுகிறான்;—ஏனென்றால், "இவைகள் ஒரே மனதாய் வலையைக் கொண்டுபோயின; ஆனால், இவைகளில் ஒன்றுக் கொன்று சண்டை நேரிடும். அப்போது என் கையில் அகப்படும்" என நினைத்துக்கொண்டு, அவைகளின் பின்னே ஓடும் போது புறாக்கள் கண்ணுக்கு மறைந்து போய் விட்டன. பிறகு அவன் வருத்தப்பட்டுத் திரும்பி வந்து விட்டான். இவ்வாச்சரியம் எல்லாம் பார்த்திருந்த லகுபதனன் என்னும் காகம் அந்தப் புறாக்களின் பின்னே போயிற்று. பிறகு கபோத ராஜா தன் கூட்டத்தைப் பார்த்துச் சொல்லுகிறது: "கண்டகி[2] நதி தீரத்தில் இருக்குஞ் சித்திர வனத்தில் என் சிநேகிதன் ஆன இரணியகன் என்னும் ஓர் எலி அரசன் இருக்கிறான். அவன் பல்லினாலே

1. = இருப்பதினால் = by my being.

2. The river Gandak.

நம்முடைய வலையை அறுப்பான். ஆகையால் அங்கே நட வுங்கள்" என, இதைக் கேட்டு அப்படியே எலியரசன் வளை அண்டை இறங்கின. அப்போது ஏதாவது ஆபத்து நேரிடும் என்பதைக் குறித்து தன் வளைக்கு நூறு வழி செய்து கொண்டு உள்ளே இருந்த எலியரசன் புறுக்கள் இறங்கின சப்தத்தைக் கேட்டுப் பயந்து அடங்கி இருக்கையில் சித்திரக்கிரீவன்: சிநே கிதா! இரணியகனே! எங்களோடே ஏன் பேசவில்லை?" என, இதைத் தன் சிநேகனுடைய தீங்குரல் என்று அறிந்து சந்தோ ஷத்தோடு கூடச் சீக்கிரமாக வளையினின்றும் வந்து, "நான் புண் ணியவான் ஆகையால் சித்திரக்கிரீவன் என்னும் மித்திரன் என் வீட்டுக்கு வந்தான்; இவ்வுலகத்தில் மனதொத்த மித்திரனோடு சம்பாஷிக்கிறதிலும் வேறே ஆனந்தம் ஏது?" என்று உபசாரஞ் சொல்லிப் பிறகு அதனுடைய அவஸ்தையைப் பார்த்து, மிக வுந் துக்கித்துச் சொல்லுகிறது: "மித்திரா! நீ யெல்லாரைக் காட் டிலுஞ் சமர்த்தனுமே, உனக் கிப்படிப்பட்ட காரியம் எப்படி நேரிட்டது?" என, புறு: எந்தக்காலத்தில் எது நடக்குமோ அது நடக்கும்; விதி வலிது, அதன் முன் யாருடைய உபாயம் நடக் கும்? கடல் பெருகி மேலிட்டால் அதற்குக் கரை ஏது?" என, இரணியகன், "இந்தப் பேச்சு மெய்யே, நூறு நாழிகை தூரத் திலிருந்து வஸ்துக்களைத் தெரிந்து கொண்டு போகிற நீ இன் றைக்கு வேடன் வலையைப் பாராமற் சிக்கிக் கொண்டையே! பார்! சந்திர சூரியர்களுக்கு இராகு கேதுக்களால் பீடை வரு தலும், யானையும் பறவையும் பாம்புங் கட்டுப்படுதலும், புத்தி சாலிகளுக்கு வறுமை வருதலுந் தெய்வத்தின் மகிமையே அல் லாமல் வேறல்ல," என்று சொல்லிச் சித்திரக்கிரீவன் கட்டுண் டிருக்கிற வலைக் கயிற்றை அறுக்கத் தொடங்கிற்று. அப்போது சித்திரக்கிரீவன்: "மித்திரா! முன்னே என் பரிவாரத்தினுடைய கயிற்றை அறு, பிறகு என் பாசத்தைத் துணி" எனக் கேட்டு,

எலி: "என் பல்லு மிகவும் மெதுவானது, அதற்குப் பலமுங் கொஞ்சம், ஆகையால் இத்தனை பெயருடைய பந்தனைகள் எனக்கு எப்படி அறுபடும்? ஆதலால் உன் தளையை அறுத்துப் பின்பு என் சாமர்த்தியத்திற்குத் தக்கதாக அவர்களுடைய தளையையும் அறுப்பேன்" என, சித்திரக்கிரீவன்: "நல்லது, முன்னே இவர்களுடைய பாசத்தை அறு" என, இரணியகன் தன்னைக் காப்பாற்றிக் கொண்டு பிறகு தன் பரிவாரங்களைக் காப்பாற்ற வேண்டும்; ஏனென்றால், அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய இவைகளுக்குப் பிராணன் முக்கிய சாதனம் ஆம். ஆகையால், அதைக் காப்பாற்றினால் எல்லாவற்றையுங் காப்பாற்றினால் போல் ஆகிறது" என, சித்திரக்கிரீவன் "இந்த நீதி சரிதான். ஆனால் இப்படிப்பட்ட வேதனையினின்றும் பாலனம் பண்ணுகிறதுக்கு அல்லோ என்னை இவர்கள் இராஜாவாக நினைக்கிறார்கள்; ஆகையால் என் பிராணனிடத்தில் இச்சையை விட்டு, இவர்களைப் பிழைப்பி" என, அதைக் கேட்டு எலி சொல்லுகிறது: "நீ பரம சாது, அடுத்தவர்களை ஆதரிக்கிறவனாய் இருக்கிறாய், எசமானனிடத்தில் விசுவாசமாய் இருக்கிற சேவகனும் சேவகனிடத்திற் பிரீதியாய் இருக்கிற எசமானனுஞ் சுகம் அடைவார்கள்" என்று சொல்லி, எல்லாவற்றின் பாசங்களையும் அறுத்துப் பின்பு சித்திரக்கிரீவனுடைய கட்டைச் சேதித்தது. பிறகு ஒன்றுக்கொன்று தழுவிக் கொண்டு, பிரிய வார்த்தைகள் சொல்லின பிறகு சித்திரக்கிரீவன் பரிவாரத்தோடு கூடத் தன்னிடத்திற்குப் போனது.



4. §. THE RAT AND THE CROW. THE FOX AND THE ANTELOPE.

லகுபதனன் என்னுங் காகம் இவை எல்லாம் பார்த்து, ஆச்சரியப் பட்டு, இரணியகனைப் பார்த்துச் சொல்லுகிறது: "நீ பாக்கியவானாய் இருக்கிறாய், ஆகையால் நானும் உன் சிநேகத்தை

விரும்புகிறேன், ஆனால் நீ தயை செய்து எனக்குச் சிநேகனாக வேண்டும்" என, அப்போது இரணியகன், "நீ யார்?" என, காகம் "நான் லகுபதனன் என்கிற காக்கை" என, அதைக் கேட்டு, எலி, "ஆனால் உனக்கும் எனக்கும் வெகுதூரம், உலகத்தில் சமானஸ்தர்களுக்கே சிநேகம் உண்டாகிறது, நான் உனக்கு இரை, நீ என்னைத் தின்கிறவன், இப்படி இருக்கையில் இதெப்படி ஆகும்? அது ஆபத்துக்கே மூகாந்தரம் ஆம், நரி சிநேகத்தினால் ஒரு மான் வலையில் அகப்பட்டது போல உன்னால் எனக்குப் பொல்லாங்கு நேரிடும்" என,—லகுபதனன் அதைக் கேட்டு, "மான் எப்படி வலையிற் சிக்கிக் கொண்டது?" என, எலி சொல்லத் தொடங்கிற்று:—

மகத[1] தேசத்திற் சண்பகவனத்தில் மானும் காகமும் ஒன்றுக்கொன்று நட்பாய் இருந்தது. அப்படி இருக்கையில் அந்த மான் மனசின் படி புல்லு முதலானவைகளை மேய்ந்து கொழுத்திருக்கிறதை ஒரு நரி பார்த்து, தனக்குள்ளே ஆலோசிக்கிறது: "இவன் நமக்கு அசாத்தியமாய் இருக்கிறான். ஆகையால் இவனை வஞ்சனையால் கொல்ல வேண்டும்" என்று இப்படி நிச்சயித்து, அதன் சமீபத்திற் போய், "சிநேகிதா! சுகமா?" என, அதைக் கேட்டு மான்: "நீ யார்?" என, நரி "நான் க்ஷுத்திரபுத்தி?"[2] என்கிற நரி, இந்தக் காட்டில் யாரும் அற்ற பாவியாய் ஒருவனாகத் திரிந்து கொண்டிருந்தேன். இன்றைக்கு உன்னைப் பார்த்து மிகுந்த சந்தோஷத்தை அடைந்தேன்; இப்போது உனக்கு வேலை செய்து கொண்டு உன்னிடத்தில் இருக்க இச்சிக்கிறேன்" என, இதைக் கேட்டு மான் "நல்லது" என்றது. பிறகு பொழுது போனவுடனே இரண்டுஞ் சண்பக மரத்தின் கீழே வந்தன. அம்மரத்தின் மேல் வாசம் பண்ணிக் கொண்டிருக்கிற மானின் சிநேகிதனாகிய சுபுத்தி[3] என்னுங் காகம் இவ்விரண்டையும் பார்த்து, மானைக் கேட்கிறது: "ஓ, மித்திரா! உன்னண்டையில் இருக்கிறவன்

1. The kingdom of Magada.

2. *Sharp-wit.*

3. *Good-sense.*

ளூர்?" என, மான் "இந்தச் சம்புகன் என்னுடனே சிநேகித்திருப்பேன் என்கிறான்" என, அப்போது காகம், "மித்திரனே! சடிதியில் வந்த வழக்கம் இல்லாதவனை நம்பல் ஆகாது, ஒருவன் குலமும் நடத்தையுந் தெரியாமல் அவனுக்கு இடங் கொடுக்கல் ஆகாது, கொடுத்தால் ஒரு பூனைக்குச் சரற்கவன் என்னுங் கழுகு இடங் கொடுத்து இறந்தாற் போல் நேரிடும்" என,—அதைக் கேட்டு, மான் "சரற்கவன் எப்படிச் செத்தான்?" என, காகஞ் சொல்லுகிறது:—



5. THE CAT AND THE EAGLE.

பாகீரதி[1] தீரத்தில் திரிகூடம் என்னும் மலையில் ஒரு முதிய இத்திமரத்தின் பொந்தில் வாசம் பண்ணிக்கொண்டிருக்கிற நகமுங் கண்ணும் இல்லாத சரற்கவன் என்னும் ஒரு கிழக் கழுகானது மற்றைப் பட்சிகள் தன்னிடத்தில் இரக்கம் வைத்துத் தங்கள் ஆகாரத்தில் கொஞ்சங் கொஞ்சம் நெருக்கிக் கொடுக்கத் தின்று கொண்டு சீவித்திருக்கையில், ஒரு நாள் நெடுஞ்செவியன் என்னும் பூனை பறவைகளுடைய குஞ்சுகளைத் தின்ன வேண்டி, அந்த மரத்தின் கீழே வர, அதைக் குஞ்சுகள் பார்த்துப் பயந்து, பெருங் கூச்சல் இட்டன. கழுகு அதைக் கேட்டு, "நீங்கள் ஏன் பயப்படுகிறீர்கள்? இங்கே யார் வந்தான்?" என, இதற்குள்ளே பூனை சரற்கவனைப் பார்த்து, "நான் செத்தேன்" எனப் பயப் பட்டு, உடனே மனதில் தைரியம் பண்ணிக் கொண்டு, "இந்தச் சத்துருவைத் தப்பித்துக் கொண்டு ஓடுகிறதற்கு நமக்குச் சக்தி இல்லை, ஆகையால் இவன் சமீபத்தில் போக வேண்டும், பின்னர் எது உண்டாகுமோ அது உண்டாகட்டும்" என்று இப்படி நிச்சயித்து, அந்தக் கழுகின் கிட்டே போய்ச் சொல்லுகிறது: "சமர்த்தனே! உனக்கு வந்தனம் பண்ணுகிறேன்" என,—கழுகு அதைக் கேட்டு, "நீ யார்?" என,—அப்போது பூனை,

[1] The Ganges.

"நெடுஞ் செவியன் என்னும் பூனை" என, பின்பு சரற்கவன் "நீ சீக்கிரமாய் இவ்விடம் விட்டோடிப் போ, இல்லா விட்டால் சாவாய்" என, பூனை "நான் என் விர்த்தாந்தத்தைச் சொல்லுகிறேன், அதைக் கேள்; பிறகு கொல்லத் தக்கதானாற் கொல்லு; ஏனென்றால், சாதி[2] பேதத்தினாலேயே பிராணிகளைக் கொல்லுவதாவது பூசிப்பதாவது யோக்கியம் அல்ல; ஆதலால், அவன் அவன் நடத்தையைப் பார்த்து எது செய்யத் தக்கதோ அது செய்ய வேண்டும்" என, கழுகு இதைக் கேட்டுப் பூனையைப் பார்த்து, "ஆனால் நீ ஏன் வந்தாய்? சொல்" என, பூனை "நான் கங்கா தீரத்தில் நித்திய ஸ்நானம் பண்ணிச் சாந்திராயணம் முதலாகிய விரதங்கள் ஆசரித்துக் கொண்டிருக்கிறேன்; நீ மிகவுந் தருமவானாய் இருக்கிறாய் என்று பட்சிகளால் எப்போதுங் கேள்விப் படுகிறதினால் நான் உன்னிடத்திற்கு வந்தேன்; ஏனென்றால், வயதில் முதிர்ந்த வித்துவானிடத்தில் தருமங் கேட்க வேண்டும் என்று சாஸ்திரம் இருக்கிறது; ஆனால் நீ தருமத்தை விட்டு என்னைக் கொல்லத் துணிந்தாய்; இப்படி இல்லறத்தாருடைய ஆசாரம் எங்கும் பார்த்ததில்லை; சத்துருவுந் தன் வீட்டுக்கு வந்தால் சாதுக்கள் அவனுக்குச் சமமானம் பண்ணுவார்கள்; மரந் தன்னை வெட்டுகிறவனுக்கு நிழல் கொடுக்கவில்லையா? மேலுஞ் சாதுக்கள் தங்கள் வீட்டுக்கு எவன் வந்தாலும் பூசிக்கிறார்கள், குறைச்சல் ஒன்றும் பண்ணுகிறதில்லை; இதற்குக் காரணம் என்னவென்றால், அதிதி[3] யாருடைய வீட்டுக்கு வந்து முகம் வாடிப் போகிறானோ அவன் தன் பாவத்தை அவ் வீட்டெசமானனுக்குக் கொடுத்து, இவன் புண்ணியத்தைக் கைக் கொண்டு போகிறான். ஆகையால், சாதுக்கள் எல்லாரிடத்திலுந் தயை செய்கிறார்கள்; சந்திரன் சண்டாளன் வீட்டிலும் பிரகாசிக்கிறான்" என, இதைக் கேட்டுக் கழுகு சொல்லுகிறது: "பூனை இறைச்சிகளைத் தின்னுகிறது, மேலுந்

[2] Poetical anthology, verse 474.

[3] Compare Poet. Anthology, verse 398.

கொலை செய்கிறது என்று நினைத்து, அது இப்படி நான் சொன்னேன்" என, அதைக் கேட்டு நெடுஞ் செவியன் பூமியைத் தொட்டுச், "சிவ! சிவ!"[4] என்று உச்சரித்து, காதின் மேற் கையை வைத்து, சொல்லுகிறது: "நான் தரும சாஸ்திரங்கள் கேட்டு, மிகுந்த வைராக்கியம் அடைந்து, பொல்லாத கருமங்களை எல்லாம் விட்டு விட்டேன். ஏனென்றால், அநேக சாஸ்திரங்களில் கொலை செய்வது போல வேறொரு பாதகம் இல்லை என்று சொல்லி இருக்கின்றது. ஏனென்றால், எவர்கள் மற்றொருவனைக் கொன்று தங்களுக்குச் சுகத்தை விரும்புகிறார்களோ அவர்கள் நரகத்தை அடைகிறார்கள்; ஆகையால், கொலை செய்யாமல் இருப்பது போல வேறொரு தருமம் இல்லை என்று நினைத்துக் காட்டில் இருந்து கொண்டு, காய் கனி கிழங்குகளைச் சாப்பிடுகிறவர்கள் பாதகம் எப்படிப் பண்ணுவார்கள்?" என்று சொல்லிக் கழுகுக்கு நம்பிக்கை வரப் பண்ணி, அதன் வீட்டில் இருந்தது. பிறகு அந்த ருத்திராட்சப்பூனை[5] பட்சிகளின் குஞ்சுகளை நாடோறும் அங்கே கொண்டு வந்து தின்று கொண்டிருக்கத் தலைப்பட்டது. அப்போது, குஞ்சு இழந்த பறவைகள் எல்லாங் கிலேசப் பட்டு, பிறகு எல்லாம் ஒன்றாய்க் கூடித் தங்கள் குஞ்சுகளைச் சோதிக்கத் தொடங்கின. பூனை இதை அறிந்து அவ்விடம் விட்டோடிப் போயிற்று. பின்பு அந்தப் பட்சிகள் அங்கே பார்த்துக் கொண்டே கழுகின் பொந்தண்டை வந்து பார்க்கையில் அந்தக் குஞ்சுகளுடைய எலும்புகளுஞ் சிறகுகளும் விழுந்து கிடக்கக் கண்டு, "நம்முடைய குஞ்சுகளை இந்தத் துரோகிக் கழுகே பட்சித்தது" என்று நிச்சயித்துப் பிறகு அந்தக் கழுகைக் கொத்திக் கொன்றன. ஆகையால், ஒருவனுடைய குணந் தெரியாமல் அவனுக்கு இடங் கொடுக்கல் ஆகாது; என,—

4. A common interjection.

5. See இருத்திராக்ஷம்.

6. THE FOX ADMITTED.

அப்போது நரி சொல்லுகிறது: "உன் சுபாவம் இவனுக்குச் சிநேகிக்கிறதற்கு முன்னே தெரியுமா? ஆகையால், நல்லோர்களுக்குச் சுபாவத்தினாலே காரியம் இல்லை, அவர்களுடைய சிநேகங் கண்ட மாத்திரத்தினாலேயே ஆகிறது" என,—மான் அதைக் கேட்டு, "எப்படி நீ எனக்கு மித்திரனோ அப்படியே இவனும் இருக்கட்டும், நீ ஒன்றுந் தடை சொல்லாதே!" என்று சொல்லி நரியைத் தன்னிடத்தில் வைத்துக் கொண்டது. பிறகு மூன்றுந் தங்கள் மார்க்கத்தின்படி வயிற்றை நிரப்பிக் கொண்டு ராத்திரிக்கு அந்த இடத்தில் வந்துகொண்டிருந்தன. இப்படி இருக்கையில் ஒரு நாள் நரியானது மானைப் பார்த்து, "மித்திரா! இந்தக் காட்டில் இளவிளவென்று நேற்றியான பயிர் இருக்கிறது. அதை உனக்குக் காண்பிக்கிறேன்" என்று சொல்லி, அதை இட்டுக் கொண்டு போய்க் காட்டிற்று. அன்று முதலாய் அந்த மான் போய்த் தினமானம் பயிரை மேய்ந்து கொண்டிருக்கையில் அதைக் கொல்லைக்காரன் பார்த்து, அங்கே வலை கட்டினான். பின்பு மான் அங்கே வழக்கப்படி மேயப் போய், அதில் சிக்கிக் கொண்டு, "இப்போது என்னை மித்திரனைத் தவிர யார் விடுவிப்பான்?' என்று மனதில் எண்ணிக் கொண்டிருக்கையில், நரி அங்கே வந்து, "என்னுடைய மனோரதம் நிறைவேறிற்று, இப்போது நான் இதன் எலும்பையும் மாமிசத்தையும் நிரம்பத் தின்னுவேன்" என்று வாய் ஊற மனதில் எண்ணிக்கொண்டு, சும்மா இருந்தது. அதைக் கண்டு மான் சொல்லுகிறது: "மித்திரா! ஏன் சும்மா இருக்கிறாய்? என்னுடைய தலையைச் சீக்கிரமாய் அறுத்து என்னை விடுவி; ஏனென்றால், சங்கட காலத்தில் சிநேகிதர்கள் உடை இழந்தவன்கை போல் உதவுகிறார்கள்" என,[1]—சம்புகம்: "ஆம், நீ சொல்வது எல்லாம் மெய்யே, ஆனால் எனக்கு இன்றைக்கு விரததினம், ஆகையால் நான் இந்தத் தோல் வலையைத் தீண்ட மாட்டேன், நாளைக்கு என்ன சொன்னாலுங் கேட்பேன், சிநேகிதனுக்காக நான்

[1] Compare Poet. Anthology, verse 27.

பிராணனை விடத் தக்கவன்" என்று சொல்லி, அதன் கண்ணுக்குத் தப்பித்துக் கொண்டு, அங்கே ஓர் அண்டை ஒளித்துக் கொண்டிருந்தது. பிறகு காகம் "இராத்திரிக்கு மான் வரவில்லை," என்று அதைத் தேடும் பொருட்டு இங்கும் அங்குந் திரிந்து கொண்டு, அங்கே வருகையில் அந்த மானின் அவஸ்தையைப் பார்த்துக் கேட்கிறது: "சிநேகிதா! உனக்கு இந்த அவஸ்தை இப்படி ஏன் வந்தது?" என,—மான்: "இது உன் வார்த்தையைக் கேளாமையால் வந்த பலம்" என,—காகம்: "உன் கூட்டாளியான சம்புகன் எங்கே போனான்?" என,—மான்: "என்னுடைய இறைச்சியைத் தின்கிறதற்காக இங்கே தானே ஒளித்துக் கொண்டிருப்பான்" என,—அதைக் கேட்டுக், காகம்: "தனக்கு இதம் பண்ணுகிற மித்திரன் பேச்சைக் கேளாதவனுக்கு விபத்துச் சீக்கிரமாக வரும், பின்னும் அவன் சத்துருவுக்குச் சந்தோஷம் வருவிக்கிறான்" எனச் சொல்லிக்கொண்டிருக்கையில், கொல்லைக்காரன் கையில் ஒரு தடியை எடுத்துக் கொண்டு வர, அவனைப் பார்த்துக் காகம் மானுக்குச் சொல்லுகிறது: "மித்திரா! நீ இப்போது மூச்சை அடக்கிக் கொண்டு செத்தவனைப் போல்க் கிடந்தால் அவன் உன்னைப் பார்த்து, நீ செத்தாய் என்று எண்ணிக் கொண்டு கட்டிய வலையை அவிழ்த்துச் சுருட்டி வேறோர் இடத்தில் வைக்கப் போவான். அப்போது நான் கத்துகிறேன், அதைக் கேட்ட மாத்திரத்தில் நீ மிகவும் விரைவாய் ஓட்டம் பிடி" என்று சொல்லி, தான் அப்படியே பொய்யாக மானின் கண்ணைக் குத்திக் கொண்டிருந்தது. இதற்குள்ளே அந்த கொல்லைக்காரன் மானைப் பார்த்து, இது செத்தது என்றெண்ணி, கட்டி இருந்த வலையை அவிழ்த்து, ஓரிடத்தில் ஒன்றாகக் கூட்டி வைக்கப்போனான். காகம் அதைப் பார்த்துச் சங்கேதப்படி கத்த மான் அதைக் கேட்ட உடனே ஓட்டம் பிடித்தது. அதைக் கொல்ல நினைத்து அந்தக் குடியானவன் தடியை விசிறி எறிய அது பதிவிருந்த நரி மேல் பட்டு இறந்தது. ஆகையால், புண்ணியமாவது பாவ

மாவது பிருதி ஆனால் தன் பலனுடனே உண்டாகிறது" என்று சொல்லி, பின்னும் எலி: "இப்படி மானுக்கு நரி சிநேகம் போல் உன் உறவு உபயோகம் அன்று" என,—காகம்: "உன்னைத் தின்றால் எனக்குப் போதுமா? நீ பிழைத்திருந்தால் நான் சித்திரக்கிரீவனைப் போல் சுகம் அடைவேன் என்று உன் நட்பை விரும்புகிறேன்" என,—பின்னும் இரணியகன்: "நீ எனக்குப் பகைவன், உன்னுடனே நான் சிநேகம் பண்ணுகிறதில்லை; ஏனென்றால், சத்துரு தனக்கு அனுகூலமாய் இருந்தாலும் அவனோடே சிநேகிக்கல் ஆகாது; தண்ணீர் வெந்நீர் ஆனாலும் நெருப்பை அவிக்கும்; ஆகையால், எது தக்கதோ அதைச் செய்ய வேண்டும். தண்ணீரில் வண்டியும் பூமியின் மேற் கப்பலும் நடக்குமா? இதனாற் சத்துருக்களிடத்திலும் வியபிசாரி இடத்திலும் நம்பிக்கை வைக்கல் ஆகாது," என்று இப்படிப் பலவிதமாகச் சொல்ல, காகம்: "நான் உன்னுடனே சிநேகிப்பேன், இல்லாவிட்டாற் பட்டினியாக இருந்து இங்கேயே பிராணனை விடுவேன். நெருப்பின் வெப்பத்தினால் பொன்முதலானவை உருகி ஒன்றுகிறது. யாதொரு நிமித்தத்தினாலே விலங்கு பறவைகள் மித்திரத்துவத்தை அடைகின்றன. பயத்தினால் ஆகிலும் யாதொரு ஆசையினால் ஆகிலும் மூடர்களுக்குச் சிநேகம் உண்டாகிறது. ஆனால், சாதுக்களுடைய சிநேகங் கண்டமாத்திரத்தில் உண்டாகிறது. மண்பானை சீக்கிரமாய் உடைகிறது, பிறகு பொருந்துகிற தில்லை, பொன் குடஞ் சீக்கிரத்தில் உடையாது; உடைந்தால் ஒன்றும்;[2] இப்படியே துர்ச்சனர் சற்சனர்களுடைய சிநேகம் இருக்கிறது" என,—இதைக் கேட்டு இரணியகன் சொல்லுகிறது: "உன் வார்த்தையால் நான் சந்தோஷம் அடைந்தேன், இப்போது உனக்கும் எனக்குஞ் சிநேகத்துவம் இருக்கட்டும்; இனிமேல் நாம் இருவரும் ஒரு மனதாய் இருக்கவேண்டும், உபகாரம் பண்ணுகிறவன் மித்திரன் என்றும், அபகாரம் பண்

[2] Comp. Poet. Anthology, verse 273.

னுகிறவன் சத்துரு என்றும் அறிந்து, மனக்களங்கம் இல்லாமல் நடக்க வேண்டும்" என்று இப்படிப் பேசி நிச்சயித்து, இரணி யகன் லகுபதனனுக்குச் சிறிது ஆகாரங் கொடுத்துத் தன் வளை யிற் போயிற்று. சிநேகலாபம் பெற்ற காகமும் அதனிடத்தில் செலவு பெற்றுக் கொண்டு, தன்னிடத்திற்குப் போயிற்று. அது முதலாய் இவைகள் அத்தியந்தஞ் சிநேகமாய் ஒன்றுக் கொன் று ஆகாரங் கொடுத்துக் கொண்டு, பலபல வார்த்தைகள் பேசிக் கொண்டிருக்கையில் ஒரு நாள் லகுபதனன் எலியைப் பார்த்து, "மித்திரா! இப்போது இங்கே இரை அகப்படாமையால் வே றோர் இடத்துக்குப் போக இச்சிக்கிறேன்" என,—அதைக் கேட் டு இரணியகன்: "எங்கே போகிறாய்?" என,—அப்போது அது "தண்டகாரணியத்திற் கர்ப்பூரகௌரம் என்கிற தடாகத்தில் இ ருக்கிற ஆமை ஆகிய மந்தரன் என்பவன் எனக்குச் சிநேகித னாய் இருக்கிறான்; அவன் எனக்கு விதம் விதமான மீன்களைக் கொடுத்துப் போஷிப்பான், அதைக் குறித்து நான் அவனிடத் துக்குப் போகிறேன்" எனக் கேட்டு, இரணியகன், "மித்திரா! அவ்விடத்துக்கு என்னையுங் கொண்டு போக வேண்டும், நான் தேசாந்தரம் போக விரும்புகிறேன்" என,—அப்போது காக்கை: "நீ அப்படி விரும்புவானேன்?" என,—இரணியகன்: "அங்கே போன பின்பு சொல்லுவேன்" என,—பிறகு லகுபதனன் இர ணியகனை எடுத்துக் கொண்டு அந்த இடத்துக்குப் போயிற்று. அவைகளைப் பார்த்து மந்தரன் அவ்விரண்டுக்கும் ஆதித்தியம் பண்ணிற்று. அப்போது லகுபதனன் மந்தரனைப் பார்த்து, "இந்த இரணியகன் மிகவும் பரோபகாரி, இவன் சித்திரக்கிரீ வனை அவன் கூட்டத்தோடு கூட வலையினின்றும் விடுவித் தான், அப்போது இவன் நட்பினிலைமையைப் பார்த்து நானும் இவனுடனே நட்புக் கொண்டேன்" என,—அதைக் கேட்டுக் கூர் மஞ் சந்தோஷப் பட்டு, இரணியகனைப் பார்த்து, "மித்திரா!

நீ இந்த மனித சஞ்சாரம் இல்லாக் காட்டில் வருவானேன்?" அப்போது எலி சொல்லுகிறது:—

---

### 7. §. THE RAT'S STORY.

சம்பகாவதி என்னும் பட்டணத்தில் சூடாகர்ணன் என்னும் ஒரு சந்நியாசி உண்டு; மிகுந்த சோற்றைக் கப்பரையில் போட்டு உறியின் மேல் வைத்து விட்டு நித்திரை பண்ணிக் கொண்டிருப்பான். பின்பு அந்தச் சோற்றை நான் தின்று கொண்டு சுகமாய் இருக்கிற நாளில் அங்கே வீணாகர்ணன் என்னும் ஒரு சந்நியாசி வந்து அவனோடு கூட அநேக கதாப்பிரசங்கம் பண்ணிக் கொண்டிருக்கையில், அந்தச் சூடாகர்ணன் கையில் ஒரு தடியினாலே பூமியைத் தட்டிக் கொண்டு, சோற்றைக் காப்பாற்றிக் கொண்டிருந்தான். அப்போது வீணாகர்ணன் "என்னுடைய கதையை அநாதரவு பண்ணி நடுவே வேறே என்ன வியாபாரத்தில் இருக்கிறாய்?" என,—சூடாகர்ணன் உன் வார்த்தையை அநாதரவு பண்ண வில்லை. ஆனால் இவ்வெலி என் பாத்திரத்தில் இருக்கிற அன்னத்தை நாடோறுந் தின்னுகிறது; அதை ஓட்டுகிறேன் என,—வீணாகர்ணன் அப்போது உறியைப் பார்த்து அவனுக்குச் சொல்லுகிறான்: "கொஞ்ச பலம் உள்ள இந்த எலி இவ்வளவு உயரம் எப்படிக் குதிக்கிறது? ஆகையால், இதற்கு ஏதோ ஒரு காரணம் இருக்க வேண்டும்; அது தான் ஏதுவாய் இருக்கலாம் என்று ஆலோசித்துப் பார்த்தால் மிகவும் இங்கே திரவியம் இருக்கும்; ஏனென்றால், உலகத்தில் திரவியம் உள்ளவர்கள் பலமுள்ளவர்களாய் இருக்கிறார்கள். அசாத்தியமான காரியங்களைச் சாதிக்கிறார்கள். ராசத்துவத்துக்கும் இது காரணம் ஆகும், எல்லாம் இதனால் ஆகின்றன," என்று சொலல, அந்தச் சந்நியாசி இதைக் கேட்டு மெய்தான் என்று நம்பி, பூமியை வெட்டி, ஐயோ! என் திரவியத்தை எடுத்துக் கொண்

டான். அன்று தொடங்கி நான் இளைத்துப் போனேன், பின்பு எனக்கு இரையுங் கிடையாததினால் மெள்ள மெள்ள நடந்து கொண்டிருக்கையில் அந்தச் சந்நியாசி பார்த்து, "பார்! இந்த எலி இப்போது தன்னுடைய சாதித்தன்மையை அடைந்திருக்கிறது, முன் இருந்த மதம் போய் விட்டது; ஆகையால், பண மில்லாதவர்களை எல்லோரும் அற்பமாய் நினைக்கிறார்கள்" என,— இதைக் கேட்டு, நான் இப்போது இங்கே இருக்கிறது சரி அன்று, இதை வேறொருவரோடுஞ் சொல்லல் ஆகாது; ஏனென்றால், பொருள் இழவுங் கிரகச்சித்திரமுந் தானமும் மானமும் அவமானமும் ஆயுளும் தனமும் ஆகிய இவைகளைப் புத்திமான் வெளிப்படுத்தல் ஆகாது; தன் விதி பிரதிகூலமாய் இருக்குங் காலத்தில் பராக்கிரமமும் முயற்சியும் வீண் ஆகின்றன. ஆகையால், பணமில்லாதவனுக்கு வனவாசத்தைக் காட்டிலும் சுகம் இல்லை. எந்த இடத்தில் நாம் பணக்காரனாய் இருந்தோமோ அந்த இடத்தில் ஏழையாய் இருக்கிறது உத்தமம் அன்று என்று, மறுபடி இழந்த பணத்தை எடுத்துக் கொள்ள ஆயத்தப் பட்டேன்; அப்போது சந்நியாசி என்னைத் தடியால் அடித்தான். அதனால் மிகவுந் துக்கப் பட்டு, உன் சிநேகிதனோடே கூட இங்கே வந்தேன்" என,—"மந்தரன்! மித்திரா! நீ இதனால் அதைரியப்பட்டு, உறை விடந் துறந்தோம் என்று வருத்தப் பட வேண்டாம். ஏனென்றால், சாதுக்கள் எங்கேபோனாலும் மரியாதை பெறுகிறார்கள்.[1] சிங்கம் வேறொரு காட்டுக்குப் போனாலும் புல்லைத் தின்கிறதில்லை, யானையையே தின்னும்; ஆகையால், உச்சாகமுள்ளவன், சந்தோஷமுள்ளவன், தைரியசாலி, சூரன், களங்கமில்லாதவன் இவர்களிடத்தில் லட்சுமி தானே வந்து அடைகிறாள்; நீ பணம் இழந்தாலும் எப்போதுஞ் சந்தோஷத்தோடே கூடி இருக்கிறாய்; ஆகையால், உனக்கிருக்கிற சுகம் பணத்தாசையால் மயங்குகிற

1. See Poet. Anthology, verse 12.

வர்களுக்கு இல்லை; இன்னுங் கேள்,—மேகச்சாயை, துஷ்டனு டைய தயை, இளம் புல், பாலஸ்திரீ, யௌவனம், தநம் இவை கள் வெகு நாளைக்கு நில்லா; ஆகையால் இவை இழந்து போனால் அழுது கொண்டு ஆகாரத்தைக் குறித்து ஏங்கி இருக்கல் ஆகாது; ஏனெனில், எவன் கர்ப்பத்தில் இடுகிறானோ, அவன் பிறக்கிற தற்கு முன்னே தானே தாய் முலையிற் பாலை அமைத்து வைக்கி றான். அப்படிப் பட்டவன் ஆயிசுள்ளவரைக்குங் காப்பாற்ற மாட்டானோ? நீ நல்ல விவேகியாய் இருக்கிறதினால் இவை எல் லாம் உனக்குத் தெரிந்தே இருக்கும்; இனிச் சிநேகமாய் என்னி டத்தில் சுகமாய் இரு" என,—இவை எல்லாங் கேட்டுப் பிறகு லகுபதனன் சொல்லுகிறது: "மந்தரா! நீ சகல குண சம்பன்னன்; மேலுஞ் சற்சனன் சாதுக்களுக்கு வந்த ஆபத்தைச் சாதுக்களே நிவிர்த்தி பண்ணுகிறார்கள் என்று அறிந்து, நாங்கள் உன்னை நாடி வந்தோம் என்று சொல்லி, நீண்ட பெரிய மரத்தின் மேற் போய் உட்கார்ந்து, தன் சுபாவப் படியே இங்கும் அங்கும் பார்த் துக் கொண்டிருக்கையில், ஏதோ ஒரு பய முகாந்தரத்தை அறிந்து, அவ்விரண்டுக்கும் நீங்கள் உங்களிடத்தில் ஒளித்துக் கொண் டிருங்கள்" என,—மந்தரன் தண்ணீரிற் போயிற்று; எலி வளை யில் நுழைந்தது.

8. §. THE ANTELOPE JOINS THE PARTY.

காகம் விருட்சத்தின் நுனியிலிருந்து பார்க்கையில் ஏதொன் றுங் காணப் படாமையாற் பின்பு அம்மூன்றும் ஒன்றுக் கொன்று பேசிக் கொண்டிருக்கையில், அங்கே அவைகளின் சமீபத்தில் சித்திராங்கன் என்னும் ஒரு கலைமான் வந்து சொல்லுகிறது: "நான் வேடர் பயத்தால் உங்களிடத்தில் இருக்கலாம் என்று வந்தேன்" என,—அதைக் கேட்டு மந்தரன் அதற்குச் சமமானம் பண்ணி, "இது உன் வீடு, நான் உன் சேவகன் என்று எண்

ணிக் கொண்டு, சுகமாய் இருக்க வேண்டும்" என,—முகம் மலர்ந்து மனங் கலந்த இன்சொற் சொல்ல, பிறகு அதுவும் இவைகளுடன் நட்புக் கொண்டிருந்தது. அப்படி இருக்கையில் ஒருநாள் சித்திராங்கன் என்னும் மான் புல் மேய வேறோரிடத்திற்குப் போய் மீண்டு சாயங்காலம் வராமையால் ஆமை, "மேயப் போன மான் இன்றைக்கு ஏன் சாயந்தரம் வரவில்லை?" என்று விசனப்பட அதை அறிந்து எல்லாம் விசனம் அடைந்தது. மறுநாள் விடியற் காலத்தில் காக்கை பறந்து நாலு பக்கத்திலும் பார்த்துக் கொண்டு போகையில் சித்திராங்கன் தோல் வலையில் அகப்பட்டிருக்கிறதைக் கண்டு, அதன் கிட்டே போய்ச் சொல்லுகிறது: "மித்திரா! உனக்கு இந்த அவஸ்தை எப்படி நேரிட்டது?" என,—மான்: "இப்போது இதைக் கேட்டுப் பிரயோசனம் இல்லை; ஆனால் நீ போய் இரணியகனைச் சீக்கிரமாய் இட்டுக் கொண்டு வந்தால், அவன் வேடன் வருகிறதற்குள் என் பாசத்தை அறுத்து என்னை விடுவிப்பான்; வேடன் வந்தால் ஒருபாயமும் நடவாது" என,—இதைக் கேட்ட உடனே விரைவாகப் போய் அவைகளுடனே நடந்த காரியத்தைச் சொல்லி, இரணியகனை இட்டுக் கொண்டு வந்தது. வந்த இரணியகன் மானைப் பார்த்து, "நீ சமர்த்தனாய் இருக்கையில் வலையில் எப்படி அகப்பட்டாய்?" என,—மான் வல்லமை இருந்தாலும் வருவது வரும், இப்போது என்னைச் சீக்கிரமாய் விடுவி, எனக்குப் பழைய பயம் இருக்கிறது; ஏனென்றால், முன் நான் குட்டியாய் இருக்கையில் வேடன் வலை கட்டி என் கூட்டத்தை வளைத்தான். ஆனால், மற்றவைகள் பெரிய மான்களாய் இருந்தபடியால் குதித்து வலையைத் தாண்டிப் போயின. எனக்குக் குதித்தோடச் சக்தி இல்லாதிருந்தது, ஆதலால் வேடன் பிடித்து ராஜாவினிடத்தில் கொண்டு போனான். ராஜா வாங்கித் தன் பிள்ளை கையிற் கொடுக்க அங்கே நான் வெகு நாள் இருந்து

கொண்டிருக்கையில் ஒரு நாள் மேக கர்ச்சனையைக் கேட்டு நான் மிகவுஞ் சஞ்சலப் பட்டு, மனுஷ பாஷையினால் எனக்குள்ளே பேசிக் கொண்டேன். என்னவென்றால், 'காற்று மழையால் பிடிக்கப் பட்டு மான் கூட்டங்கள் ஓடும் போது அவற்றின் பின் நான் ஓடுவேனா?' என,—ராஜ குமாரன் இதைக் கேட்டு நாற்றிசையும் பார்த்து என்னைப் பார்த்தான். பின்பு சற்று நேரஞ் சும்மா இருந்து இது மனுஷனைப் போல் எப்படி உச்சரித்தது? ஆகையால், இது ஒரு விசித்திரப் பிராணியாய் இருக்கிறது என்று நினைத்து, பயத்தினால் சுரத்தில் விழுந்தான். பிறகு விடியற்காலத்திற் சோதிஷர்களை அழைப்பித்து அவர்களுடனே இதைச் சொல்ல, அவர்கள், 'எல்லா மிருகங்களும் மனிதனைப் போல் பேசுகின்றன; ஆனால், நமக்கு முன்னே பேசுகிற தில்லை, அதுவும் உன்னைப் பாராமற் பேசிற்று; இதற்காக நீ பயப்பட வேண்டாம், இது யாதொரு விசித்திரப் பிராணி அன்று; இதனால் உனக்கு எவ்வளவும் பயமில்லை' என,—இதைக் கேட்டு, ராஜ குமாரன் என்னை விட்டு விட்டான். பிறகு இக்காட்டில் வந்தேன், இப்படி முன்னொருதரம் வலையில் அகப் பட்டேன், ஆகையால், என்னைச் சீக்கிரமாக விடச் சொல்லுகிறேன்" என,—இதற்குள்ளே மித்திரத்துவத்தினாலே மந்தரனும் அங்கே வந்து இரணியகனைப் பார்த்து, மித்திரா! இப்படித் தாமசம் பண்ணுகிறது சரி அன்று, இப்போது வேடன் வந்தால் நாம் எல்லாம் ஓடிப் போவோம்; ஆனால், வலையில் அகப் பட்ட சித்திராங்கனைப் பிடித்துக் கொள்வான், இதைக் குறித்து எனக்குக் கிலேசமாய் இருக்கிறது; ஏனென்றால், நினைப்பின் படி மனதில் இருக்கிறதை அறிகிற சிநேகிதனும் மனோகர ஸ்திரீயும் பிறர் துக்கம் அறிகிற பிரபுவும் கிடைக்கிறது அருமை," என்று இப்படி மந்தரன் சொல்லிக் கொண்டிருக்கையில், வேடன் சடுதியில் இயமனைப் போல் தூரத்தில் வருகிறதை

லகுபதனன் கண்டு எலியைப் பார்த்து, "மித்திரா! வேடன் வந்தான், இப்போது பெரிய சங்கடம் நேரிட்டது" என,— அதைக் கேட்டு இரணியகன் அதி சீக்கிரமாய்ச் சித்திராங்கன் வலையை அறுத்தது; அறுத்த உடனே கிட்ட வந்த வேடனைப் பார்த்து எல்லாம் ஓட்டம் பிடிக்க, அப்போது அவன் விசனம் அடைந்து, நாலண்டையும் பார்க்கையில் மந்தரன் தன் நடை யின்படி நடந்து கொண்டிருந்தது; வேடன் அதைப் பார்த்துப் பிடித்து, தன் வில்லில் சேர்த்துக் கட்டிக் கொண்டு, கொஞ் சஞ் சந்தோஷத்தோடே போகும் போது அதைப் பார்த்து மானும் எலியுங் காகமும் மிகவுஞ் சிரமப்பட்டு, "இப்போது என்ன செய்யலாம்?" என்று, வேடன் பின்னே போகத் தொடங் கின; அப்போது இரணியகன், "ஒரு சங்கடம் நிவர்த்தி ஆகி றதற்குள்ளே மற்றொன்று வந்து நேரிட்டது; ஆகையால், சீவ னுக்குத் தேகத்தோடு கூட அநேகந் துக்கங்களை அனுபவிக்க வேண்டி இருக்கிறது; இந்தத் துன்பஞ் சிநேகிதனால் நமக்கு வந்தது. ஏனென்றால், எவன் மித்திரனிடத்தில் விசுவாசம் வைக்கிறானோ, அந்த விசுவாசம் அவனுக்குத் தாய் தந்தை சகோதரன் பிள்ளை சுற்றங்களிடத்தில் இராது" என்று இப்படி வெகுவிதமாய்த் துக்கித்து, பின்னும், "வேடன் தூரமாகப் போவதற்கு முன்னே மந்தரனை விடத்தக்க உபாயம் பண்ண வேண்டும்; பிறகு ஆக மாட்டாது," என,—அப்போது அவை கள் "என்ன செய்யலாம்? சொல்" என,—எலி சித்திராங்கன் ஏரிக் கரையில் செத்தவனைப் போலக் கிடக்க வேண்டும்; அதன் மேற் காகம் உட்கார்ந்து கொண்டு பொய்யாகக் குத்த வேண் டும். அப்படி இருந்தால் அதை வேடன் பார்த்து மந்தர னைப் பூமியில் வைத்து விட்டு மான் அண்டை போவான், இதற் குள்ளே நான் ஆமையின் கட்டைச் சேதிப்பேன்; பிறகு அவ்வா மை தண்ணீரில் ஓடிப்போம்" என,—இதைக் கேட்டு, எல்லாம்

அவ்வாறே செய்து, மந்தரனை விடுவித்தன. பிறகு அந்த வேடன் வாய்த் தவிடும் போய் அடுப்பும் நெருப்பும் இழந்தவன் போல் வெட்கி, மிகவும் வருத்தம் அடைந்து, "கைக்கு வாராத பெரிய லாபத்தை இச்சித்து, கைக்கு வந்த சிறிய லாபத்தை இழந்தேனே, யார்க்கும் அதிக ஆசை அதிக நஷ்டம்; கிடைத்த மட்டும் போதும் என்று நினைக்கிறவனே மகா புருஷன்" என்று இங்ஙனம் எண்ணிக் கொண்டு, தன் வீட்டுக்குப் போன உடனே அந்தக் காகமும் ஆமையும் மானும் எலியும் மிகவுஞ் சந்தோஷம் அடைந்து, தங்களிடத்தில் முன்போல வாழ்ந்திருந்தன.

நட்புப்பேறு என்னும் அதிகாரம்

முற்றிற்று.

END OF BOOK II.

# BOOK III.

# TAMIL PROSE READER.

## THE HISTORY OF NALA.

# நளச் சக்கிரவர்த்தியின்

## சரித்திரம்.



**[The history of Nala is an episode of the Mahâbhârata. It is perhaps next to the Râmâyanam the most popular story current among the Hindûs.] The idiom of this story is not purely tamil, but a knowledge both of the story and of the kind of tamil in which it is written is indispensable.**



### 1. §. THE CITY OF NALA AND ITS PROSPERITY.

முன்னே மகாவிந்தபுரம் என்றொரு பட்டணம் உண்டு. அந்தப் பட்டணத்தைப் பார்த்த பேர்கள், "அமராபதியும்[1] அளகாபுரியும்[2] இந்த ரூபமாய் வந்திருக்கிறதோ?" என்று சொல்லிக் கொள்ளுவார்கள். பார்க்கப் பார்க்க மனோரம்மியமாய் வேடிக்கையாக இருக்கும். வீதிகளிலே இரத்தின தோரணங்களும் மாடங்களில் கர்ப்பூர விளக்குகளும் எங்கே பார்த்தாலும் நிறைந்தது. அதல்லாமலும் நவரத்தின மயமாய்ச் சுவர்னமாய் அநேக வித வேடிக்கைகளாய்ச் செய்திராநின்ற மாட மாளிகைகளுங் கூட கோபுரங்களுஞ் சூரிய மண்டலத்தை அளாவி இருக்கும். அதின் பேரில் கட்டி இராநின்ற கொடிகள் சந்திர மண்டலத்தை அளாவி இருக்கும். மகமேரு கிரிகளைப் போலே விளங்

1. The city of Indra.

2. The city of Kuvera, the Indian God of wealth.

33.

கி இருக்கப்பட்ட இரதங்களும், நீலகிரிகளைப் போலே விளங்
கிய மதயானைக் கூட்டங்களும், நல்ல காந்தியும் இலட்சணங்
களுஞ் சூரியன் தேரிற் கட்டிய குதிரைகளைப் பார்க்கிலும்
அதி வேகமும் உள்ள அநேகம் ஆயிரம் உத்தம அசுவங்க
ளும், புய பல பராக்கிரமங்களிலும்[3] தயிரியத்
திலும் மிகுந்த கோடானு கோடி[4] பதாதிகளும்,
அங்கே அணி அணியாய் நிறைந்திருக்கும்.
கற்பக[5] விருட்சங்களுக்கு ஒப்பான விருட்சங்
களும், மல்லிகை, முல்லை,[6] செண்பகம்,[7] இரு
வாட்சி[8] முதலான புஷ்ப சாதிகள் நிறைந்து,
பண்டு பலாதிகளுடனே[9] விநோதமாய் இருக்
151. e.
கப் பட்ட அநேக சிங்கார வனங்களும் உண்டு.
அளவில்லாத ஐசுவரியங்களைப் படைத்த பிர்ம்ம,
க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்களும்,[10] சாதுரியத்தி
னாலே சபை மெய்க்கப்[11] பிரசங்கம் பண்ணுகிற
வித்துவாங்கிசர்களும்[12] உண்டு. மனதிலே நினைத்
த பதார்த்தங்கள் எல்லாம் நிறைந்திருக்கிற கடை
வீதிகளும், மகா பதிவிரதைகள் ஆகிய ஸ்திரீக
ளும், வீணை வாத்தியங்களும் வேணு நாதங்க
ளும்[13] கேளிக்கைகளும்[14] மிகுந்த தேவால்யங்
களும் எங்கும் நிறைந்திருக்கும். இத்தியாதி[15]
சிறப்புகள் பொருந்தி இருக்கப்பட்ட அந்த மகா
விந்தபுர பட்டணத்திலே தர்ம சொரூபன் ஆகிய
நளச்சக்கிரவர்த்தி நீதியுடனே இராச்சிய பரி
பாலனம் பண்ணிக் கொண்டிருந்தான். அந்த
நளச் சக்கிரவர்த்தி இராச்சியத்திலே இருக்கிற
சனங்களெல்லாம் அவரவர்கள் குலாசார தர்மங்
கள் தப்பாமல் அரசனுடைய ஆக்கினையைக் கடவாமல் பய

3. A S. compound = புயத்திற்குரிய பெலனும் பிராக்கிரமமும்.

4. Sans. அநு = after. Millions upon millions.

5. The tree in paradise—the tree of immortality.

6. A kind of jasmin.

7. The champâk flower.

8. A kind of jasmin.

9. An incorrect but common phrase = sweet fruits, &c. பண்டம், பலம் முதலியவைகளும்.

10. The four castes of Brahmans, Kshatriyas, Vaisyas, and Sûdras.

11. To applaud = மெச்சு or மெய்ச்சு.

12. Sans. form = வித்துவான், பண்டிதன், or [illegible], = a learned man.

13. Stringed and wind instruments.

14. Sport.

15. Sans. = இவை முதலிய.

பத்தி விசுவாசங்களுடனே நடப்பார்கள். வியாதிகளும் தரித் திரங்களும் அவமிருத்துக்களும்[16] அந்தப் பட் டணத்திலே பரிச்சேதம் இல்லை. அதுவல்லா மல் அந்த ராச்சியத்தில் விளைகிற தானியத்திலே அரசனுக்கு ஆறிலொரு பங்கு வாரங் கொடுத்து, மற்ற ஐந்து பங்குகளை யுங் குடிகள் சாப்பிட்டுக் கொண்டு சுகமே இருப்பார்கள். பால் கறக்கிற போது பசுக்கள் எருமைகள் கன்றுக்கு ஒரு பக்கம் விட்டு, தங்களுக்கு ஒரு பக்கம் கறந்து கொள்ளுவார் கள். கன்றுகள் தங்கள் தாய்களைக் கண்ட போது தங்கள் பக்கம் மாத்திரம் ஊட்டும்.[17] எருதும் புலியும் ஒரு குளத்திலே தண்ணீர் குடிக்கும். இப்படிச் சத் தியந் தப்பாமல் சகல காரியங்களுங் குறைவு வாராமல் நடக்கும்.

16. அவ = vain, மிருத்து = death.

17. Suck (not com.)



2. §. THE SWANS APPEAR TO NALA IN LOVE.

அப்போது சித்திரை வைகாசி மாதம் ஆன வசந்த காலத் திலே பௌர்ணமையின்[1] அன்று சாயங்கால வே ளையிலே வேடிக்கையாய் அந்த வீரசேன மகா ராஜாவினுடைய குமாரன் ஆகிய நள ராஜாவானவன் புஷ்பவனத் திலே ஒண்டியாய்ப் பிரவேசித்துப், பாரிசாதம், மல்லிகை, முல் லை, இருவாட்சி, செண்பகம், மரு, மருக் கொழுந் து, குருவேர், வெட்டிவேர்[2] ஆகிய இவைகள் வாச னை வீசவும், அன்னங்கள் ஒய்யாரமாக[3] நடக்க வும், குயில்கள் கிளிகள் தொனிகள் செய்யவும், வண்டுகள் தும்பிகள் ஆரவாரிக்கவும், சகல மான[4] பக்ஷிகளும் கள கள என்று தொனிக்க வும், இளந் தென்றலானது மெதுவாய் விசிறியினாலே வீசினாற்

App. vii.

1. The full moon.

2. Names of different odoriferous trees and shrubs.

3. Affectedly.

4. = சகல. 130.

273.

போலே வரவுங் கண்டு சந்தோஷப்பட்டு, ஆனந்தமாக இருக்கிற போது சந்திரோதயமாய்[5] மாசி மறுவில்லாமல் பட்டப் பகலைப் போலே எரிக்க அர்த்த ராத்திரி[7] வேளையிலே நள ராஜா செண்பக மெத்தையின் பேரிலே வீற்றிருந்து, அப்போதைக்கப் போது[8] தமயந்தி என்கிற பெண் தனக்குத் தக்க பெண்சாதி என்று சகல சனங்களுஞ் சொல்லக் கேட்டிருந்த படியினாலே அவள் ரூபத்தை வர்ணித்து, "ஓய்! சுவாமியே! அடியார்க்கடியாராய் இருந்து அவர்கள் கோறின கோறிக்கையை ஈடேற்றுகிறவரே![9] வெகு நாளாய் நான் என் மனதுக் கேற்ற பெண்சாதி எங்கேயாகிலும் அமர வேண்டும் என்று கோறி விசாரிக்கு மிடத்தில் 'வீமராஜன் மகளாகிய தமயந்தியே உன் மனதுக் கேற்றவள்' என்று அநேகர் சொல்லக் கேட்டிருக்கிறேன்; அவளை நான் விவாகஞ் செய்து கொள்ளும்படியாகத் தயவு பண்ணி இரக்ஷியும்! அய்யா, சுவாமி!" என்று, அந்த நள ராஜா சுவாமியைக் கீர்த்தித்துக்[10] கொண்டிருந்தான். பொழுதும் விடிந்தது. அந்தச் சமயத்திலே ஆகாயத்திலே இருந்து முத்துமாலைகள் உதிர்ந்தாற் போலே, சிறிது[11] அன்னப் பக்ஷிகள் இறங்கி வந்து, இராஜாவின் முன்னே வேடிக்கையாக விளையாட, அதைக் கண்டு இராஜா சந்தோஷப் பட்டு, அதிலே ஒரு பெரிய அரச அன்னத்தைப் பிடித்துக் கொண்டான். மற்ற அன்னங்கள் எல்லாம் அந்த அன்னத்தை விட்டுப் போக மாட்டாமல் அங்கே தானே சுற்றிக் கொண்டிருந்தன.

5. S = The rising of the moon.

7. S = The middle of the night.

8. = From time to time.

9. = fulfil.

10. Extol.

11. A few.

அகப்பட்ட அன்னம் மெத்தப் பயந்து நடுநடுங்கி இராஜாவைப் பார்த்து, "ஓய் இராஜாவே! நீர் சகல நியாயமும் அறிவீர். உமக்குத் தெரியாதது வேறொன்றில்லை. என்னைப் பிடிக்கச்

சொல்லி வேத சாஸ்திரங்களிலே சொல்லுகிறதோ? நீர் என்னை ஏன் பிடித்துக் கொண்டீர்?" என்று கேட்க,—நள ராஜா சந்தோஷப் பட்டுப் புன் சிரிப்புடனே அதிசயித்து, அந்த அன்னத்தைப் பார்த்து, "பக்ஷி சாதிகளுக் குள்ளே உத்தமமாய் இருக்கப்பட்ட ஓ! இராஜ அன்னமே! வேடிக்கையாக விளையாடுகிற நிமித்தம் உன்னை நான் பிடித்தேன். நீ என்னைச் சந்தோஷப் படுத்துவாய்," என்று சொல்லக் கேட்டு, அன்னஞ் சிரித்து, அந்த இராஜாவினுடைய இருதயத்திலே எண்ணிக் கொண்டிருக்கிற காரியங்களை அறிந்து, "ஓய், இராஜேந்திரரே! உம்மைப் பார்த்தால் மன்மத பாணத்தினலே அடி பட்டு நொந்து, உம்முடைய இருதயத்திலே தமயந்தி என்கிற பெண்ணை நினைத்து விசாரப் படுகிறுப் போலே காணுகிறது. இம்மாத்திரங் கவைக்கு உம்மைப் போலொத்த மகா ராஜா விசாரப் படலாமோ? நல்லது, ஆகட்டும், உம்முடைய மனதிலே நினைத்திருக்கிற கோறிக்கைப் படிக்கு அந்தத் தமயந்தி என்கிற பெண்ணை உமக்கே பெண்சாதியாகப் பண்ணி வைக்கிறேன்; என்னை விட்டு விடும்!" என்று சொல்லக் கேட்டு, நள மகா ராஜா அதிக சந்தோஷத்தை அடைந்து புன் சிரிப்புடனே சொல்லுகிறுன்:

12. = For such light trouble.

"ஓ, அன்னமே! இப்போது நீ சொன்னதெல்லாம் என்னிடத்திலே உண்டான காரியந்தான். அதற்குப் பிசகில்லை. நீ நிசமாக அறிந்து சொன்னபடியினலே உன்னைத் தெய்வப் பக்ஷி என்றே சொல்லலாம். ஆனல், நான் நினைத்த காரியத்தை ஆகப் பண்ணி வைக்கிறேன் என்று சொன்னுய். நீ மனுஷனும் அல்ல, தேவனும் அல்ல, பக்ஷி ரூபமாய் இருக்கிறுய். உன்னலே எப்படி ஆம்?" என்று கேட்க, அந்த அன்னம், "ஓய் இராஜரே! இந்த உலகத்திலே சஞ்சரிக்கிற அன்னத்தைப் போலே பார்த்தீரோ? நான் தெய்வ லோகத்து அன்னப் பக்ஷி. நான் சஞ்சரியாத இடமில்லை. மனுஷருடைய மனோபாவங்

களும் முன் நடந்த காரியங்களும் இப்பொழுது நடக்கிற காரியங்களும் இனிமேல் நடக்கப் போகிற காரியங்களும் எல்லாம் எனக்கு நன்றாகத் தெரியும். நீர் சமுசயப்படத் தேவை இல்லை. அந்தத் தமயந்தியினுடைய குண ரூபங்களுக்கு நீர் தகுமான புருஷரே, உம்முடைய குண ரூபங்களுக்கு அந்தத் தமயந்தியும் தகுமான பெண்சாதியே; ஆகையினாலே, அவளை உம்முடைய உடைமையாகப் பண்ணிவைத்த சமையத்திலே நான் உம்முடைய கையிலே செலவுவாங்கிக் கொண்டு என் உலகத்துக்குப் போகிறேன். நான் பொய் சொல்லுகிறதில்லை. தெய்வ லோகத்துப் பக்ஷி சொன்ன பேச்சுத் தப்புகிறதில்லை. அது உம்முடைய மனதிலே வைத்து, என்னை விட்டு விடும். என் வார்த்தையைக் கெட்டியாய் நம்பும். இப்போதானே நான் தமயந்தி அண்டைக்குப் போய், உம்முடைய குணானுபவங்களை[13] எல்லாம் வர்ணித்துச் சொல்லி, அவள் உம்மைக் கலியாணம் பண்ணத் தக்கதாகச் சமாதானம் பண்ணிக் கொண்டு வந்து, உமக்குச் சந்தோஷ செய்தி சொல்லுகிறேன்" என்ன,—அது கேட்டு நள மகா ராஜா அதிக சந்தோஷத்துடனே அன்னத்தை நிலத்திலே விட்டு, ஒரு வார்த்தை சொல்லுகிறான்: "ஓ அன்னமே! உனக்குத் தெரியாத தொன்று மில்லை, அல்லவோ? ஆனபடியினாலே, அந்தத் தமயந்தி யாருடைய குமாரத்தி? அவள் ரூப லாவண்ணியம் எப்படிப்பட்டது? நீ எனக்கு நன்றாகச் சொல்ல வேண்டும்; என் காது குளிரக் கேட்க வேண்டும்," என்று அந்த ராஜா கேட்க, அந்த அன்னஞ் சிரித்துக் கெம்பீரத்துடனே சொல்லுகிறது:

13. S. Comp. = குணங்களையும் அனுபவங்களையும்.

---

### 3. §. THE SWAN'S ACCOUNT OF DAMAYANTI'S BIRTH AND PARENTAGE.

"கேளும், ஐயா! நள மகா ராஜாவே! சூரியன் சந்திரன் அக்கினி இவர்களுக்குச் சமானமான காந்தியும் பிரதாபமுஞ் சௌ

ரியமும் உடைத்தானவனாகிய விதர்ப்பதேசத்து இராஜாவான வீம ராஜாவுக்குப் புத்திரர் இல்லாமல் செபம், ஓமம், விரதம், அனுஷ்டானங்கள், யக்கியங்கள்,[1] பிராமணர்களாலே பண்ணுவித்தும், அதனாலேயும் புத்திரர் இல்லாதபடியினாலேயும், கொலுவில் சிங்காரமாக இருந்து கொண்டு, மந்திரிகள், பிரதானிகள், சேனாபதிகள், புரோகிதர்கள்,[2] மற்றும் உண்டான பெரியோர்களை எல்லாம் அழைப்பித்து, அவர்களைப் பார்த்து, அந்த இராஜா, "கேளுங்கள், மந்திரிகளே! மற்றும் உண்டான சபையோர்களே! பூலோகத்திலே மனுஷர்களுக்குப் புண்ணியலோகம் உண்டென்றும், பிள்ளைகள் இல்லாத பேர்களுக்குப் புண்ணிய லோகம் இல்லை என்றும், வேதங்களிலே சொல்லி இருக்கிறதாம்; பெரியோர்கள் சொல்லக் கேள்விப் பட்டேன். ஆகையினாலே, பிள்ளை வேண்டும் என்கிற அபேக்ஷை எனக்கு மெத்த இருக்கிறது. புத்திர சோகம் மெத்தப் பெரிதான படியினாலே, உலகத்திலே ஒருவர் ஒருவரை யோக க்ஷேமம் விசாரிக்கும் போது, தன தானிய சம்பத்துகளைக் கேளார்கள், 'பிள்ளைகள் எத்தனை? பெண்கள் எத்தனை?' என்று கேட்பார்கள். அதுவும் அல்லாமல் குழந்தைப் பேச்சுக் குரல் கேட்டால் என் காதுகளுக்கு வீணை நாதம், வேணு நாதம் போலே இன்பமாய் இருக்கிறது. பிள்ளைகளைப் பெற்றவர்களே கனவான்கள். ஆனபடியினாலே, நாங்கள் ஸ்திரீ புருஷாள்[3] இருவரும் தபசு பண்ணும் பொருட்டு இராச்சியத்தை மந்திரிகள் வசம் பண்ணிக் காட்டுக்குப் போகிறோம். அவர்கள் ஆக்கினையைக் கடவாமல் நீங்கள் நடவுங்கள்," என்று நல்ல வசனத்தினாலே உபசாரமாய்ச் சொல்லி, அவர்கள் கையிலே செலவு வாங்கிக் கொண்டு, இராஜா தன்னுடைய பெண்சாதியுந் தானுங் கூடச் சடைமுடியும் மரவுரியுந் தரித்து, பிரயாண

[1] Prayer, offering, fasting, ceremonial observances, burnt offerings.

[2] The family priests or directors.

[3] Vulg. for புருஷர்கள்.

மாய்ப் போகவே, பிறகே சகலமான சனங்களுந் தாபந்திரியப் பட்டுக் கொண்டு வர, இராஜா அவர்களைத் துயரம் நீக்கி நிறுத்திப் போட்டுக் காட்டுக்குப் போனார்.

அங்கே வால்கில்லிய மகா முனீஸ்வாருடைய[4] குமாரன் தமன முனீஸ்பரனைக் கண்டு, சாஷ்டாங்கமாகத் தெண்டன் சமர்ப்பித்து,[5] அவனை ஆராதனை செய்து, சிறிதுநாள் அவனைச் சேவித்துப், பயபத்தி விசுவாசத்துடனே பத்தி பண்ணிக் கொண்டு, அவருக்கு மனது வர நடக்கிற போது அவர் வெகு சந்தோஷத்துடனே ஒரு நாள் வீம ராஜாவைப் பார்த்து: "இராச்சிய பரிபாலனம் பண்ணாமல் இப்படித் தபசியாய்ச் சகி[6] யுடனே கூட வந்ததென்ன?" என்று கேட்டார். அப்போது வீம ராஜாவும், "ஐயா! முனீஸ்பரா! எங்களுக்குச் சகல பாக்கியங்களும் இருந்தும், புத்திரன் இல்லாமல் விசாரத்துடனே இப்படித் தபசிகளாய்ச் சகலத்தையும் துறந்து, உங்களைச் சேவித்துப் பிழைப்போம் என்று, நாங்கள் சகியும் பதியுங் கூடி வந்து விட்டோம்; ஆகையினாலே, எங்கள் விசாரந் தீரத்தக்கதாகச் சந்தானம் உண்டாகும்படி அனுக்கிரகம் பண்ணி இரட்சிக்க வேண்டும்," என்று அந்த ராஜா மெத்தவும் பிரலாபப்[7] படுகிற போது அந்த முனீஸ்பாருக்குத் தயவு வந்து, அவர்கள் பேரிலே கடாக்ஷம் வைத்து, சகல பாவங்களையும் பரிகரித்து, "ஓ, இராஜாவே! உனக்குத் தபனுபி என்றொரு பிள்ளையுந் தமயந்தி என்றொரு பெண்ணும் உண்டாகப் போகிறது. அவர்களால் உன் வமிசம் பவித்திரமாகப்[8] போகிறது, நீ உன் பெண்சாதியை இட்டுக் கொண்டு போ," என்று சொல்லிச் செலவு கொடுத்தார்.

இராஜாவும் இராஜ பத்தினியும் வெகு சந்தோஷத்தை அடைந்து, அவருக்குத் தெண்டனிட்டுத் தோத்திரம் பண்ணி, அவ

4 முனி + ஈஸ்வரர்.

5 செய்து.

6 A wife.

7 Mournful utterance, complaint.

8 Purity, preservation.

ரிடத்தில் செலவு பெற்றுக் கொண்டு, தங்கள் பட்டணத்துக்கு வந்து, சகல வேடிக்கைகளுடனேயும் இராச்சிய பரிபாலனம் பண்ணிக் கொண்டு இருக்கிற போது, சிறிதுநாளைக்குப் பிறகு முனீஸ்வரர் சொன்னபடியே அந்த இராஜாவினுடைய தேவி ஒரு பிள்ளையையும் ஒரு பெண்ணையும் பெற்றாள். அப்போ இராஜா புத்திரோச்சவம் பண்ணி, சகல தானமுங் கொடுத்து, சந்தோஷப் பட்டுக் கொண்டு, அந்தப் பிள்ளைகளை வளர்க்கிற போது அந்த இராஜா பிள்ளையைப் பார்க்கிலும் பெண் பேரிலே அதிக சந்தோஷப் பட்டுக் கொண்டு, சந்திரோதயம் போலவும் ஸ்ரீ[9] மகா லட்சுமி போலவும் இருக்கிறதென்றும், உலகத்திலே நம்மைப் போலே பாக்கியவான்கள் இல்லை என்றும் நினைத்து, அந்த மகா ரிஷி சொற்படி அந்தப் பிள்ளைக்குத் தபனுபி என்றும் பெண்ணுக்குத் தமயந்தி என்றும் நாமகரணஞ் சூட்டி, மகா வைபவத்துடனே இருந்தான்.

[9] S. Shrî = திரு.

ஆகையினாலே எப்படியும் அந்தப் பெண்ணை உமக்கே கூட்டிவைக்க மாட்டுவேன்.[10] நீர் சந்தேகப் படத் தேவை இல்லை. என் விசேஷத்தைக் கெட்டியாக நம்பும். உம்முடைய கோறிக்கை ஈடேறும். என்னை அனுப்பும் ஐயா" என்று அன்னஞ் சொல்லக் கேட்டு, நள மகா ராஜா சந்தோஷித்துச் சொல்லுகிறான்:

[10] For வைப்பேன். மாட்டுவேன் is not properly thus used.

"ஓ, உத்தம சாதியான இராஜ வமிசமே![11] நான் உனக்கு என்ன உபகாரஞ் செய்யப் போகிறேன்? பூமிக்கு உபகாரஞ் செய்கிற மேகத்துக்குத் திரும்பி அந்தப் பூமி பதில் உபகாரஞ் செய்கிறதோ? அப்படிப்போல எண்ணிக் கொண்டு, எப்படியும் நான் அந்தச் சந்தோஷத்தை அடையும் படிக்குத் தயவு பண்ணிச் சீக்கிரமாகப் போய்க் காரியத்தை அனுகூலம் பண்ணிக் கொண்டு வா" என்று சொல்லி, அன்னத்தைக் கட்டி அணைத்துச் செலவு கொடுத்தார்.

[11] For, *member of a royal race!*

## 4. §. THE SWANS BEFORE DAMAYANTI. THE PRAISES OF NALA.

அந்த அன்னப் பக்ஷி தன் கூட்டத்துடனே ஆகாச மார்க்கத்திலே எழும்பிப் பிரயாணப் பட்டு, எங்கேயும் நில்லாமல், நள மகா ராஜாவுக்கு எவ்விதத்திலேயும் அந்தப் பெண்ணைக் கூட்டுறவு பண்ண வேண்டும் என்கிற தயவினாலே சீக்கிரமாகப் போகவே, வழியிலே இருக்கிற தாமரைக் குளங்களைக் கண்டு, அவைகளிலேயும் வாசம் பண்ணாமல், நிழல்களிலும் நில்லாமல், அதி வேகத்துடனே போய் விதர்ப்ப புரமே சேர்ந்து, சிங்கார வனத்திலே பாரிசாத மரத்தின் கீழே தமயந்தியைக் கண்டு, தன் கூட்டத்துடனே அன்னப் பக்ஷி அந்த நிலத்திலே இறங்கி, வேடிக்கையாக வந்து சூழ்ந்து கொண்டு, தமயந்தி கையிலே நடை கற்றுக் கொள்ள வந்தாற் போலே, அவள் முன்னே விநோதமாய் நடந்து விளையாடக் கண்டு, தமயந்தி அந்த அன்னப் பக்ஷிகளுக்கெல்லாம் முதன்மையான இராஜாவாய்ப் பெரிதாய் வந்திருக்கிற பக்ஷியைப் பிடிக்க நினைத்துப் பாங்கி மார்களுந்[1] தானுங் கூட அன்னங்கள் சிதறிப் போகாமல், முன்தானை[2] நழுவ, முத்துமாலை இரத்தினப் பதக்கம் முதலான ஆபரணங்கள் பிரகாசிக்க, கொண்டை கலைந்து மயிர்கள் சரிந்து அசைந்தாடச், சரீரத்திலே வேர்வை தாராளமாய்ப் புறப்பட வேகமாக நடந்து போகும் போது, பாங்கிமார்களில் ஒருத்தி முன்னே ஓடி, அந்த அன்னங்களில் சில அன்னங்களைப் பிடித்து வந்து, தமயந்தி முன்னே விட அதிலே தான் முன்னே நினைத்த ஒரு பெரிய அன்னத்தைப் பிடித்துக் கொண்டு, தன் கையினாலே அதன் முதுகிலே தடவச் சரீரம் எல்லாம் வேர்த்திருக்கிறது கண்டு, "ஓ அன்னமே! உனக்கு இத்தனை வேர்வை வருவானேன்? வெகு அவசரமான காரியமாக வந்தாற்போலே காணுகிறது; உனக்கும் இப்படிப் பட்ட காரியமும் உண்டோ?" என்ன, அதைக் கேட்டு அந்த அன்னஞ் சிரித்து ஒரு வசனஞ் சொல்லுகிறது:

[1] Female companions.
[2] முன்றானை.

"ஓ, காந்தி உள்ளவளே! வீம ராஜா குமாரத்தியே! கேள், உனக்குச் சமானமான சௌந்தரியம் உள்ள பெண்ணை இந்த இராச்சியத்திலே நான் கண்டதும் இல்லை; ஆகையினாலே, உனக்கு ஏற்ற புருஷன் நள ராஜாவே அல்லாமல் மற்றொருவர் இல்லை, அப்படிப் பட்ட அரச குமாரன் உனக்குக் கிடைக்கப் போகிறானோ? நள மகா ராஜாவுக்கு நீ தகும். உனக்கு அந்த நள மகா ராஜா தகும். அவனே உனக்குப் புருஷனாக வேண்டும். ஓ பெண்ணே! நான் பாராத தேசம் இல்லை. நான் அறியாத இராஜாக்கள் இந்தப் பூமியில் இல்லை. அந்த நள மகா ராஜனைப் போலே மற்ற இராஜாக்களை இப்படி வர்ணித்துச் சொல்லக் கூடாது. அம்மா! உம்முடைய அழகுக்கு ஏற்ற புருஷர் அவரே அல்லாமல் வேறே மற்றொருவர் இல்லை. ஆகையினாலே ஆயிரம் பேச்சுகள் என்னத்துக்கு? இந்தப் புருஷன் இந்தப் பெண்ணைக் கலியாணம் பண்ணுவான் என்று எனக்கு நன்றாகத் தெரியும். நான் தெய்வ லோகத்துப் பக்ஷி, எனக்குத் தெரியாதது ஒன்றும் இல்லை. அந்த நள மகா ராஜர் கையிலே பரிதானம் வாங்கிக் கொண்டு வந்ததும் இல்லை; நீர் கொடுக்கிறோம் என்றாலும் வாங்குகிறதும் இல்லை. நீர் சொல்லும். எனக்குத் தயவு பிறந்து வந்தேன். நீர் நினைத்திருக்கிற காரியம் ஆகப் பண்ண மாட்டுவேன். குரங்கின் கையிலே பூமாலை அகப் பட்டாற் போல நீர் எந்த இராஜா கையிலே அகப் பட்டுப் போகிறீரோ, என்று என் மனதிலே ஐயம் உண்டு. அதனால் உம்மைக் கண்ட உடனே திகில் எடுத்துப் புத்தி சிதறிப் போகிறது. அம்மா! உலகத்திலே பெண் சனங்கள் விரதங்கள், உபவாசங்கள், தவங்கள், தானங்கள் பண்ணுகிறது நல்ல புருஷன் கிடைக்க வேண்டும் என்றல்லோ? அதிலேயும் அந்த நள மகா ராஜாவைப் போலச் சௌந்தரியமுஞ் சௌரியமும் சம்பத்தும் உள்ளவர்கள் இந்த உலகத்திலே கிடையாது. அந்த நள மகா ராஜாவினுடைய

சொரூபத்தை விபரமாகச் சொல்லுகிறேன், கேள், அம்மா!" என்று அன்னஞ் சொல்லத் தொடங்கிற்று:

"அந்த நள மகா ராஜர் மன்மதனைப் பார்க்கிலுஞ் சௌந்தரியம் உள்ளவர். அந்த மன்மதனுக்குச் சரீரம் இல்லை. இந்த இராஜாவுக்குச் சரீரம் உண்டு; இதுவுமல்லாமல், பூரண சந்திரனைப் பழிக்கப் பட்ட முகமும் சூரியனைப் போலே காந்தியும் இலட்சுமி கடாக்ஷமும் உள்ளவர். அவர் அழகையும் குணத்தையும் சரஸ்வதி அம்மனும் வர்ணிக்க மாட்டாள் என்றால், நான் வர்ணிக்க மாட்டுவேனோ? பூமிக் கெல்லாம் அவரே உத்தம ராஜா என்று புண்ணிய புருஷர்கள் எல்லாரும் புகழுகிறார்கள். பராக்கிரமத்தினாலே தேவேந்திரன் முதலான திக்குப்பாலகரையுஞ் செயிக்க வல்லவர். தேவர்கள் எல்லாரும் அவருடைய பிரதாபத்துக்குச் சந்தோஷப் படுவார்கள், தயிரியத்தில் மிஞ்சினவர்; பராக்கிரமசாலி, கெம்பீர புருஷர், சத்திய கீர்த்தி, கெர்வித்த ராஜாக்களுக்குச் சிங்கத்தைப் போல் ஒத்தவர். பெரியோர்கள், இரிஷிகள், தபோதனர்கள் சந்தோஷப் பட்டு அவர் குணாதிசயங்களைப் புகழுவார்கள். அவர் ஆளுகிற இராச்சியங்களில் உள்ள பெயர்கள் அதர்மங்கள் செய்தால் ஆக்கினை செய்யப் படுவார்கள். அவருக்குக் கப்பம் கட்டாத இராஜாக்கள் பூமியிலே ஒருவரும் இல்லை," என்று அன்னஞ் சொல்லவே, தமயந்தி அந்த வார்த்தைகளை எல்லாங் கேட்டுச் சந்தோஷசாகரத்திலே மூழ்கி, பரவசமாய் ஆனந்தக்கண்ணீர் சொரியச் சரீரம் எங்கும் புளகிக்கத் தலையை அசைத்து, அந்த அன்னத்தைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறாள்:



5. §. FURTHER CONVERSATION BETWEEN THE SWAN AND DAMAYANTI.

"ஓ! அன்னமே! அந்த நள மகா ராஜருடைய ரூபமும் சௌந்தரியமும் சௌரியமும் சம்பத்தும் சகலமான பேரும்

கொண்டாட நானுங் கேட்டு, ஐயப் பட்டிருந்தேன். நீ தெய்வ பக்ஷி என்பதற்குச் சமுசயம் இல்லாமையால் இப்போது நீ சொன்ன மாத்திரத்திலே எனக்கு நிச்சயம் ஆச்சுது. அந்த நளமகாராஜருக்குப் பெண்சாதியாக வேண்டும் என்று ஏழு வயது முதற் கொண்டு சரஸ்வதி அம்மனைப் பிரார்த்தனை பண்ணிக் கொண்டிருக்கிறேன். இப்பவும் அந்த நளமகாராஜரண்டைக்கு நீ சீக்கிரமாகப் போய், அவருடனே என்னுடைய செய்திகள் எல்லாந் தெரியப்படச் சொல்ல வேண்டும். நீ அல்லாமல் வேறே எனக்கு நம்பிக்கையான பேர் இல்லை. இதுவல்லாமல் என்னுடைய துக்கத்தைச் சொல்லி ஆறுவோம் என்றால் என் வார்த்தையைக் காது கொடுத்துக் கேட்கத் தக்கன[1] தோழிமாரில்லை. எனக்கான மனுஷர் இந்தப் பூமியிலேயும் இல்லை. ஆகையினாலே நீயே என் உடன் பிறப்பாக எண்ணி, உன்னுடனே என் மனதிலே உண்டான படி நாணமில்லாமல் சொன்னேன். இனிமேல் நான் சொல்ல வேண்டிய தில்லை. எனக்கு இந்த உபகாரம் நீ செய்ய வேண்டும். செய்யாமற் செய்த உபகாரத்துக்குப் பூலோகமுந் தெய்வலோகமுங் கொடுத்தாலுந் தீராது.[2] மேகத்துக்குப் பிரதி உபகாரம் பூலோகத்தார் செய்ய மாட்டார்கள். அப்படிப் போலே நான் உனக்குப் பிரதி உபகாரம் செய்ய மாட்டேன். நீ எனக்கு இந்த உபகாரஞ் செய்தால் என் சரீரம் உள்ள மட்டும் மறவேன் என்று சொன்ன உடனே அன்னங் கேட்டு, தான் வந்த காரியம் நிறைவேறிற்றென்று தன் மனதிலே சந்தோஷமாய் அந்தத் தமயந்தியைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறது:

"ஓ, அம்மா! சகலத்துக்கும் நான் இருக்கிற போது நீர் தாபந்திரியப் படக் காரியம் என்ன? நீர் என்னுடைய உடன் பிறப்பு என்னச்சே[3] நான் உமக்கு இம்மாத்திரங் காரியஞ் செய்யாவிட்டால் நான் இருந்து பலன் என்ன? உம்முடைய தாயார் உம்மை நொந்து பெற்

[1] Com. for தக்க.

[2] Com. Poet. Anthology. 116.

[3] Vulg. for என்ன வே.

ளுள். என்னை நோகாமல் பெற்ளுள். ஆகையினுலே, ஓ, தமக் கையாரே! நீர் துக்கப் பட வேண்டாம். அம்மா! அந்த இராஜா வை உம்முடனே எப்படியுங் கூட்டி வைக்கிறேன். அது பரி யந்தம் எனக்கு நித்திரை வாராது. நீர் மனது சந்தோஷமாய் இரும். என்னை நம்பும். நான் தெய்வ பக்ஷி. அபத்தஞ் சொல்லுகிறதே இல்லை, அம்மா," என்று சொல்லத் தமயந்தி யும், "ஓ, அன்னமே! எப்படியும் இந்தக் காரியத்தைச் சீக்கிர மாக அனுகூல ம்பண்ணி என்னை இரக்ஷிப்பாய்" என்று சொல் லி அனுப்பி வைக்க, அந்த அன்னமும் தமயந்தி கையிலே செலவு பெற்று, தன்னுடைய கூட்டங்களுடனே கூடிக் கொ ண்டு மனோவேகமாய்ப் பறந்து போய், நளமகா ராஜா பட்ட ணமே போய்ச் சேர்ந்தது.



6. §. THE SWAN RETURNS TO NALA.

அங்கே நளமகா ராஜாவானவன் தமயந்தியை நினைத்துக் கொண்டு, மல்லிகைக் கொடிகள் படர்ந்திருக்கிற புன்னை மரத் தின் கீழே இருக்கிற சந்திரகாந்தத்[1] திண்ணையின் பேரிலேயும் பனிநீர்க் குளத்து ஓரத்திலேயும் மருக்கொழுந்து முல்லை வனத்திலேயும் சஞ்சரித்து, பிரலாபத் துடனே புஷ்ப மெத்தையின் பேரிலே படுத்திருந்து, "அன் னப் பக்ஷி எங்கே போச்சுதோ? வழியிலே போகிற போது தாமரைத் தடாகங்களைக் கண்டு அதுகளிலே இருந்து விளையா டுகிறதோ, என்னமோ," என்று விசாரப் பட்டுக் கொண்டிருக் கவே கூட்டத்துடனே அந்த அன்னம் வந்து, இராஜாவைக் கண் டது. நளமகா ராஜாவும் மனது சந்தோஷமாய் அந்த அன் னத்தைப் பார்த்து, "ஓ அன்னமே! சீக்கிரமாய்ச் சந்தோஷ சமாசாரம் என் காது குளிரச் சொல்லுவாய்," என்று சொல் லக் கேட்டு, அந்த அன்னம் புன் சிரிப்புடனே சொல்லத் தொடங்கிற்று:

[1] The moon-stone.

ஓய், நள மகா ராஜரே, கேளும்! நான் போன லக்கி னம்[2] நல்ல லக்கினம்; ஆனபடியினலே, அந்தத் தமயந்தி என்கிற பெண் உம்முடைய ரூபத் தைக் கேட்டு, அதிக சந்தோஷப் பட்டு, உம்முடைய கைவசம் ஆனள். உம்முடைய கோறிக்கை ஈடேறிற்று. இதற்குச் சமு சயம் இல்லை. ஓய், நள மகா ராஜரே! பிர்ம்ம தேவன் சந்திர னுக்குப் பதில்சந்திரன் பூமியிலே இருக்க வேண்டும் என்று பிறப்பித்தாரோ தெரியாது; நான் முகப்பிரீதி சொல்லவில்லை. அவள் சௌந்தரியம் பிர்ம்மாவே அறிய வேண்டும். செவந்த தளிரைப் போலே பாதங்களும், முத்துகள் புதைத்த பவளக் காணைகள் போலே விரல்களும், அலவன்களைப் போலே முழங் கால்களும், உடுக்கையைப் போலே இடையும், காந்தட் பூவைப் போலே கைகளும், சங்கைப் போலே கழுத்தும், செந்தாமரை இதழ்களைப் போலே கண்களும், சிங்காணி வில்லுகளைப் போலே புருவங்களும், வள்ளைத் தண்டுகள் போலே காதுகளும், மூன் ரும் பிறையைப் போலே நெற்றியும், வண்டோடு போலே தலை மயிரும், குமிழம்பூவைப் போலே நாசியும், கோவைப்பழம் போலே அதரமும், நக்ஷத்திரங்களைப் போலே பற்களும், பூர ண சந்திரனைப் போலே முகமும், நூறு மாற்று அபராஞ்சிப் பொன்னைப் போலே மேனியும் உடையவள். சித்திரப் பது மை போலே விளங்கப் பட்டவள். நடைகளிலே எங்கள் கூட்டங்களைச் செயித்தாள். வார்த்தைகளிலே குயில்களையும் கிளிகளையும் செயித்தாள். நகையினலே மின்னலைச் செயித் தாள். நடக்கையினலே பதிவிரதைகளைச் செயித்தாள். இப் படிப் பட்ட பெண்ணான தமயந்தியுடைய சௌந்தரியத்தைச் சூட்சத்திலே[3] சொன்னேன். இரண்டாயிரம் நாக் குள்ள ஆதி சேஷனும் அந்தத் தமயந்தியினு டைய சௌந்தரியத்தை வர்ணிக்க மாட்டான் என்றால், நான்

[2] A celestial sign.

[3] = Briefly.

ஒரு நாக்கு உள்ள பக்ஷி வர்ணிக்க மாட்டுமேவேனே? நீர் சீக்கிரமாகப் போனுல் அவளுக்குப் பிராணன் நிற்கும். இல்லாவிட்டால் நிற்க மாட்டாது. அதி சீக்கிரமாய் நீர் போம்" என்று சொல்லி, அந்த நள மகா ராஜா கையிலே செலவு வாங்கிக் கொண்டு, அந்த அன்னம் தன் கூட்டங்களுடனே கூட எழும்பி, ஆகாசமார்க்கமே பறந்து போய், பிரம்மாவினுடைய மனைதசாசிலே சேர்ந்தது.

அப்புறம் அந்த நள மகா ராஜா அன்னத்தை அனுப்பி வைத்து, ஒருவருடனேயும் பேசாமல் மிகுதியும் நொந்து, ஆகார நித்திரை இல்லாமல் ஒரு க்ஷணம் ஒரு யுகமாகக் காலந் தள்ளிக் கொண்டு இருந்தான். அங்கே தமயந்தியும் அன்னம் தன்னை விட்டுப் போன நாள் முதற் கொண்டு, நள மகா ராஜா என்கிற பெயரையே நினைத்துக் கொண்டு, ஆர் சொன்னுலுங் கேளாமல் திடுக்கிட்டுக் கலையைப் பிரிந்த மான் போலே மிரண்டு மிரண்டு பார்த்துக் கொண்டு, வீணைவாத்தியங்களைத் தொடாமலும், நல்ல வஸ்திராபரணங்களைத் தரிக்காமலும், புஷ்பங்களை முடிக்காமலும், நல்ல பரிமளங்களைத் தொடாமலும், ஆகாரமும் நித்திரையும் இல்லாமலும், கிளிகளுடனே பேசாமலும், எந்நேரமும் விசாரத்தினலே பாங்கிமாருடனே பேசாமலும், சிங்கார வனத்துக்குப் போகாமலும், சலக்கிரீடை பண்ணுமலும், முகத்தில் குடங்கையை ஊன்றிக்கொண்டு, நள மகா ராஜா என்கிற வசனமே அல்லாமல் வேறே வசனமும் நினைவும் இல்லாமல், கண்ணீருடனே நள மகா ராஜாவின் மேலேயே சிந்தையாக இருந்தாள். ஆரையும் பாராள்; தோழிமாரைக் கோபமாய்ப் பேசுவாள்; ஒவ்வொரு வேளை களைத்து விழுவாள்; ஒரு வேளை தோழிமாருடனே பரிதாபப்படுவாள்; வண்டுகள் கீதங்களைக் கேட்டு, தூறிக் கொள்ளுவாள்; ஒரு வேளை கிளிகளைப் பார்த்துக் கோபித்துக் கொள்ளுவாள்; கூவுகிற குயிலை ஓடி அடிக்

கச் சொல்லுவாள்; "அன்னப் பக்ஷி போய் நள மகா ராஜாவுக்கு என்னுடைய செய்திகளை எல்லாஞ் சொல்லினதோ இல்லை யோ என்று நினைப்பாள்; அன்னஞ் சொல்லி இருந்தால் அவர் தாமசமாய் இருப்பாரா? அவருக்கு என்னைப் போலொத்த ஸ்திரீகள் இருக்கிறார்களோ? என்னமோ? தெரியாதே. சீக்கிரமாக வரமாட்டாரா? ஆனால், அந்தப் பட்டணம் எத்தனை தூரம் இருக்கிறதோ? தெரியாதே," என்று பல பல விதமாக எண்ணி, இதுகளைச் சொல்லி, களை ஆறுவோம் என்று தோழிமாரைக் கூப்பிட்டால், "சீக்கிரமாக வந்தால் ஆச்சுது, வரா விட்டால், அடி! நீங்கள் எல்லாரும் கூடிக் கொண்டு, என் பேரிலே ஒட்டாரம் பண்ணுகிறீர்களோ?" என்று கோபிப்பாள். ஒரு வேளை சிங்காரவனத்துக்குப் போய் இருக்கவே புஷ்பங்கள் உதிர்ந்தால் அதிர்ந்து பயப்படுவாள்; நிலவைக் கண்டால் வாடி இருப்பாள்; சிங்காரமான பாட்டுகளைக் கேட்டால், வெறுத்துப் பாங்கிமாரைத் திட்டுவாள்; ஒரு தோழி பெயரைச் சொல்லி ஒரு தோழியை அழைப்பாள், ஒரு தோழியை வேலைக்கு அனுப்பிப் பின்னை ஒரு தோழியை அந்த வேலையைக் கேட்பாள்; ஒரு வஸ்துவைக் கொண்டு வரச் சொல்லி, அது கொண்டு வந்த பிறகு "இது வேண்டாம்," என்று பின்னை ஒரு வஸ்துவைக் கேட்பாள்.—இப்படி எல்லாம் பிரலாபப் பட்டுக் கொண்டிருக்கிற வேளையிலே தோழிமார்கள் எல்லாரும் தமயந்தியைப் பார்த்து, "அம்மா! நீ இப்படிப் பிரலாபிக்கக் காரியம் என்ன? இப்படிப் பிரமிக்கக் காரணம் என்ன? எதனாலே இப்படி இளைத்துப் போகிறாய்? உன் மனதிலே எண்ணி இருக்கிற ஆலோசனையை எங்களுடனே சொன்னால் நாங்கள் உன் மனதைச் சந்தோஷப் படுத்தி வைக்கிறோம்," என்று சொல்லி, அந்தத் தமயந்தியைத் தேற்றி, தோழிமார்கள் தங்களுக்குள்ளே தாங்கள் ஒருத்திக்கொருத்தி, "கேட்டாயோ? பெண்ணே! மன்மதன்

கபட வேஷமாய் அன்னப் பக்ஷியைப் போலே வந்து நள மகா ராஜாவினுடைய குணாதிசயங்களையும் ரூபங்களையும் இந்தப் பெண்ணுடனே வர்ணித்துச் சொல்லி, அவர் பேரிலே நினைப் புண்டாக்கி வைத்துப் போயினான் போலே காணுகிறது; இல் லாவிட்டால், தண்ணீரிலே இருக்கிற தாமரைத் தண்டைப் பக்ஷி க்கிற ஒரு அன்னப் பக்ஷி இந்த மாய்கை செய்யுமா? இந் தப் பெண் அதிலே அகப்படுவாளா? இது என்னமோ தெரிய வில்லை. ஆச்சரியமாக இருக்கிறது; மன்மத பாணத்தினாலே நொந்து உண்ணாள், உடுக்காள், பேசாள், தோழிமார்களுடனே விளையாடாள், நகை செய்யாள், நள மகா ராஜா என்கிற பெயரை மறவாள், ஆபரணம் பூணாள், அன்னபானாதிகள்[4] வேண்டாள். நித்திரையும் இல்லை; ஆகையினாலே நாம் இனி என்ன செய்வோம்?" என்று ஆலோசனைகள் செய்து, "இந்தச் சங்கதிகளை எல்லாம் நம்முடைய இராஜா வுடனே சொல்லாமற் போனால் நாம் இராஜாவினாலே ஆக்கினை பண்ணப் படுவோம்," என்று தாதிகள் எல்லாரும் பயப் பட்டு, கூட்டமாகக் கூடிக் கொண்டு, முன்னாகத் தானே விதர்ப்ப தேசாதிபதியாகிய வீம ராஜா அண்டைக்குப் போய், நமஸ் காரங்கள் செய்து, கை கட்டி நின்று கொண்டு, அவருடனே சொல்லுகிறார்கள்:—

[4] Meat, drink, &c.



7. §. THE FEMALE ATTENDANTS BEFORE THE KING. THE KINGS ASSEMBLED.

"கேளும், ஐயா! இராஜ சேகரரே! தேவரீர் எங்கள் கையிலே உம்முடைய குமாரத்தியை ஒப்பித்தீர்கள். நாங்களும் இது வரைக்கும் அவளை எங்களாலே கூடின மட்டும் நன்றாய்ப் போஷித்தோம். இனிமேல் அந்தப்பெண்ணைப் போஷிக்க எங் களாலே ஆகாது. அதேனென்று கேட்டீர்கள் ஆனால், சொல் லுகிறோம், கேளும்! நேற்றைய தினம் சிறிது அன்னப் பக்ஷி

கள் ஆகாச மார்க்கமாக வந்து, நம்முடைய பெண்ணண்டை யிலே இறங்கி, சிறிது நேரம் விநோதமாக விளையாடிக் கொண் டிருந்ததுகள்.[1] அதில் ஒரு அன்னம் நள மகாரா ஜா தூதன் என்று சொல்லிற்று. அப்போது இந் தப் பெண் தன்னைக் கட்டக் கயிறு தான் சம்பாதித்துக் கொண் டாற் போல், அந்த அன்னத்தைப் பிடித்துக் கொண்டாள். அந்த அன்னமும் பயப் படாமல் இருந்து கொண்டு, மனுஷ பாஷையினாலே நள மகா ராஜாவை வெகுவாய் வர்ணித்து, சிந்தை கலங்கப் பண்ணி, வெகுமானம் பெற்று, நள மகா ராஜா வின் ரூபத்தைப் பெண்ணின் மனதிலே மறவாமல் இருக்கும் படி பண்ணிப் போச்சுது. இந்தப் பெண்ணுக்கு அந்த நள மகா ராஜாவின் பேரிலே மனது பிரியமாய் இருக்கிறது. இனி க்ஷண நேரம் ஆனாலும் பொறுக்க மாட்டாள். ஆகையினாலே, ஓய்! சுவாமி, அந்தப் பெண்ணுக்கு இப்போது தானே சுயம் வரம் சாட்டி வைத்தால் சகல தேச இராஜாக்களும் வருவார்கள். அவள் பாக்கியம் ஆருக்கு இருக்கிறதோ அவர்கள் கலியாணம் பண்ணிக் கொள்ளுகிறார்கள். நள மகா ராஜாவும் வருவார். அ வர் பேரிலே அந்தப் பெண்ணுக்குப் பிரமையே ஒழிய மற்றொரு இராஜாவின் பேரில் இல்லை. நீங்கள் இனிமேற் பெண்ணைச் சும்மா வைத்திருக்கல் ஆகாது," என்று சொல்ல,—தோழிமார் கள் சொன்னபடியே சகல தேசத்து இராஜாக்களும் அறியும் படிக்கு விதர்ப்ப ராஜாவும் ஓலை எழுதி, ஆனையின் பேரில் தமயந்திக்குச் சுயம்வரம் என்று பேரிகை அறிவித்தான். அது கேட்டு, அங்க, வங்க, கலிங்க, காளிங்க, காஸ்மீர, காம் போஜ, நேபாள, மலையாள, பாஞ்சால, மச்ச, பாண்டிய, திரி கர்த்த, மாளவ, கோசல, மத்த, கொங்கண, தெங்கண, அவந்தி, சிந்து, மத்திர, காசி தேசம் முதலான ஐம்பத்தாறு தேசாதி பதிகள் ஆகிய இராஜாக்களும் தங்கள் தங்கள் ரத கெஜ துரக பதாதிக

[1] Old form for இருந்தன.

ளுடனேயும், வஸ்திராபரண அலங்கிருதராய், குடை கொடிச் சிலைகள் ஆலவட்டங்கள் வெண்சாமரைகளுடனேயும், நரகெஜ மேளங்கள், வசந்தரி மேளங்கள், சங்கீத மேளங்கள் முதலான பதினெட்டு மேளவாத்தியங்களுடனேயும், செயத்தொனிகளுடனேயும் வந்து, விதர்ப்ப பட்டணத்தைச் சுற்றிலும் தங்கள் தங்கள் விருதுக் கொடிகளுடனே வெவ் வேறே தண்டிறங்கினார்கள். அப்போது நிடத தேசாதிபதியான நள மகா ராஜாவும் தம்முடைய ரத கெஜ துரக பதாதிகளுடனேயும் சகல வேடிக்கைகளுடனேயும் வந்து, ஓரண்டையிலே தண்டிறங்கி, தன் இஷ்ட தேவதையை நோக்கி, "அந்தத் தமயந்தி இந்த இராஜாக்கள் பங்கிலே போகாமல் என் பங்கிலே வரத் தக்கதாகத் தயவு பண்ணி இரட்சிக்க வேண்டும்" என்று தியானம் பண்ணிக்கொண்டிருந்தான். இப்படி இருக்க, இந்த ஆரபாரங்கள் எல்லாம் கலகப் பிரியன் ஆன நாரத மஹா முனி கேட்டுச் சந்தோஷப் பட்டு, "நாம் ஒரு கலகம் உண்டாக்க வேண்டும்" என்று மனதிலே நினைத்து, அதி சீக்கிரமாகத் தெய்வ லோகத்துக்குப் போய்ச் சகல தேவர்களுடனேயும் நிறைந்து, கொலுவாய் இருக்கிற தேவேந்திரனைக் கண்டு, அவருக்கு ஆசீர்வாதம் பண்ணி, அவர் செய்த பூசைகளைக் கைக்கொண்டு, அவர் போடுவித்த ஆசனத்திலே உளுக்கார்ந்து, அவருடனே சொல்லுகிறார்: "ஓய், தேவேந்திரனே! பூலோகத்திலே ஏதாகிலும் விந்தை உண்டானால் வந்து சொல்லச் சொன்னீரே. ஆகையினாலே, நான் இப்போது ஒரு விந்தை சொல்லுகிறேன்; கேளும், விதர்ப்பதேசத்து இராஜா ஆகிய வீம ராஜா குமாரத்தி ஆன தமயந்திக்குச் சுயம்வரம் சாட்டினார்கள் என்று ஐம்பத்தாறு தேசத்து இராஜாக்களும் அங்கே போனார்கள். அந்தப் பெண்ணினுடைய அழகுக்குச் சரியான பெண்கள் தெய்வலோகத்திலும் பூலோகத்திலேயும் ஒருவரையும் காணேன், நான் அறியாத லோகங்கள் இல்லை. எந்த லோ

கத்திலேயும் அந்தத் தமயந்திக்கு ஈடான பெண்கள் இல்லை; உம்முடைய பெண்சாதி ஆகிய இந்திராணியும் அவளுக்கு ஈடல்ல" என்று சொல்லி, நாரதர் தம் இச்சைபாய்ப் போயினார். தேவேந்திரனும் அது கேட்டு, அந்த க்ஷணத்திலே தானே தன்னுடனே கூட மூன்று பேர் திக்குப்பாலகரை எல்லாம் கொண்டு வெகு சந்தோஷத்துடனே நவரத்தின மயமான விமானத்திலே ஏறிக் கொண்டு வந்து, ஆகாச மார்க்கத்திலே நின்று, பூலோகத்து இராஜாக்களை எல்லாம் பார்த்து, சௌந்தரியமான தமயந்தியையும் நன்றாகப் பார்த்து, அந்தப் பெண்ணைத் திக்குப் பாலகர்களுக்குக் காண்பித்துப் "பார்த்தீர்களோ? திக்குப் பாலகர்களே!" என்று தேவேந்திரன் சொல்லுகிறான்:—

"இந்தப் பெண் பொன் பதுமையோ? மன்மதனுடைய புஷ்ப பாணமோ? அல்லது மின்னல் கொடியோ? சித்திரப் பதுமையோ? பாருங்கள்! இந்தப் பெண்ணினுடைய அழகைப் பாருங்கள்! இந்தப் பெண் எவர்களுக்கு லபிக்கப் பாக்கியம் இருக்கிறதோ?" என்று சொல்லி, இப்பால் வந்து, நள மகாராஜாவைப் பார்த்து, திக்குப் பாலகர்களுடனே தேவேந்திரன் சொல்லுகிறான்: "அதோ வந்திருக்கிற நள மகாராஜா இந்தப் பூலோகத்து மனுஷர்களுக்குள்ளே மன்மதனைப் போலேயும் இளஞ் சூரியனைப் போலேயும் இருக்கிறான். சந்திரனுக்கும் இத்தனை அழகு உண்டோ? சொல்லுங்கள். சந்திர வட்டக் குடையின் கீழே ஒரு பூரண சந்திரன் உதித்தாற் போலே இருக்கிறான். இந்தப் பெண்ணுக்கு இவனே புருஷன். ஆனைகள் போகிற வழியிலே எறும்புகள் தாரை விட்டாற் போலே இந்த இராஜாக்கள் ஏன் போகிறார்கள்? தமயந்தி இவர்களைக் கண்ணாலே பார்க்கப் போகிறாளா? ஆனால் நாம் ஒரு உபாயம் பண்ணுவோம், நள மகாராஜாவைத் தானே அந்தப் பெண் அண்டைக்கு நம்முடைய தூதனாக அனுப்பி, நம்மிலே ஒருவருக்குப் பெண்

சாதியாகச் சொல்லுவித்தால் அப்புறம் நள மகா ராஜா வெட்கிப் போய்விடுவான். எனக்கு ஒரு வேளை வாய்த்து நான் அந்தப் பெண்ணை அமராபதிக்கு அழைத்துக் கொண்டு போனால் இந்திராணி கெர்வம் அடங்கும்," என்று தேவேந்திரன் சொல்லிக் கொண்டு வந்து, அநேக இராஜ கூட்ட மத்தியிலே நக்ஷத்திரங்களுக்கு நடுவாகச் சந்திர பகவான் எப்படிப் பிரகாசிப்பானோ அப்படிப் பிரகாசிக்கிற அந்த நள மகா ராஜாவைக் கிட்டி, "வாராய் நள மகா ராஜாவே!" என்று தேவேந்திரன் அழைக்க, அந்த நள மகா ராஜா எழுந்திருந்து, தேவேந்திரன் முதலிய மற்ற மூவரையும் சேவித்துக் கை கட்டிக் கொண்டு, "நான் எத்தனை பாக்கியம் பண்ணினேனோ? உங்களை இன்றைக்குக் கண்டேன்; என்னுடைய சென்மம் பவித்திரம் ஆயிற்று; என்னுடைய கோறிக்கைகளும் ஈடேறின; தன்னியன் ஆனேன், என் பேரில் தயவு வைத்து, என்னை உங்கள் ஊழியக்காரனாகக் கைக்கொண்டு, உங்கள் சித்தத்துக்கு வேண்டிய காரியங்கள் என்ன உண்டோ செய்வித்துக் கொள்ளுங்கள்," என்று சொல்லிப், பின்னும் "உங்களுக்குப் பணிவிடை செய்தால் என்னுடைய சென்மம் சாபல்யம் ஆம்" என்று சொன்னான். அப்படிச் சொன்ன நள மகா ராஜாவுடனே தேவர்கள் சொல்லுகிறார்கள்:



8. §. THE THREE DEITIES SEND NALA TO DAMAYANTI.

"ஓ, நள மகா ராஜரே! நீர் ஒரு காரியம் எங்களுக்குச் செய்தீர் ஆகில் ஒன்று ஆயிரமாக எண்ணிக் கொள்ளுவோம்; அந்தக் காரியம் உம்மாலே ஆக வேண்டும்; பின்னை ஒருவராலே ஆகாது. அது என்ன என்று கேட்கில், நாங்கள் இந்தத் தமயந்தியின் பேரில் மோகத்தினாலே இங்கே வந்தோம், நீர் எங்கள் தூதனாகப் போய், அவளுக்குத் தெரியப்படச் சொல்லி, எங்களுக்குள்ளே ஒருவரைக் கலியாணம் பண்ணத் தக்கதாகப்

பேசி, அமர்த்திக் கொண்டு வரவேண்டும்; நான் எப்படிப் போவேன் என்று சிந்தனைப் பண்ண வேண்டாம்; உம்முடைய ரூபம் ஒருவருக்குந் தெரியாமல் அவளுக்கு மாத்திரந் தெரியும் படிக்கு மந்திரஉபதேசம் பண்ணுகிறோம்; எப்படியும் அந்தப்பெண்ணை எங்கள் வசம் ஆகும் படிக்குப் பண்ணிக்கொண்டு வாரும், போம்!" என்றார்கள். அதைக் கேட்டு அந்த நளமகா ராஜாவானவன் திடுக்கிட்டு, "ஓ! ஓ! நமக்கென்ன ஆபத்து வந்தது!" என்று நினைத்து, அறிவு கலங்கி, அவர்களுடனே ஒரு வார்த்தை சொல்லுகிறான்:—

"ஓய், தேவர்களே! லோகத்திலே வேஷதாரிகள் பாவங்களுக்குப் பயப்படார்கள். நீங்களும் அந்த வேஷதாரிகளே ஆனீர்கள். இந்தப் பாவம் உண்டோ? நானும் உங்களைப் போலே தான் அந்தப் பெண் எனக்கு அகப்படும் என்று எண்ணி வந்திருக்கிறேன். இதுவல்லாமல் நான் கொஞ்சமான ஊழியக்காரனைப் போலேயுந் தூதனைப் போலேயும் போய்ப் பேசி, அந்தக்காரியம் நிருவாகம் பண்ண மாட்டுவேனோ? என்னிடத்தில் இருக்கிறதெல்லாம் வாய்வலுவான பேச்சுகளும் உரோஷமும் கனமான வார்த்தைகளுமே அல்லாமல் ஸ்திரீகள் மனம் இரங்கப் பேசுகிற இனிய சொல்லுகள் இல்லை, இந்த இந்திரர் அமராபதி பட்டணத்தை ஆளப்பட்டவராய் இருந்தும் தேவர்களுக்கெல்லாம் கிரீடாதிபராய் இருந்தும் உங்களுடனே கூடிக் கொண்டு இப்பேர்ப்பட்ட வார்த்தைகளை எனக்குச் சொல்லத் தகுமா? இது ஒரு இராஜ தர்மமா? நீங்கள் அறியாத தர்மம் இருக்கிறதா? என்னை விட்டால் இந்தப் பூலோகத்தில் உங்களுக்கு ஆள் கிடையாதா? ஓய், தயாபரர்களே! இப்படிப் பட்ட காரியங்களுக்கு என்னைப் போலொத்தவன் எங்கே ஆகிலும் திரியவே கண்டீர்களோ? இது தர்மந்தானோ? நான் அந்தப் பெண்ணுக்கு மனசு வரப் பேச மாட்டுவேனோ? ஓய், சுவாமி

களே! என் பேரில் தயவு வைத்து என்னை இரட்சியுங்கள்," என்று சேவித்து வேண்டிக் கொள்ளுகிற நளமகாராஜாவைப் பார்த்துத் தேவர்கள் பின்னுஞ் சொல்லுகிறார்கள்:—

"ஓய், நளமகாராஜரே! நீர் சத்திய கீர்த்தி ஆயிற்றே; எங்களுக்கு இஷ்டமான ஊழியஞ் செய்கிறேன் என்று சொல்லி, நீர் அந்த வாக்குத் தப்பலாமா? பூலோகத்து இராஜாக்களுக்கு வாக்குத் தப்பலாம் என்று நியாயம் உண்டோ? சொல்லும்! இதுவல்லாமல், அந்தப் பெண் உம்முடைய பேரிலே அதிக மோகம் ஆனபடியினாலே நீர் சொன்ன பேச்சுத் தள்ளாமல் கேட்பாள். எப்படியும் காரியம் அனுகூலம் ஆம்; நீர் அவளுடைய மோகத்திலே தப்பித்துக்கொள்ளுகிறீர். எங்களுக்குத் தூதுக்கு ஆள்கிடையாதா? நீர் அக்கிரமித்துப் பேசுகிறீர், என் கையில் ஆகாதென்கிறது பெருமையோ? தேவர்களுக்குச் சொன்ன வார்த்தை தள்ளாமற் செய்கிறதே பெருமை; எங்களுக்கு இந்த உபகாரம் பண்ணினால் சகல இராஜாக்களும் உம்மில் சந்தோஷப் படுவார்கள். அது உமக்குக் கனம் அல்லவா? ஓ, நளமகாராஜரே! தேவர்களுக்குக் கலியாணம் பண்ணி வைத்தால் உம்முடைய கீர்த்தி மக மேரு கிரியின் பேரிலே இட்ட திருவிளக்குப் போலே சாஸ்விதமாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கும். தேவர்களுக்கு ஒரு உபகாரம் பூலோகத்து மனுஷன் பண்ணினால் கோடி கன்னிகாதானம் பண்ணின பலன் வரும். நீர் தர்மங்களை அறியாத இராஜரும் அல்லவே. தேவர்கள் வார்த்தையைத் தள்ளப் போகாது, போம்!" என்றார்கள். அதைக் கேட்டு, அந்த நளமகாராஜா ஆலோசனை பண்ணிக் கொண்டு, தேவானுகூலம் எப்படி இருக்குமோ? என்னத்துக்குத் தேவர்களுடைய விசேஷத்தைத் தள்ள வேண்டும் என்று நினைத்து, "நல்லது" என்று சம்மதித்தான்.

பின்னும் தேவர்கள் சொல்லுகிறார்கள்: "ஓ, நளமகாராஜரே! நீர் அங்கே போன உடனே தமயந்தியும் அவள் தோழிமா

ரும் உம்முடைய ரூபத்தைக் கண்டு வர்ணிப்பார்கள். நீர் எங்களுடைய தூதன் என்று சொல்லும். அந்தத் தமயந்தி உம்முடைய வார்த்தைக்கு உட்படாமற் போனால் எங்களுடைய பெருமையை அவளுக்கு நன்றாகத் தெரியப் பட்ச் சொல்லும். எப்படியும் எங்களில் ஒருவரைக் கலியாணம் பண்ணும்படியாகப் பேசி அமர்த்திக் கொண்டு வாரும்," என்றார்கள்.

---

### 9. §. NALA'S EMBASSY.

அதைக் கேட்டு, அந்த நள மகா ராஜா தேவர்களைப் பார்த்து: "என்னாலே வஞ்சனை இல்லாமல் பேசுகிறேன். அவள் மனதை நான் அறிய மாட்டுவேனோ? உங்களுக்குத் தெரியாதது ஒன்றும் இல்லையே. நான் போய் வருகிறேன் என்று விடை பெற்றுக் கொண்டு ஒருவர் கண்ணிலும் படாமல், தமயந்தி இருக்கிற அந்தப்புரத்துக்குப் போய், அவள் முன்னே நின்றவுடனே, தமயந்தி மெத்தப் பயப்பட்டு, அவருடைய ரூபத்தைப் பார்த்துப், பாங்கிமார் பக்கத்திலே ஒளித்திருந்து, "இவர் அந்த நள மகா ராஜரே ஆக வேண்டும்; மற்றொருவர் இங்கே வரப் படுவார்களோ?" என்று பாங்கிமாருடனே சைகையாய், "அவருக்குச் சிங்காசனம் போடுங்கள்" என்று சொல்ல, அவர்கள் போட, அதில் அவர் உட்கார்ந்த பிறகு சற்று நேரம் பொறுத்து, "எங்கே இருந்து வந்தீர்?" என்று கேட்ட தமயந்தியைப் பார்த்து, அந்த இராஜாதி இராஜனான நள மகா ராஜன் சொல்லுகிறான்:—

"ஓய், பெண்ணே! நான் நிடத தேசத்தை ஆளப்பட்ட இராஜா. என் பெயர் நளன். நான் வந்த காரியத்தைச் சொல்லுகிறேன், கேள்! தேவேந்திரர், குபேரர், வருணர், எமதர்மராஜர் இவர்கள் நாலு பேர்களும் தூதனுப்ப வந்தேன். அவர்களிலே யாரைக் கலியாணம் பண்ணுகிறாயென்று உன்னைக் கேட்டு, எப்படியுந் தங்களிலே ஒருவருக்கு அனுகூலப் படுத்திக்கொண்டுவா என்று

என்னை அனுப்பினார்கள். ஆகையினாலே, உன் அந்தப்புரத்துக்கு நான் வந்தேன். அவர்கள் மெத்த நல்லவர்கள், தேவர்கள், திக்குப் பாலகர், அவர்களை ஒருவரும் ஜெயிக்க மாட்டார்கள். அப்படிப் பட்டவர்கள் தங்களிலே ஒருவருக்குப் பட்டத் தேவி ஆக வேண்டும் என்று நினைத்திருக்கிறார்கள். அப்படிப் பட்ட மகா புருஷர்கள் தபசு பண்ணினாலும் உனக்குக் கிடையார்கள். உன்னுடைய பாக்கியத்தை என்ன என்று சொல்லப் போகிறேன். ஓ, பெண்ணே! என் பேச்சுக்குச் சம்மதித்தையே ஆனால் நீ சாஸ்வதமாய் இருக்கலாம். தெய்வலோகத்திலே உன்னைப் போலே குண ரூபம் உள்ள பெண்கள் இல்லை ஆம். பூலோகத்துப் பெண்கள் தெய்வலோகத்தாரைத் தபசு பண்ணினாலும் கிடையார்கள். உன்னுடைய பாக்கிய வசத்தினாலே கிடைத்தார்கள். இது அல்லாமல் காமதேனு, கற்பகவிருட்சம், பாரிசாதம், சிந்தாமணி, பத்மநிதி, உச்சைச்சிரவம், அயிராவதம், அலங்காரமாக இருக்கிற உப்பரிகைகள், சித்திரச் சாலைகள் இவைகள் எல்லாம் குறை இல்லாமல் தேவேந்திர மகாராஜருக்கு உண்டு; மற்ற மூன்று தேவர்களுக்கும் இப்படியே குறைவில்லாத செல்வங்களும் பராக்கிரமங்களும் உண்டு. இது அல்லாமலும் உன்னைக் கலியாணம் பண்ணினால் தங்கள் பட்டத் தேவிமாரைத் தேடுகிறதில்லை என்றுஞ் சொல்லச் சொன்னார்கள். பின்னும் தேவேந்திரர் சொன்னது, 'நான் தேவர்களுக்கெல்லாம் இராஜா, என் பேச்சுக்கு அடி கடிக்கிற தில்லை என்றும், இந்திராணி முதலான சகல தேவதாஸ்திரீகள் எல்லாரும் அவளைச் சேவித்துக் கொண்டிருப்பார்கள்' என்றும், 'திரிலோக கர்த்தராகிய தம்மையே கலியாணம் பண்ணிக் கொள்ளச் சொல்வாய்' என்றும், தேவேந்திரர் சொல்லச் சொன்னார்.—எமதர்மராஜர் 'நான் இந்த லோகத்திலே தர்மராஜா என்று பெயரும் இட்டுக் கொண்டு, புண்ணிய பாவங்களை விசாரிக்கிற தர்ம கர்த்தனாய் இருக்கிறேன். எனக்கு ஒன்றுக்கொன்று குறைவில்லை என்றும், தமயந்திக்குப்

பிறகு இனிமேல் தம் பெண்சாதி பேரிலே மனம் வைக்கிற தில்லை' என்றும், உனக்குச் சொல்லச் சொன்னார். வருணதேவர் 'என்னைப் போலே மாப்பிள்ளை எங்கேயும் கிடையாதென்றுஞ், சகல சம்பத்திலேயும் நான் மிகுந்தவன்' என்றும், அந்தரங்கமா கச் சொல்லச் சொன்னார். குபேரர் தன் வீட்டிலே நவ நிதிகளா கிய ஒன்பது வகை ரத்தினங்களும் ராசி ராசியாகக் கிடக்கிறது என்றும், சொல்லச் சொன்னார். ஆகையினாலே, ஓ, பெண்ணே! என் பேச்சைத்தள்ளிவிடாமல் இவர்களிலே ஒருவருக்கு நீ ஸ்திரீ யாக வேண்டும், என்னை அவர்கள் மெச்சத் தக்கதாக நடப்பித்துக் கொண்டு மேன்மையாக இருக்கிற தேவ போகங்களை நீ அடை வாய்" என்றும், "இவர்களில் உனக்குச் சம்மதியான பெயர் யார்" என்றும், நள மகா ராஜா கேட்க, அதைக் கேட்டுத் தமயந்தி புன்சிரிப்புடனே தலையை அசைத்து, ஒரு வார்த்தை சொல்லுகி றாள்: "ஓய், இராஜேந்திரரே! நீர் அன்னப் பக்ஷி உடனே சொல்லி அனுப்பி, எனக்கு மயல் எழுப்பி வைத்து, மன்மத பாணங்களி னாலே என் மனதைக் கலக்கி வைத்ததும் அல்லாமல், இப்போது ஏதோ விந்தை யான வார்த்தைகளைச் சொல்ல வந்தீரோ! ஓ, ஓ, மெத்த நன்றாக இருக்கிறது! இது உமக்குத் தர்மமா? நீர் இங்கே வருகிற நிமித்தியம் சகலமான இராஜாக்களையும் என் தகப்பன் அழைப்பித்தார். என் புத்தி ஸ்திரீ புத்தி என்று அன்னப் பக்ஷி சொன்னதால் உமக்கு என்னுடைய சுபாவங்கள் எல்லாந் தெரிந் திருந்தும் என் மனது சோதிக்க வந்தீரோ? ஆனாலும் என்னம் ஆச்சுது? நான் பூலோகத்து மனுஷஸ்திரீ. அவர்கள் தேவர்கள். இப்படிக் கோறி, எனக்குச் சொல்லி அனுப்பி வைக்கலாமா? தேவர்களுக்கு நான் பெண் மரியாதை ஆச்சுதே. அவர்களை எப்போதும் என் கோறிக்கையை ஈடேற்றச் சொல்லிச் சேவித்துக் கொண்டிருக்கிறேனே. அவர் களை நான் தகப்பமார்களாய் எண்ணி இருக்கச்சே, அவர்

= Daughter.

கள் எவ்விதமாக உம்மைத் தூது அனுப்பினூர்கள். நீர் சகல தர்மங்களும் அறிந்தவராயிருந்தும் எப்படித் தூது மார்க்கமாய் வந்தீர். அவர்கள் புத்தி மயங்கி உம்மைப் போகச் சொன்னால் நீர் எப்படி வருவீர்? ஆனால், என்ன? தேவர்கள் என்று, அல்லோ, தூது வந்தீர்? அவர்களுக்கு இது நியாயம் அல்ல, என்று சொல்லும். ஓய், மன்மதாகாரரே! ஓர் விசேஷஞ் சொல்லுகிறேன், கேளும். அதென்னவென்றால், உம்மை அல்லாமல் மற்றொரு புருஷர் எனக்குச் சம்மதி இல்லை. உம்முடைய பாதசாக்ஷியாக இந்தப் பூலோகம் தெய்வ லோகம் நாக லோகம் இதுகளில் இருக்கப் பட்ட புருஷர்கள் எல்லாம் எனக்குத் தகப்பன்மார்!" என்று சொன்ன தமயந்தியைப் பார்த்து, மெத்த ஆச்சரியப் பட்டு, நளமகாராஜா ஒரு வார்த்தை சொல்லுகிறான்:

=*As*, [in the way of.]

மன்மதன் + ஆகாரம் = *form. Thou* whose form is that of Kâma.

Calling your feet to witness.

ஓ, பாக்கியவதி ஆகிய பெண்ணே! நான் தேவர்களுக்காகத் தூதனாகி வந்தேன். இப்படிப்பட்ட விசேஷஞ் சொன்னால் நான் சம்மதிப்பேனோ? தேவேந்திரர் தேவர்களுக்கும் தேவ கன்னிகைகளுக்கும் எசமானர். எமதர்மராஜர் லோகத்திலே துஷ்ட நிக்கிரகம் சிஷ்டபரிபாலனம் பண்ணுகிறவர். குபேரர் நவ நிதிகளும் படைத்து, சகல தர்மங்களுந் தெரிந்து, சகல பாவங்களையும் பரிகாரம் பண்ணத் தக்கவர். வருண தேவர் சகல காரியங்களிலும் வல்லமை உண்டானவர். இப்படிப் பட்ட மகிமைகளுள்ளவர்களை நீ கலியாணம் பண்ணிக் கொள்ள மாட்டேன் என்று சொன்னால், சகல லோகத்துப் பெண்களும் உன்னை ஏசார்களா? யக்ஷ கின்னர கிம்புருஷ கருட காந்தருவர் முதலான பெயர்கள் உன்னைத் தொழத் தக்கதாகத் தேவர்களைச் சேருகிறதே உனக்கு நன்மை. பூலோ

A Sans. comp.= The destruction of the wicked and the preservation of the good.

Five classes of heavenly beings.

கத்து மனுஷர் தெய்வ லோகம் வேண்டும் என்று தபசு பண்ணு கிறார்களே. அப்படிப் பட்ட தேவ லோகத்தார் பாத தூளிக்கும் சரிப்படாத என்னை நீ கோறி

Dust of the feet.

னால் உன் புத்தியை யார் மெச்சுவார்கள்? இது நல்ல காரியம் அல்ல," என்று நள மகா ராஜா சொன்னான். அதைக் கேட்டு தமயந்தி வெகு கிலேசத்துடனே கண்ணீர் சொரிந்து, ஒரு வார்த்தை சொல்லுகிறாள்:—

"ஓய், இராஜாவே! எனக்குத் தேவர்கள் தகப்பன் மரியாதை என்று முன்னே தானே சொன்னேனே. திரும்பவும் அந்த வார்த்தையை எடுத்துப் பேசுகிறது உமக்குத் தர்மமா? நீரே புருஷன். நானே பெண்சாதி. இதற்குப் பிசகில்லை. நீர் இனி மறு வார்த்தை பேச வேண்டாம். என்னை நீர் கலியாணம் பண் ணினால் ஆச்சுது; இல்லாதபக்ஷத்துக்கு உம்மு டைய பாத சாக்ஷியாக நான் பிராணனை வைத் திருக்கிறதில்லை. அப்படி நான் செய்தால் ஸ்திரீ ஹத்தி உம் மைச் சேராமற் போகாது. ஓய், இராஜரே! பெண்கள் சீவன் விடுகிறத்துக்குப் பயப்படார்கள். நீரும் அறிந்திருப்பீர். விரு தாவிலே ஸ்திரீ ஹத்தியை ஏன் கட்டிக் கொள்ளுகிறீர்? தேவர்க ளுக்கு அனந்தமான தெண்டன் பண்ணினேன் என்றும், அவர் கள் எனக்குத் தகப்பமார், நான் அவர்களுக்குப் பெண் என்று தமயந்தி சொன்னாள் என்றும் நீர் சொல்லும், போம்!" என்றாள்.

= On the hypothesis that you don't.



**10.** §. NALA'S ENTRANCE AND RECEPTION. DAMAYANTI BROUGHT.

நள மகா ராஜா இவைகளைக் கேட்டுக் கொண்டு தேவர்கள் அண்டைக்குப் போய் நமஸ்காரம் பண்ணி, அவர்களுடனே தமயந்தி சொன்ன வார்த்தைகளை எல்லாம் ஆதியோடந்தமா கச் சொன்னான். அதைக் கேட்டு தேவர்கள் நள மகா ராஜா தமயந்தி உடனே பேசின வார்த்தைகளை எல்லாம் அவனை அறி

யாமல் கேட்டிருந்து வந்தவர்கள் ஆனபடியினாலே, நளமகா ராஜாவைக் கொண்டாடி, "ஓய், சத்திய சந்தனே! எங்கள் நிமித்தியமாய் நீ போகத்தகாத காரியத்துக்குப் போய் வெகு பிரயாசைப் பட்டாய். உன்னுடைய மனதுக்குச் சரியான மனது எங்களுக்கும் வராது, எங்கள் பாக்கியவசம்[1] இப்படி இருக்கும் ஆனால் நீர் என்ன செய்வீர்? உம்மை வெறுக்கக் காரியம் என்ன? தூதனைக் காரியம் ஆனால் மெச்சுகிறதும், ஆகாவிட்டால் தூஷணிக்கிறதும் பெரியோர்களுக்கு நல்ல காரியம் அல்ல. நாங்கள் நீர் பிரயாசைப் பட்ட நன்றியை மறக்கிறதில்லை, நீர் போம்" என்று சொல்லி, இராஜாவை அனுப்பி விட்டு, அவர் பின்னே தானே தேவர்களும் விதர்ப்ப புரிக்கு வந்தார்கள். அப்போது வீம ராஜா பதினெட்டு வகை மேள வாத்தியங்களும் முழங்கச் சகல வேடிக்கைகளுடனேயும் அந்த நள மகா ராஜாவை எதிர் கொண்டு போய் அழைத்து வரவே, பட்டணத்துச் சனங்கள் வேடிக்கைகள் பார்க்க மேலிட்டார்கள். உப்பரிகைகளின் மேலே இருந்து மங்கிலிய ஸ்திரீகளும்[2] கன்னிகா ஸ்திரீகளும் மங்கள சேஷைகள்[3] இறைத்தார்கள். புண்ணியஸ்திரீகள் கர்ப்பூர ஆர்த்திகள்,[4] நவரத்தின ஆர்த்திகள் எடுத்தார்கள். வெகு சந்தோஷங்களுடனே சகல பெண் சனங்களும் அந்த இராஜாவைப் பார்த்து, ஒருத்திக்கொருத்தி சொல்லிக் கொள்ளுகிறார்கள்:—

எப்படியென்றால், "ஓ அம்மா! பார்த்தாயோ, இந்த நள மகா ராஜர் பூரண சந்திரனைப் போலே முகமும், மன்மதனைப் போலே அழகும், சிறு வயதும், எவ்வனமும், சகல லக்ஷணங்களும், வீரதத்துவமும், சௌரிய பராக்கிரமமும், திவ்விய தேஜசும்[5] படைத்திருக்கிறார். இப்படிக்கொத்த இராஜாவை நாம் இதுவரைக்கும் எங்கும் கண்டதில்லை.

[1] Luck.
[2] Married women.
[3] Things strewn for luck.
[4] A torch.
[5] Splendour.

அநேகம் பெயர் இராஜாக்கள் இங்கே வந்திருக்கிறார்களே. அவர்களிலேயும் ஒருத்தரும் இப்படிக் கொத்த சௌந்தரிய புருஷர்கள் இல்லை. கண்டீர்களோ? அம்மா!" என்று இதுவும் அல்லாமலும், சில கன்னிகா ஸ்திரீகள் எல்லாரும் மயங்கிப் பிரமித்து விழித்த கண் இமிட்டாமல் பார்க்கிற போது பெரு மூச்செறிந்து, "இவருக்கு இப்படிப் பட்ட சொரூபத்தைப் பிரம்மா என்னமாய் உண்டாக்கினானோ?" என்றார்கள்.

பின்னும், "பார்த்தீர்களோ, இவர் இராஜா அல்ல; சூரியனோ, சந்திரனோ, குபேரனோ, தேவேந்திரனோ, அக்கினி தேவனோ, மன்மதனோ, இவர்களிலே ஆரோ ஒருவராகவேணும்" என்றும், "வெள்ளையானை[6] உண்டானால் தேவேந்திரர் என்று சொல்லலாம்" என்றும், "மீனக் கொடியும் கிளி வாகனமும் இருந்தால் மன்மதர் என்று சொல்லலாம்" என்றும், "சங்கு சக்கர கதா கட்க சாரங்கமும் வைசந்தி வனமாலையும் உண்டானால் நாராயணன் என்று சொல்லலாம்" என்றும், "கோழிக் கொடியும் வேலாயுதமும் உண்டானால் குமார ஸ்வாமி என்று சொல்லலாம்" என்றும், இப்படி பலவிதங்களாகச் சொல்லிக் கொண்டாட வேடிக்கையாகத் தெருவீதியிலே வருகிற நள மகா ராஜாவை வீம ராஜா கண்டு, ஆனந்தத் துடனே அவனுக்குத் தக்க விடுதிகள் விடுவிக்க, அதிலே அந்த நள மகா ராஜா இறங்கி, உற்சாகத்துடனே இருந்தான். அப்போது ஐம்பத்தாறு தேசத்து[7] இராஜாக்களும் அவரவர்களுக்கு வீம ராஜா விட்ட விடுதிகளிலே இறங்கினார்கள். அப்போது, வீம ராஜாவும் சம்பிரமத்துடனே அறு சுவை பதார்த்தங்களுங் கச்சாயவகைகளுடனே[8] போசனஞ் செய்வித்து, கெந்த புஷ்ப பரிமளங்களும் தரிப்பித்து, தாம்பூலமும் கொடுப்பித்து, ஆடல் பாடல் சமஸ்தமும் குறைவு

[6] The principal signs & adjuncts of Indra, Kâman, Vishnu, Subramanyan are here enumerated.

[7] The Hindûs enumerate 56 Kingdoms.

[8] With different kinds of gravies.

வாராத படிக்கு நடப்பித்து, ஆனந்தத்துடனே தன் பட்டணம் எல்லாம் நவரத்தின மயமாகவும்[9] தங்கமயமாகவும் சிங்காரஞ் செய்வித்து, சந்தோஷத்துடனே மற்றை நாள் நல்ல அமுத யோகமும் சுபமுகூர்த்தமும் ஆனபடியினாலே "தமயந்தியைச் சிங்காரித்து அழைத்துக் கொண்டு வாருங்கள்" என்று தாதிகளுக்குச் செலவு கொடுத்தான். அப்படியே தாதிகளும் தமயந்தி அண்டைக்குப் போய், வெகு சந்தோஷத்துடனே, "அம்மா, எழுந்திரும் வாரும்" என்று சொல்லி, தமயந்திக்கு அப்பியங்க ஸ்நானம் பண்ணி வைத்து, தலை மயிரை ஆற்றிக் கோதிச் சிணுக்[10] கறுத்து, வாசனை ஊட்டி, நவரத்தினம் இழைத்த குச்சுக்[11] குப்பி,[12] சடைபில்லை[13] அணிந்து, மல்லிகை, முல்லை, இருவாக்ஷி, செண்பகம், குருவேர், மரு, மருக்கொழுந்துகள் முடித்துக், கண்களுக்கு மை இட்டு, நெற்றியில் திலகம்[14] இட்டு, வாசனை உடைத்தாகிய திவ்விய சந்தனம் பூசி, நவரத்தின மயமான சரிகை இரவுக்கையைத் தரித்து, பொற் பட்டாடை[15] உடுத்தி, மூக்குத்தி, சிந்தாக்கு, நெற்றிப்பட்டம், ரத்தினவாளி, ரத்தின ஓலை, அஸ்த கடகம், வன்னசரம், முத்துமாலை, மாணிக்கப்பதக்கம், சரப்பணி, சூடகம், சரிவளை, ஒட்டியாணம், காலாழி, பீலி, பாடகம், சிலம்பு, தண்டை, கொலுசு[16] முதலான ஆபரணங்கள் எல்லாம் வேடிக்கையாக அந்தந்த ஸ்தானங்கள் அறிந்து தரித்து, அலங்காரம் பண்ணி வைத்து, நிலைக்கண்ணாடி காட்டி, அந்தப் பெண்ணை முத்துப் பல்லக்கில் ஏற்றுவித்து, முத்துக்குடைகள், பச்சைக்குடைகள், நவரத்தினக்குடைகள், வெண்சாமரைகள், ஆலவட்டம்,[17] விருதுகளுடனே வேடிக்கையாகத் தாதிகள் பிடித்து வரப், பெண்ணை அழைத்துக் கொண்டு வந்து, வீமராஜா முன்னே விட்டார்கள்.

[9] = As though made up of.

[10] = Entanglement.

[11] A little bell of gold.

[12] A golden ornament.

[13] A plate of gold, worn on the top of the head.

[14] An ornamental spot in the forehead.

[15] Silken petticoat.

[16] These are all names of jewels worn on different parts of the body.

[17] An ornamental kind of twisted malting used in processions.

11. §. DAMAYANTI MAKES HER CHOICE.

வீம ராஜாவும் தன் குமாரத்தியைப் பார்த்து, சந்தோஷமாய், "ஓ! அம்மா, உன் கோறிக்கைப் படிக்கு, இதோ, நள மகா ராஜன் முதலான இராஜாக்கள் எல்லாரும் வந்து வரிசை வரிசையாகச் சிங்காதனத்தின் பேரிலே இருக்கிறார்கள். ஆகையினாலே, அவர்களிலே உனக்கு இஷ்டமான புருஷனைக் கோறி மாலை இடலாம்," என்று மெதுவாய் நடக்கச் சொல்லி, மந்திரி பிரதானிகளையும் தன் குமாரனையும் பின்னே கூட்டி, தானும் எச்சரிக்கையுடனேயும் சர்வ ஆயுத சவரணைக[1]ளுடனேயும் நடக்க, முன்னே தாதியர்களில் விவேகமுள்ள ஒரு தாதி தமயந்தியைப் பார்த்து அந்தந்த இராஜாக்களுடைய பிரதாப குணங்களைச் சொல்லி, ஐம்பத்தாறு தேசத்து இராஜாக்களுடைய பெயர்களும் பிரதாபங்களும் பிரதிஷ்டைகளும் சௌரிய பராக்கிரமங்களும் தயை தாக்ஷண்ய குணங்களும் ஐஸ்வரியங்களும் நன்றாக வர்ணித்து, "பாரக்கு, எச்சரிக்கை, அம்மா!" என்று தாதி சொல்லிக்கொண்டு வரவும், தமயந்தி தேவி நள மகா ராஜாவின் பேரிலே நினைவாய், எல்லாரையும் வரிசையாகப் பார்த்துக் கொண்டு வந்து, கடைசியிலே நிற்கிற நிடத தேசத்து இராஜாவாகிய நள ராஜாவைக் கண்டு, தாதி வர்ணிக்கிற போது முன்னே வந்திருந்த நாலு தேவர்களும் நள மகா ராஜாவைப் போலே தாங்களும் உருவம் எடுத்துக் கொண்டு, பக்கத்திலே தானே வரிசையாக இருந்தார்கள். அப்போது தமயந்தி சமுசயப் பட்டு, பின் வாங்கி, "இது தேவர்களுடைய மாய்கை போலே காண்கிறது; இதற்கு ஒரு உபாயம் தேட வேணும்; இல்லாவிட்டால், தேவர்களை நாம் சாதிக்கக் கூடாது, எங்கே ஆகிலும் அஞ்சு நள மகா ராஜாக்கள் உண்டோ? இவர்கள் தேவர்களே, சமுசயம் இல்லை. கபட ரூபம் எடுத்து வந்த இவர்களுக்கு மாலை இடாவிட்டாலும் சபித்துப்

[1] *Provision* = &c.

போடுவார்கள்," என்று ஆலோசனை பண்ணிக் கொண்டு போய், உருக் கொண்டிருக்கிற தேவர்களைப் பார்த்து, இரண்டு கைகளை யும் கூப்பி, தெண்டனிட்டு, தமயந்தி சொல்லுகிறாள்:

"ஐயா தேவர்களே! உங்கள் மாய்கை நான் அறிய மாட்டு வேனோ? ஒன்றும் அறியாத நான் சிறு பெண். தேவரீர்கள் எனக்குத் தகப்பன்மார்கள். நான் உங்களுக்குப் பெண். உங் கள் மாய்கைகளை என்னிடத்தில் காண்பிக்கிறது உங்களுக்குத் தர்மம் அல்ல. என் பேரிலே தயவு பண்ணி மர்மத்தை விட்டு, உங்கள் நிச ரூபங்களைக் காண்பித்து, நள மகா ராஜாவை எனக்குப் புருஷனாகப் பண்ணி வையுங்கள். நான் சுகம் அனுப விக்கத் தக்கதாக என் கோறிக்கையை ஈடேற்றுங்கள்," என்று சொன்னவுடனே தேவர்கள் சந்தோஷப் பட்டுத், தங்கள் மர் மத்தை விட்டு, நிச ரூபங்களைத் தரித்துக் கொண்டு, அந்தரத்திலே[2] நின்று, தமயந்தியைப் பார்த்து, "கலியாணம் பண்ணிக் கொண்டு நீயும் நள மகா ராஜாவும் சுகமாய் இருங்கள்" என்று வாழ்த்தினார்கள். அந்தச் சமயத்தி லே சகலமான இராஜாக்களும் தமயந்தியைப் பார்த்து ஒருவ ருக்கு ஒருவர் சொல்லுகிறார்கள்:—

[2] In the midst, in space.

"ஓய், இராஜாக்களே! ஓய், மந்திரிகளே! ஓய், சேனாபதிகளே! பார்த்தீர்களோ? இவளுடைய அழகைப் பிர்ம்ம தேவன் என்ன மாய்ச் சிருட்டித்தானோ தெரியாது. சகலமான பெயருடைய மனதுகளையும் உருக்க வந்தாளோ? பூரண சந்திரனோ? மின் னல் கொடியோ? மாணிக்கத் தீபமோ? மன்மதன் கணையோ? ரதி[3] தேவியோ? அன்னப் பெடையோ? இந்திராணி[4]யோ? கரும்பு வில்லோ? அல்ல என்று சகலத்தையும் மறைப்பிக்கிற மாய்கையோ? வீம ராஜா எத்தனை கோடி தபசு பண்ணிப் பெற்ற பெண்ணோ? இந்தச் சௌந்தரியவதி ஆகிய பெண்ணைக் கலியா

[3] The wife of *Manmata* or cupid.

[4] The wife of Indra.

ணம் பண்ணுகிறதற்கு இந்த இராஜ கூட்டங்களிலே நளமகா ராஜாவுக்குப் பாக்கியம் நேரிட்டு இருக்கிறுப் போலே காணு கிறது. அவன் என்ன நோன்பு நோற்றிருக்கிறுனே? எத்தனை பாக்கிய சாலியோ தெரியாது என்று, இப்படிச் சகல இராஜாக் களும் சொல்லிக் கொள்ள, அந்தச் சமயத்திலே தமயந்தி என் பவள் சீக்கிரமாக நளமகாராஜா அண்டையிலே வந்து, தன் கையில் இருந்த பூமாலையை அவன் கழுத்திலே தரித்தாள். அப்போது ஆகாசத்திலே தேவ துந்துமிகள்[5] திமி திமென்று முழங்கினதுகள். தேவர்கள் பாரி சாத புஷ்ப வருஷம் சல சல என்று வருஷித் தார்கள். வீணை மீட்டி[6] நாரதர்[7] பாடினுர். கந் தர்வர்கள் கொண்டாடினுர்கள். சகல தேவர்க ளும் "அந்தப் பெண்ணுக்குத் தகுமான புருஷன் நளமகாராஜா வே அல்லாமல் பின்னை வேறே ஒரு இராஜா தகான்" என்று சொல்லி, சந்தோஷப் பட்டார்கள். அப்போது அவ்விடத்தில் வந்திருந்த இராஜாக்கள் எல்லாரும் அதைப் பார்த்து, ஒருவரு டனே ஒருவர் சொல்லாமல் ரணகளத்திலே[8] முதுகு கொடுத்து, ஓடினுற் போலே வெட்கப் பட்டு, நாலு திக்குகளிலும் சிதறிப் போனுர்கள். இப்படி இருக்க, அப்போது வீமராஜா மிகவும் சந்தோஷப் பட்டு, நளமகா ராஜாவைச் சகல சம்பிரமத்துடனேயும் பதினெட்டு மேள வாத் தியங்களுடனேயும் அழைத்துக் கொண்டு, தன்னுடைய அரண் மனைக்குப் போய்த், தன் அரண்மனைக் கெல்லாம் வேடிக்கையாக வும் வெகு வெகு விநோதங்களாகவும் பந்தல் போடுவித்து, நவ ரத்தினமயமாக அலங்கரித்து, பார்க்கப் பார்க்கப் பதினுயிரம் கண்கள் வேண்டும் என்று அனைவருஞ் சொல்லிக்கொள்ள, கலி யாணப் பந்தலிலே நவரத்தினம் இழைத்த சிங்காதனத்திலே நளமகாராஜாவை உட்கார வைத்து, சகல மேள வாத்தியங்க

[5] A drum.

[6] மீட்டு = play on a lute.

[7] Nârada, the inventer of musical instruments.

[8] A battle-field.

ளும் முழங்கச், சகல சாஸ்திர சம்பன்னர்களான பிராமணர்கள் ஓமம் பண்ண, பாட்டகர்கள் பாட, பாட்டுவான்கள் புகழ்ந்து கொண்டாட, மகா வைபோகத்துடனே வீம ராஜா சகல காரியங்களையும் நடப்பிக்க, நள மகா ராஜா தமயந்திக்கு மங்கிலியந்[9] தரித்தான். பிறகு சகலமான பிராமணர்களுக்கும் தக்ஷணை தாம்பூலமும் கொடுத்து அனுப்பிவிட்டு, மற்றப் பெயர்களுக் கெல்லாம் அறுசுவை பதார்த்தங்களுடனே இஷ்டான்னங்களும்[10] இடுவித்து, சந்தன புஷ்ப தாம்பூலமுங் கொடுத்து, பின்பு சகல சம்பிரமத்துடனேயும் நள மகா ராஜா விளங்கி இருக்கிற போது, தேவேந்திரன் நள மகா ராஜா இடத்திலே செலவு பெற்றுக் கொண்டு, தன்னைச் சகல தேவர்களும் சேவிக்கத் தெய்வ லோகத்துக்குப் போனான்.

[9] The marriage token, or *tâli*.

[10] இஷ்ட + அன்னம்.



**12.** §. ÇANI APPEARS. HIS DISAPPOINTMENT AND SCHEMES FOR REVENGE.

போகிற போது, மகா பலசாலியாகிய சனீஸ்பரன்[1] தமயந்தியைக் கலியாணம் பண்ண வேண்டும் என்று மனதிலே நினைத்து, தலைமயிர் அவிழ, அரையில் கட்டிய வஸ்திரம் நழுவ, சரீரம் எல்லாம் வேர்வை ஓட, பூமி அதிர, மகா வேகத்துடனே ஓடிவரவே, தேவேந்திரன் கண்டு கல கல வென்று நகைத்து, "ஓய்! சனீஸ்பரரே! நீர் ஓடிவருகிறபடியினாலே சரீரம் வேர்க்கிறது, உத்தரீயம்[2] கீழே புரளுகிறது, சிகை[3] அசைந்தாடுகிறது, மாணிக்கமாலைகள் முத்துமாலைகள் ஒன்றோடே ஒன்று சிக்குப் பட்டிருக்கிறதுகள், பலத்த காரியத்தை உத்தேசித்துப் போகிறாப் போலே காணுகிறது, அது என்ன காரியம்? சொல்லும்!" என்று தேவேந்திரன் கேட்க,

[1] The god of misfortunes, சனி + ஈஸ்பரன்.

[2] The upper cloth.

[3] The top knot = சடை.

சூரிய குமாரன் ஆன சனீஸ்பரன் புன் சிரிப்புக் கொண்டு, மகா சந்தோஷத்துடனே சொல்லுகிறான்:

"ஓ, தேவராஜரே! கேளும், பூலோகத்திலே வீம ராஜா தன் குமாரத்தி ஆன தமயந்தி என்கிற பெண்ணுக்குச் சுயம்வரம் சாட்டிவைத்தார், என்று இன்று நான் கேள்விப் பட்டேன். அவள் அழகைச் சொல்ல என்னாலே முடியாது, காரியம் மிஞ்சிப் போகிறது, நான் சீக்கிரமாகப் போகவேண்டும், அந்தத் தமயந்தியைக் கலியாணம் பண்ணிக் கொண்டு, இப்போது தானே அழைத்துக் கொண்டு வர வேண்டும், அந்தப் பெண்ணுக்கு எப்போது சுயம்வரம் சாட்டுவார்களோ, என்று வெகு நாளாகக் காத்திருந்தேன். இன்றைக்கு உங்களுடைய தயவினாலே என் கோறிக்கை ஈடேறிற்று; என்னுடைய பாக்கியமே பாக்கியம், இனிச் சகல சம்பிரமத்துடனேயும் கலியாணம் பண்ணிக் கொண்டு வருகிறேன்," என்று சொல்லிவிட்டு நடக்கிற போது சனீஸ்பரன் பின்னையும் சிறிது வசனங்கள் சொல்லுகிறான்:

"ஓய், திரிலோக நாயகரே! நான் வருகிற போது வழியிலே சிறிது அவசகுனங்களைக் கண்டேன். அதனாலே மெத்த விசாரமாய் இருக்கிறது. இந்தக் கலியாணத்துக்கு எங்கே விகாதம் வருகிறதோ, பின்னை ஆராகிலும் கலியாணம் பண்ணிக் கொள்ளுகிறார்களோ தெரியாது, என் மனசு நிற்க இல்லை, எப்படி ஆகிலும் அந்தப் பெண்ணைக் கலியாணம் பண்ண வேண்டும்" என்று அனேகமாக வெறியன் பேசுகிறாப் போலே சனீஸ்பரன் சொன்ன விசேஷங்களை எல்லாந் தேவேந்திரன் முதலான திக்குப் பாலகர்கள் கேட்டு, ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கைகொட்டி நகைத்துச் சொல்லுகிறார்கள்:

"ஓய், கலி ராஜா ஆகிய சனீஸ்பரரே! நீர் எங்கே இருந்தீர்? இன்னம் அந்தப் பெண்ணினுடைய சமாச்சாரங் கேட்க இல்லையா? பூலோகத்து இராஜாவான நள மகா ராஜா அந்தப் பெண்

ணைக் கலியாணம் பண்ணினான். நீர் ஏன் போகிறீர்? வாரும்! நாங்களும் அந்தப் பெண்ணைக் கோறித் தான் போய், எங்களாலே ஆன உபாயமுஞ் செய்து பார்த்தோம், அதற்கு உட்படாமல் அந்தப் பெண் நளமகாராஜாவைத் தானே கலியாணம் பண்ணிக் கொண்டாள். நாங்கள் ஆசையை விட்டு நமக்குப் பிராப்தி இல்லை என்று எண்ணி, இதோ, போகிறோம். நீரும் வாரும்," என்று சொன்னதைச் சனீஸ்பரன் கேட்டு, மெத்தக் கோபித்து, "ஓ! ஓ! இப்படி ஆச்சுது, பார்த்தீர்களோ," என்று பற்களை நெற நெற என்று கடித்து, மீசை துடிக்க, முகத்திலே வேர்வை காண, இரண்டு கண்களிலும் நெருப்புப் பொறிகள் பறக்க, ஒரு அட்டகாசம் பண்ணி, தேவேந்திரன் முதலான தேவர்களைப் பார்த்துச் சனீஸ்பரன் சொல்லுகிறான்:

S. a horse-laugh.

"ஓய், தேவர்களே! நளமகாராஜா நம்மைப் பார்க்கிலும் அதிக ரூபமுள்ளவனோ? நம்முடைய சௌரிய பராக்கிரமங்களிலேயும் அதிகம் ஆனவனோ? அதை எண்ணிப் பாராமல் அந்தப் பெண் செய்ததைப் பார்த்தீர்களா? நம்மைச் சற்றாகிலும் எண்ணாமல் போனாள். தேவதைகளான உங்களைப் பார்க்கிலும் அழகும் ஆண்மையும் ஐஸ்வரியமும் குணமும் உள்ள பேர்கள் ஆர் இருக்கிறார்கள்? மனுஷர்கள் முன்னே உங்களைப் பங்கப்படுத்தி வைத்து, நளமகாராஜாவைத் தானே கலியாணம் பண்ணினாள், அல்லவா? நல்லது, உங்கள் மனோ பாவம் அறிந்தும் இப்படிச் செய்தாள், பார்த்தீர்களா? அவள் வேண்டும் என்று செய்ததே அல்லாமல் வேறில்லை. நல்லது, இப்படிச் சகல நியாயங்களும் அறிந்த இந்த நளமகாராஜா தான் எப்படிக் கலியாணம் பண்ணுவான்? அவன் என்ன? அத்தனை அதிகாரம் உள்ளவனோ? அவன் பிடித்

Disgrace. 161.

தேதே தனுசா? அவன் பிடித்ததே குடையா? நல்லது, ஆகட்டும், என்னுடைய பராக்கிரமத்தை அவன் அறியானே? பிர்ம்ம ருத்திராதி தேவர்களும் என் முன்னே நின்று நிர்வாகிக்க மாட்டார்களே; இவன் நர புருஷன் எம்மாத்திரம்? என் பேர் சொன்ன மாத்திரத்திலே ஈரேழு பதினாலு லோகங்களும் கிடு கிடென்று நடுங்கிப் போகச்சே, இவனே என் முன்னே நிற்கிறவன்! ஆகட்டும், உங்கள் மனது குளிரப் பண்ணி வைக்கிறேன். அந்த நள மகா ராஜாவும் அந்தப் பெண்ணும் சுகம் அனுபவிக்கப் போகிறார்களோ? நான் அவர்கள் சுகித்திருக்கப் பார்க்கப் போகிறேனே? ஆகையினாலே, இப்போது என்னுடைய பிரதிக்கினையைக் கேளுங்கள். என்ன என்றால், நான் இந்த க்ஷணத்திலே பூலோகத்திலே போய், அந்த நள மகா ராஜா வுடனே சூதாடத் தக்கதாக ஒரு இராஜாவை எடுத்து விட்டு, அவர்களைச் சூதாடுவித்து, நள மகா ராஜாவை உபாயத்தினாலே தோற்பித்து, அவன் சீமை பூமியை எல்லாம் பறிப்பித்து, பெண் சாதியைப் பிரித்து, அவனை அவாந்தரமான காட்டிலே அலையச் செய்து, அவனுடைய சொரூபத்தை மாற்றி வைத்து, ஓட்டைப் பானையைக் கையிலே எடுத்துக் கொண்டு தனக்குப் பகுதி கட்டுகிற இராஜாவுக்குச் சுயம்பாகி ஆகப் பண்ணி வைக்கிறேன். ஓய், தேவர்களே! நான் இப்படிச் செய்யாமல் போனேனே ஆகில் நீங்கள் என்னைச் சூரிய பகவான் குமாரன் என்று சொல்ல வேண்டாம். நான் ஒரு காரியஞ் செய்ய நினைக்கிறதே இல்லை. வேண்டும் என்று நினைத்தேனே ஆகில் அது நிறைவேற்றாமற் போகிற தில்லை. என்னுடைய சமாச்சாரம் உங்களுக்கும் நன்றாகத் தெரியும் அல்லவோ? அந்தத் தமயந்தி என் கையிலே அகப்பட்டுக் கொண்டு, தான் படப்

ருத்திரன் = Siva.

Pleonastic.

A cook.

*"It is not often I take a thing in hand."*

போகிற பாடு அறியாமல் நளமகா ராஜாவைக் கலியாணம் பண்ணினாள். அவனையும் இனிமேல் என்னை நினைக்கும் படி அலையப் பண்ணி வைக்கிறேன். எப்படிச் சுகப்படுகிறாளோ, பார்ப்போம். ஆகட்டும், நீங்கள் என்னுடைய திராணியைப் பார்க்கப் போகிறீர்கள்" என்று, சபதஞ் சொல்லி, சனீஸ்பரன் தேவேந்திராதி தேவர்கள் கையிலே விடை பெற்றுக் கொண்டு, பூலோகத்துக்கு வந்து வீம ராஜா பட்டணத்திலே இருக்கிற நளமகா ராஜா அண்டைக்குப் பிராமண ரூபமாய்ப் போய், அவனுடைய சாந்த குணத்தையும் ஆசாரத்தையும் பூத தயவையும் பெரியோர்களிடத்தில் பயபத்தியையும் சற்சன ரக்ஷையையும் துர்ச்சன சிக்ஷையையும் பார்த்து, மனது கலங்கி, திகில் எடுத்து, "நாம் நினைத்து வந்த காரியத்துக்கு விக்கினம் வரும்போல் இருக்கிறது, இப்படிப்பட்ட மகாத்துமாவை நாம் பிடிக்க மாட்டுவோமோ?" என்று விசாரத்துடனே சிந்தாக்கிராந்தனாய்க் காலம் வரும் அளவும் பார்த்துக் கொண்டு காத்திருந்தான்.

Benevolence to all orders of the creation.

Overwhelmed or plunged in thought.



**13.** §. DAMAYANTI'S DEPARTURE FROM HER FATHER'S PLACE.

இப்படி இருக்கவே நளமகா ராஜா பெண்சாதியும் தானும் கலியாண வேடிக்கைகள் எல்லாம் ஆனபிற்பாடு, சிறிது நாளைக்குப் பிறகு தமயந்தியைப் பார்த்து, நளமகா ராஜா ஒரு வார்த்தை சொல்லுகிறான்: "ஓ, பெண்ணே! பிராண நாயகி! நாம் இவ்விடத்திற்கு வந்து வெகு நாள் ஆயிற்று, நம்முடைய ராச்சியம் என்னமாய்ப் போயிற்றோ தெரிய வராது, ஊருக்குப் போக வேண்டும் என்று, உனக்குச் சற்றாகிலும் நினைவு பிறக்க இல்லையே, நம்முடைய தேசம் என்ன பாடு படுகிறதோ? பிரஜைகள் என்ன விசாரப் படுகிறார்களோ தெரியாது, எத்தனை காலம் ஆனாலும் நம்முடைய பட்டணத்தை விட்டு இவ்விடத்தில் இருக்கலா

மா? ஆகையினாலே நாம் இனி இங்கே இருக்கக் கூடாது. நீ போய் உங்கள் தாய் தகப்பனுக்குத் தெரியச் சொல்லி, அவர்கள் கையிலே சந்தோஷமாகச் செலவு வாங்கிக் கொண்டு வா, பட்டணத்திற்குப் போவோம்," என்று சொன்ன உடனே, தமயந்தி கேட்டு, எழுந்திருந்து, தெண்டனிட்டு, "ஓய், பிராணநாயகரே! சுவாமி! தேவரீர் சொன்னபடியே நான் தாய் தகப்பன் கையிலே செலவு வாங்கிக் கொண்டு நம்முடைய தேசத்திற்கு நாம் போகவேண்டியதே அல்லாமல் அன்னிய தேசத்திலே நாம் ஏன் இருக்க வேண்டும்? இது தர்மம் அல்ல. இப்போதே நான் போய்ச் செலவு வாங்கிக் கொண்டு வருகிறேன்," என்று சொல்லி, தமயந்தி தன் தாயார் அண்டைக்குப் போய் அவளுக்குத் தயவு வரும் படிக்குக் கொஞ்சின வார்த்தைகளாகப் பேசிப், பய பத்தியுடனே சேவித்து நின்று சொல்லுகிறாள்:—

"அம்மா! இந்த ராச்சியத்திலே பெண் பிறந்தால் பிறந்த வீடு சொந்தம் இல்லை என்கிற வார்த்தை நிசம் என்று இன்றைக்குத் தெரிய வந்தது. அது எப்படி என்றால், என் புருஷர் தம்முடைய பட்டணத்திற்குப் போக வேணும் என்று சொல்லி, உங்கள் கையிலே செலவு வாங்கிக் கொண்டு வரச்சொல்லி, என்னை அனுப்பி வைத்தார், அம்மா," என்று குளிர்ந்த வசனமாகச் சொல்லி, இரண்டு கண்களிலேயும் முத்துகள் உதிர்ந்தாற் போலே கண்ணீர் சொரிகிற குமாரத்தியைப் பார்த்து, தாயானவள் கண்களிலேயும் நீர் சொரியத் துக்கித்துச் சொல்லுகிறாள்: "அம்மா! மகளே! என் கட்டிக்கரும்பே! என் கருணைக்கடலே! என் கண்ணுட்டியே! என் தாயே! இன்றைக்கு என்னைப் பிரிந்து போகும்படி ஆச்சுதோ? நான் பட்டணத்திற்குப் போய் வருகிறேன் என்று சொல்லுகிறாயே, உன்னை விட்டு அரை க்ஷணம் ஆகிலும் நான் பிரிந்திருக்க மாட்

The image seen in the eye.

டேனே. இதற்கு எப்படி?" என்று சொல்லி, அந்தப் பாக்கிய வதி புத்திர சோகம் பொறுக்க மாட்டாமல், அடி யுடனே வெட்டிச் சாய்த்த வாழைமரம் போலே நிலத்திலே தொப்பென்று விழுந்து, மூர்ச்சை அடைந்தாள். தமயந்தியும் தன் தாயாரைப் பார்த்து விசனத்தை நிர்வகிக்க மாட்டாமல் தானும் மூர்ச்சையாய் விழுந்தாள். பிறகு பாங்கி மார் செய்த உபசாரத்தினாலே இருவரும் மூர்ச்சை தெளிந்து எழுந்திருந்து, உளுக்கார்ந்து கொண்டு, வெகு சோகப் படுகிற தைப் பாங்கிமார்கள் கண்டு, அவர்களும் பொறுக்க மாட்டா மல் பரிதாபப் பட்டுக் கொண்டிருக்கவே, வீம ராஜா அவ்வி டத்திற்கு வந்து, அவர்கள் துக்கப் படுகிறதைப் பார்த்து, தானும் சற்றே புத்தி கலங்கி விசாரப் பட்டு, உடனே தைரியசாலி யான படியினாலே சோகத்தை விட்டு, தன் குமாரத்தியையும் பெண்சாதியையும் தேற்றி, அவர்கள் சோகத்தை நீக்கி, சந் தோஷப் படுத்தி, பிறகு மருமகன் ஆன நள மகா ராஜாவை அ ழைத்து, அவருக்குத் தகுதியான மரியாதைகள் பண்ணி, தன கனக வஸ்து வாகனாதிகளுங் கொ டுத்து, தன் குமாரத்திக்கு ஆபரணங்களும் சரிகை ரவிக்கைகளும் தங்கமயமான வஸ்திரங்களும் பின்னையும் என் னென்ன வஸ்துகள் உண்டோ அதுகள் எல்லாம் சீதனமாகக் கொடுத்து, வீம ராஜா தன் மகளைப் பார்த்து, ஒரு வசனஞ் சொல்லுகிறான்:

*Yearning, grief.* (பாக்கிய வதி புத்திர சோகம்)

*S. comp. = Wealth-gold-good conveyances, &c.* (தன கனக வஸ்து வாகனாதி)

"ஓ, அம்மா! தமயந்தி! நீ கோறின படியே ஐம்பத்தாறு தே சத்து இராஜாக்களுக்கும் அதிபதியான நள மகா ராஜா உனக் குப் புருஷனாகக் கிடைத்தான். நாங்கள் உன்னைத் தபசு பண் ணிப் பெற்றதனால் ஐம்பத்தாறு தேசத்து இராஜாக்களையும் கண் டோம்; சாஸ்வதமான கீர்த்தியையும் படைத் தோம்; பிரதிஷ்டியையும் அடைந்தோம்; உனக் கு அவ்விடமும் இவ்விடமும் சரியே. அங்கும் இங்குமாய்

*Eternal.* (சாஸ்வதமான)

வரப் போக இரு. இவ்விடத்தை மறவாதே. நான் உன்னுடனே கூட ஆள் அனுப்பி வைக்கிறேன். மனதிலே கிலேசப்பட வேண்டாம். எத்தனை காலம் ஆனாலும் நீ உன் தாய் வீட்டிலே தானே இருந்தால் உன் சமுசாரம் என்னமாய் நடக்கும், கோத்திரம் என்னமாய் விளங்கும்? அது தர்மம் அல்ல, அம்மா! நீ உன் மாமியார் வீட்டுக்குப் போய் வா, நான் தினமும் உன் செய்திகளை விசாரித்துக் கொள்ளுகிறேன்" என்று வீமராஜா சொல்ல, அப்போது தபனுபி என்கிற தமையன் கிலேசப்படத் தமயந்தி கண்டு தைரியத்தை விடாமல் தமையனுக்கு உபசாரமாகக் குளிர்ந்த வார்த்தைகளைச் சொல்லி, தேற்றி, பின்னையுஞ் சொல்லுகிறாள்:

"ஓ, அண்ணா! நம்முடைய ஐயாபேரில் பத்தியாய்ப் பிரியமாய் அவர் சொல்லைத் தள்ளாமல் நடந்து கொண்டிரு, என் மனதும் உன் மைத்துனன் மனதும் சந்தோஷம் ஆகும்படியே தாய் தகப்பன் சொல்லை மீறாமல் நடந்து கொள். இதுவரைக்கும் இருந்தால் போலே விலாசமாய் இராதே. நாம் அறியாத புத்தி இவர்களுக்குத் தெரியுமோ என்றெண்ணாதே. நான் அண்டையிலே இதுவரைக்கும் இருந்தேன். இப்போது தூரப் போகிறபடியினாலே சொல்ல வேண்டியதுகளை உனக்குச் சொன்னேன். நீ அறியாத புத்தி சொல்லப் போகிறேனா? நான் ஊருக்குப் போகிறேன் என்று நீ விசனப்பட வேண்டாம், அண்ணா!" என்று சொன்ன உடனே, தபனுபி தலையை இறங்கிக் கொண்டு, கண்ணீரை உதிர்த்தான். அவன் பெண்சாதி வந்து அவன் கண்ணீரைத் தன் முந்தானையாலே துடைத்து, "இப்படி உண்டோ? எங்கே ஆகிலும் பெண்ணை மாமியார் வீட்டுக்கு அனுப்பி வைக்கிற போது விசாரப் படுவார்களோ? சந்தோஷமாய் அல்லவோ அனுப்புவார்கள், நானும் இப்படி அருமை பெருமையாய் வளர்ந்தவள், அல்லவா? உங்கள் வீட்

டில் வந்து வாழ இல்லையா? எந்தக் காலத்திற்கும் எப்படியோ அப்படி இருக்க வேணும் என்று புருஷனுக்குத் தெரியச் சொல்லித் தேற்றினாள். அப்போது வீம ராஜா தமயந்தியைத் தங்கப் பல்லக்கிலே ஏற்றுவித்து, நள மகா ராஜாவை நவரத்தினம் இட்டிழைத்த ரதத்தின் பேரிலே ஏற்றுவித்து, தானும் தன் ஜனங்களும் ரத கெஜ துரக பதாதிகள் என்னும் சதுரங்க பலத்துடனே கூடப் பட்டணத்தை விட்டு, வெளிப் பட்டு, சகல மேள வாத்தியங்களும் முழங்கப், பிராமணர்கள் ஆசீர்வாதம் பண்ணிக் கொண்டு வர, வெகு ஆடம்பரத்துடனே சிறிது தூரம் வந்து, ஓர் வார்த்தை சொல்லுகிறான்:—

*With a four-membered force, of chariots, elephants, horses and foot-soldiers.*

"ஓய், நள மகா ராஜரே! இந்தப் பெண் பொன் கொடி போல் வளர்ந்தது மாத்திரமே அல்லாமல் வயது கொஞ்சம், மெத்த அறியாதவள்; ஆகையினாலே, என்னைப் பார்த்து இந்தப் பெண்ணை ரக்ஷியும். அரை நாழிகை ஆகிலும் பசி பொறுக்க மாட்டாள். நான் வெகு அருமையாக வளர்த்தேன். ஓய், நள மகா ராஜரே! இந்தப் பெண்ணினுடைய தாயும் நானும் முனீஸ்பரரைச் சேவித்து, அவர் வரப்பிரசாதத்தினாலே வந்த பெண் இது. ஆகையினாலே, அந்த முனீஸ்பரரைப் பார்த்தாகிலும் இந்தப் பெண்ணை ரக்ஷிக்க வேணும்; பல பல வார்த்தைகள் என்னத்திற்கு? சிறு பெண், புத்தி தெரியாது, அவள் சரீரம் இளைத்துப் போகாமல் படிக்கு பராமரித்துக் கொள்ளும்!" என்று சொல்லி, தானும் தன் குமாரனும் அவருக்குச் செலவு கொடுத்து, அவர் கையிலே தாங்களும் செலவு வாங்கிக் கொண்டு திரும்பினார்கள். அப்போது, நள மகா ராஜா தன் மாமியாருக்கும் மாமனாருக்கும் நமஸ்காரஞ் செய்து, மைத்துனனையுந் தழுவிக் கொண்டு, அவன் கையிலேயுஞ் செலவு வாங்கிக் கொண்டு, அவர்களை

*Ascetic-lords.*

*For their sakes at least.*

அனுப்பி விட்டு, தானும் தமயந்தி உடனே கூடச் சகல சேனைகளுஞ் சூழ்ந்து வர, சிறிது தூரம் போய்ப் பிறகு நள மகா ராஜா பல்லக்கிலே இருக்கிற பெண்ணைப் பாங்கிமாருடனே கூடத் தன் ரதத்தின் பேரிலே ஏற்றிக் கொண்டு, தாம்பூலங்கள் கொடுத்து, மனசு சந்தோஷமாகச் செய்து, சகல மேள வாத்தியங்களும் முழங்க, வெகு உற்சாகத்துடனே காடுகள் மேடுகள் ஆறுகள் கழிகள் மலைகள் செடிகள் பட்டணங்கள் அக்கிராரங்கள் இதுகள் முதலானதுகளை எல்லாங் கடந்து, நிடத தேசத்துப் பட்டணத்திற்குச் சமீபத்தில் வந்து, நள மகா ராஜா தண்டு விட்டிறங்கி, மந்திரிகளுக்குத் தான் வந்த சமாச்சாரங்களைச் சொல்லி அனுப்பி வைத்தான்.



### 14. §. NALA AND DAMAYANTI ARRIVE AT HOME.

அது கேட்டு மந்திரி பிரதானிகள் சகலமான பேர்களும் சந்தோஷப் பட்டு, பட்டணம் எங்கும் வேடிக்கையாய் அலங்காரம் பண்ணி வைத்து, சிறிது தங்கத் தட்டுகளிலே பழங்கள் புஷ்பங்கள் தாம்பூலங்கள் முதலான வஸ்துகள் காணிக்கையாக எடுப்பித்துக் கொண்டு, மேளவாத்தியத் தொனிகளுடனே பட்டணத்தை விட்டுப் புறப்பட்டு வந்து, நள மகா ராஜாவைக் கண்டு நமஸ்காரங்கள் செய்து, கைகட்டிக் கொண்டிருந்தார்கள். இராஜாதி இராஜன் ஆகிய நள மகா ராஜாவும் சந்தோஷத்துடனே மந்திரிகள் முதலான பேர்களை ஆதரணை பண்ணி, அவர்கள் கொண்டு வந்த வஸ்துகளை எல்லாம் பிராமணர்களுக்குக் கொடுத்து விட்டு, அவர்களுடனே கூட நள மகா ராஜா சகல சம்பிரமங்களுடனேயும் பட்டணத்திலே நல்ல சுப முகூர்த்தத்திலே பிரவேசித்து, வீதிகளில் அலங்காரமாய்ப் புறப்பட்டு வருகிற போது அந்தப் பட்டணத்திலே பொன் கோபுரங்களும் பொன் உப்பரிகைகளும் பொன் கோட்டைகளும் நவரத்தினக் கொத்

தளங்களும் தங்கத்திலுலே கட்டின வீடுகளும் நவரத்தின மய மாயிருக்கிற மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் பொன் பிரகாசமான பிராகாரங்களும் பின்னையும் அனேக விந்தைக ளான வேடிக்கைகளை எல்லாம் நளமகாராஜா தமயந்திக்குக் காண்பித்துக் கொண்டு வரவே, பட்டணத்து ஜனங்கள் எல் லாரும் கும்பு கும்பாய்க் கூடிக்கொண்டு, கர்ப்பூர விளக்குக ளும் ஆர்த்திகளுங் காட்ட, பிராமண ஸ்திரீகள் கெந்தாக்ஷதைகள் இறைக்க, பிராமணர்கள் ஐஸ் வரியமும் வெகு கீர்த்தியும் உண்டாய்ச் சிரஞ்சீவிகளாய் விளங் கக் கடவதென்று சொல்லி, ஆசீர்வாதம் பண்ணி, அக்ஷதைகள் கொடுக்கப், பொன் பிரம்புக்காரர் ஆன கட்டியக்காரர்கள் எச் சரிக்கை பராபரி பண்ணி, சந்தடிகளை விலக்கப், புலவர் பாட, பாட்டுவான்கள் எதிராக நின்று "பராக்கு! சுவாமி, பராக்கு!" என்று சொல்லி, அவருடைய பராக்கிரமங்களைக் கொண்டாட, இரு பக்கத்திலேயும் இராஜ கூட்டங்கள் நெருங்கி வர, மங்கிலிய ஸ்திரீகள் புஷ்ப சேஷை கள் இறைக்க, பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் முத லான பேர்கள் முத்து சேஷைகள் இறைக்க, சகல ஜனங்க ளும் ஆனந்தமாய் வேடிக்கை பார்க்க, இப்படி உற்சாகங் களுடனே நளமகாராஜா நிடத புரத்தைப் பிரதக்ஷணம் பண் ணித், தன் பெண்சாதியும் தானும் அரண்மனையே போய், சம் பிரமத்துடனே வேடிக்கையாக இருந்தார்கள். தமயந்தி தேவி யுந் தன் புருஷன் கட்டிவைத்த அரண்மனை அந்தப்புரங்களை நன்றாகப் பார்த்து, தன் மனிதரை விட்டுப் பிரிந்து வந்ததும் பாராமல், முன்னே வெகு நாள் சமுசாரம் பண்ணினவள் போ லே பழகிச், சந்தோஷத்துடனே தானும் தன் புருஷனும் ஒருவருக் கொருவர் பிரியாவிடை யாய்ப் பிராணன் ஒன்றும் பேர்ங்திகள் இரண்டு மாக, ஒரு மனதாய் இருந்தார்கள். நளமகாராஜா லோகத்

அக்ஷதை, a kind of offering of rice, &c.

Hind. = *proper*.

பிரியாத இடை = inseparably.

body.

து, சனங்களை எல்லாம் தர்மம் நீதி தப்பாமல் இரக்ஷித்துக் கொண்டு, லோகத்துச் சனங்கள் தன்னைக் கொண்டாடப் பிரதிஷ்டையாகத் தன் பெண்சாதியுடன் சுகமே இருந்தான்.



**15.** §. SANI'S SCHEMES. A SON AND A DAUGHTER BORN TO NALA.

இப்படிச் சகல சம்பிரமத்துடனே இருக்கிற நள மகா ராஜாவைச் சனீஸ்பரன் துக்கப் படுத்துகிற நிமித்தியம் சமயம் பார்த்துக் கொண்டிருந்து, ராஜாவினுடைய சம்பத்தைப் பார்த்து பொறுக்க மாட்டாமல், தன்னுள்ளே தானே நினைத்து, யோசனை செய்து விசாரப் படுகிறான். எப்படி என்றால், ஐயையோ! நான் கர்வத்தினாலே கெட்டேன்; விருதாவிலே தேவர்கள் முன்பாக வெறும் பிரதிக்கினையைப் பண்ணி வந்தேனே ஒழிய நினைத்து வந்த காரியம் நிறைவேறாமல் போயிற்று. இதற்கு நான் என்ன செய்வேன்? சகல தேவர்களுக்கு முன்பாகச் சொல்லிய என் வார்த்தைகள் தப்பிப் போகிறதுகள் அல்லோ? என்னை ஒருவரும் லக்ஷியமாக எண்ணமாட்டார்களே! இந்த அபகீர்த்திக்கு என்னமாகத் தப்பித்துக் கொள்ளுவேன்? இந்த நள மகா ராஜாவை எம்மாத்திரமோ, என்று இருந்தேன். லோகத்திலே இருக்கிற ராஜாக்களுக்கெல்லாம் அதிகமான ராஜாவாய் இருக்கிறான்; தர்ம சொரூபமாக இருக்கிறான்; இதுவும் அல்லாமல் ஆசாரம், நீதி மார்க்கம், தயை தாக்ஷண்யம், துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனம், இவைகளிலேயும் அதிகமாய் இருக்கிறான்; நியமம் தப்பி இருக்கிற வேளையிலே இவனைப் பிடிக்க வேண்டுமே அல்லாமல் மற்ற வேளையில் கூடாது" என்று சொல்லி, எப்போ சமயம் கிடைக்குமோ என்று ஒரு நிமிஷம் ஆகிலும் ஏமாறாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

சனீஸ்பரன் அப்படிக் காத்திருக்கிற போது அனேகம் நாளைக்குப் பிறகு ஒரு நாள் அந்த நள மகா ராஜா கை கால் சுத்தி

பண்ணிக்கொள்ளுகிற இடத்திலே ஒரு முள்ளு முனை மாத்திரம் நனையாமல் இருந்தது; அது கண்டு சூரிய குமாரன் ஆன சனீஸ்பரன் சந்தோஷித்து, இது நல்ல சமயம் என்று சொல்லி, அந்த இடத்திலே போய் இருந்தான்.

அப்போது நல்ல சுபமுகூர்த்தத்திலே தமயந்தி ஆண் பிள்ளையைப் பெற்றாள். அப்போது நள மகா ராஜா தனக்குக் குமாரன் பிறந்தான் என்று கேட்கவே, சந்தோஷப் பட்டு, வசிஷ்டன்[1] முதலான மகா முனீஸ்பரர்களை அழைப்பித்து, புத்திரோச்சவம் பண்ணி, சாதக கர்மங்களை எழுதுவித்து, ஜனங்கள் எல்லாரும் சந்தோஷப் படப் பூதானம், கோதானம், அசுவதானம், சிவிகை தானம், இவை முதலான தானங்கள் அபரிமிதமாகக் கொடுத்து, பின்னையும் பேதை ஜனங்களுக்கும் திர்த்தியாகத் தானியங்களைக் கொடுத்து, சந்தோஷமாக இருந்தான். தமயந்தியும் இரண்டாவது கர்ப்ப வதியாய் ஒரு பெண்ணைப் பெற்றாள். தாயைப் போலே பெண்ணும் தகப்பனைப் போல் பிள்ளையும் பிறந்த படியினாலே சகல ஜனங்களும் நள மகா ராஜாவுக்குப் பிள்ளையும் பெண்ணும் உண்டாச்சுது, அல்லவோ? என்று கொண்டாடிச் சந்தோஷப் பட்டுக் கொண்டிருந்தார்கள். நள மகா ராஜாவும் தமயந்தியும் பிள்ளையும் பெண்ணும் எல்லாரும் சுகமாகவே இருந்தார்கள்.

[1] His spiritual guide.



### 16. §. THE HUNT.

இப்படி நள மகா ராஜா நீதி தப்பாமல் சகலமான ராஜாக்களும் பகுதி கட்ட செங்கோல் நடத்திக் கொண்டு சுக சீவியாய் இராச்சிய பரிபாலனம் செய்து கொண்டிருக்கிற போது, தலை விதியைத் தள்ளக் கூடாத படியினாலே ஒரு சீவ இம்சையும் சொப்பனத்திலேயும் நினையாமல் இருக்கிற ராஜாவுக்கு

வேட்டை மார்க்கமாய்ப் போக வேண்டும் என்று நினைவு பிறந்து, மந்திரி பிரதானிகளுடனே கூட அஸ்வாரூடனாய்[1] வேட்டைக் காரர்களையும் அழைப்பித்துக் கொண்டு, தமயந்தி தேவியையும் ரதத்தின் பேரிலே ஏற்றிக் கொண்டு, ரத கெஜ துரக பதாதிகள் சூழ்ந்து வர, சகல சனங்களும் வேடிக்கை பார்க்கப் பிரயாணப்பட்டு, பேரிகை அடித்துக் கொண்டு காட்டிலே போய், அவ்விடத்திலே வேட்டைக்காரர்களை வேட்டை ஆட உத்தரவு செய்தான். அவர்கள் வலைகளையும், கண்ணிகளையும், போனுகளையும் ஒட்டி வைத்து, ஈட்டி, வல்லயம், கத்தி, சுரிகை, கதை, தோமரம், சிங்காணி வில்லுகள் முதலான விந்தை விந்தைகளான ஆயுதங்களும் எடுத்துக் கொண்டு, இராஜாளிகளும் சிவிங்கிகளும் வேட்டை நாய்களும் பிறகே வர, சல்லடத் தட்டி கட்டி, மீசைகளை முறுக்கிக் கொண்டு, வேட்டைக் காரர்கள் எல்லாரும் ராஜாவின் முன்னாக நின்று தெண்டன் பண்ணி, தங்கள் சாதீகமான[2] பேச்சுகளைப் பேசிக் கொண்டு, ராஜாவினிடத்தில் உத்தரவு பெற்று, காட்டுக்குள்ளே புகுந்து, ஒருவருக் கொருவர் அதட்டிப் பேசிக் கொண்டு, "அடா! பார் அடா! என் வலுமையை! வேங்கைப் புலியின் பேரிலே அவதானமாய் ஏறி, அதன் கையிலே அகப்படாமல் அந்தப் புலியினுடைய இடுப்பிலே ஊஞ்சலாடுகிறேன்," என்று ஒருவன் சொல்ல, ஒருவன் "போ! போ! அது எம்மாத்திரம் வலுமை? இதோ, பார்! நான் போய், அதோ இருக்கிற சிங்கத்தைப் பிடித்து, அதின் பேரிலே ஏறி, வையாளி[3] விடுகிறேன்," என்று பராக்கிரமம் பேசினான். மற்றொருவன் அட்டகாசம் பண்ணி, "அடா! பார் அடா! இதோ, நான் போய், அதோ, வருகிற சிங்கத்தையும் யாளியையும் சேர்த்துப் பிடித்து இழுத்துக் கொண்டு வருகிறேன்,"

[1] அஸ்வம், a horse. ஆரூடன், one who is mounted on.

[2] Belonging to their cast.

[3] Full gallop.

என்று தன் பராக்கிரமத்தைச் சொன்னான். அதிலே ஒருவன் "அடா! பேய் பிடித்தவனே! இதோ, நான் அப்புறம் போகாமல் இருந்த இடத்திலே தானே இருந்து, சகல மிருகங்களையும் அழைப்பிக்கிறேன், பார் அடா!" என்று சொன்னான். இப்படி வேட்டைக்காரர் தங்கள் தங்கள் சௌரியங்களைப் பேசிக் கொண்டு, காட்டிலே புகுந்து, கரடி, சென்னாய், மான், கலைகள், உடும்புகள், காட்டுப் பன்றிகள், சிறுத்தைப் புலிகள், வேங்கைப் புலிகள், யாளிகள், சிங்கங்கள், காட்டானைகள் முதலான மிருகங்களை எல்லாம் சிதறி அடித்துக் கொண்டு, சில துஷ்ட மிருகங்களைப் பிடித்து வந்து, இராஜாவின் முன்னே விட்டு, அவைகளை உசுப்பி[4] வைத்துத் துரத்தினார்கள்.

[4] உசுப்பு stir up, show off.

அப்போது இராஜேந்திரனும் வேட்டைக்காரருடனே கூடத் தானும், சீவ இம்சை ஆகாது என்று இருந்தவன், சற்றுகிலும் எண்ணாமல், அந்தந்த மிருகங்கள் பேரிலே அம்புகளை விட்டுத் துரத்துகிற போது அனேக மிருகங்கள் செத்துப் போயின. சிறிது மிருகங்கள் காயப்பட்டு ஓடிப் போயின. அப்போது வேட்டைக்காரர் ஆனையினுடைய கும்பஸ்தலங்களை உடைத்து, அதிலே உதிர்ந்த முத்துகளையும், புலி நகங்களையும், யானைத் தந்தங்களையும் எடுத்துக் கொண்டு, கஸ்தூரி மிருகங்களும், சல்லிய மிருகங்களும், புனுகு பூனைகளும், பின்னையும் உச்சிதமான மிருகங்களும் பிடித்துக் கொண்டு வந்து, ராஜாவின் முன்னே காணிக்கையாக வைத்து தெண்டம் பண்ணினார்கள். அந்த நள மகா ராஜா சந்தோஷப் பட்டு, அவர்களுக்கெல்லாம் உச்சிதமான உடு கூறைகள் கொடுத்து, தன்னுடைய ஆனை சேனை பரிவாரத்துடனேயும் பெண்சாதி பிள்ளைகளுடனேயும் புறப்பட்டுப் பட்டணம் வந்து சேர்ந்தான்.

**17.** §. SANI SENDS PUSHKARAN TO NALA TO CHEAT HIM.

பிற்பாடு சனீஸ்பரன் பார்த்து, தான் முன்னே நினைத்து வந்த காரியம் அனுகூலம் ஆயிற்றென்று, சந்தோஷத்துடனே முகாரவிந்தம்[1] பிரகாசிக்க அதிக சீக்கிரமாய்ப் புஷ்கர ராஜா அண்டைக்குப் பிராமணனைப் போலே போய் அவனைக் கண்டு, அவனுடனே ஒரு வார்த்தை சொல்லுகிறான்:

[1] The face-lotus.

"ஓய் ராஜரே! நான் சூரிய பகவான் குமாரன். என் பெயர் சனீஸ்பரன். உம்மண்டைக்குக் கொஞ்சங்காரியமாக வந்தேன். இந்தப் பிராமணன் என்னத்தைக் கேட்பானோ என்று சிந்திக்க வேண்டாம்; உண்டான விசேஷம் உம்முடனே சொல்லுகிறேன், கேளும்! என்ன என்றால், தேவர்கள் மனுஷர்கள் முதலான பேர்கள் என் பேர் சொன்னால் நடுங்குவார்கள். அவர்களுடைய மதங்களை எல்லாம் என்னுடைய மாய்கையினாலே அடக்குவேன். இப்படிச் சகல லோகத்தார்களையும் நடுங்கப்பண்ணி வைக்கிறவன்; சாயா[2] தேவிக்கும் சூரிய பகவானுக்கும் பிறந்தவன். நான் சகல ஜெயமும் கொண்டவன்; அனேகம் கீர்த்தி உள்ளவன்; என்னை உத்தமர் ஆன பெரியோர்கள் மிகவும் கொண்டாடுவார்கள். ஆனபடியினாலே, உம்மை நள மகா ராஜா அண்டைக்கு அனுப்புகிற நிமித்தம் வந்தேன். சந்தோஷமாய்க் கேளும்; என்ன என்றால், நிடத தேசத்தை ஆளுகிற நள மகா ராஜா என்கிறவன் என் மனதை மெத்த நோகப்பண்ணினான். நான் கொள்ள இருந்த தமயந்தியை நமக்கேன் என்று சொல்லிச் சகல இராஜாக்களும் சும்மா இருக்க அந்த நளனுடைய ஆங்காரம் அந்தப் பெண்ணைக் கலியாணம் பண்ணிக் கொண்டு, பிள்ளைகளையும் பெற்றுச் சுகமாக இராச்சியம் ஆளுகிறான். நான் மன்மதனுடைய வலையிலே அகப்பட்டுக் கொண்டு விழிக்கிறேன்;

[2] Shadow. S. CHÂYÂ.

பார்த்திரா? சகல தேவர்களும் கோறி இருந்த பெண்ணைக் கொள்ள இவன் எம்மாத்திரம் மனுஷன்? அந்தத் தமயந்தி தேவர்களை எல்லாம் வேண்டாம் என்று சொல்லித் தன்னைக் கோறின நளனை மாலை இட்ட கெர்வத்தினாலே பிரகாசமாய் விளங்குகிறாள்; பிரஜைகளும் அவள் வாழ்வை மெய் என்று நம்பி இருக்கிறார்கள். அந்தப் பெண் நள மகா ராஜாவினுடைய தந்திரத்தில் மோசம் போய், கலியாணம் பண்ணிக் கொண்டு இருக்கிறாள், அல்லவா? ஓய் ராஜாவே! இப்படி எங்கே ஆகிலும் உண்டோ? நீர் தாம் சொல்லும். இந்தப் பெண் எப்போது எவ்வனம் ஆவாளோ, என்று காத்துக் கொண்டிருந்த என்னை மோசம் பண்ணினாள். இனி நான் மனம் பொறுக்க மாட்டேன், என்னை நீர் பொல்லாதவன் என்று சொன்னாலும் சொல்லுகிறீர். ஓய், ராஜரே! உம்முட முன்னே தானே என்னை நீர் மெச்சத் தக்கதாக நள மகா ராஜாவையும் தமயந்தியையும் எந்த விதத்திலே ஆகிலும் ஒருவர் போன வழி ஒருவருக்குத் தெரியாத படிக்கு ஓட்டி விடாமல் நான் விடுவேனோ? பெண்சாதியும் தானும் பிள்ளைகளும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு சந்தோஷமாக இருக்கப் போகிறார்களோ? ஏதோ பார்ப்போம்! இந்தக்ஷணமே நீர் நம்முட பேரிலே தயவு வைத்து, நள மகா ராஜா அண்டைக்குப் போய், அவனுடனே சூதாடும்; அப்போது நான் உம்முட பக்ஷமாய் இருக்கிறேன். பாச்சிகையைப் புரட்டி, உம்மைக் கெலிப்பிக்கிறேன். அவர் சம்பத்துகளை எல்லாம் பறித்து, உமக்கே கொடுப்பிக்கிறேன். நள மகா ராஜா தன் இராச்சியத்தை விட்டு, பெண்சாதியும் தானும் ஒரு ஓட்டைப் பானையைக் கையில் எடுத்துக் கொண்டு, சகல பாக்கியங்களையும் உம்மிடத்திலே விட்டுப் போகிறான். நீர் 'அவனுக்கு நான் பகுதி கட்டுகிறவன்; எப்படி அவனுடனே மரியாதை இல்லாமல் சூதாடுவேன்?' என்று

யோசனை செய்ய வேண்டாம்; என்னுடைய தந்திரத்தினாலே அவனை உமக்குச் சிநேகனாகப் பண்ணி வைக்கிறேன். ஓய், ராஜரே! என் வார்த்தையைத் தள்ளாதேயும், எழுந்திருந்து வாரும், சீக்கிரமாகப் போவோம், அவனுடைய இராச்சியத்தை அவசியம் வாங்கி, உமக்குத் தருகிறேன், ராஜ நீதி தப்பாமல் பரிபாலனம் பண்ணும்," என்று சொன்னவுடனே புஷ்கர ராஜாவும் சம்மதித்து, எழுந்திருந்து, சந்தோஷத்துடனே புறப்பட்டு, மந்திரிகளுடனே கூட நடந்து, நள மகா ராஜாவினுடைய மாவிந்தபுரப் பட்டணத்தைச் சேர்ந்து, அந்தப் பட்டணத்தினுடைய சிங்காரங்களைப் பார்த்துக் கொண்டு வந்து, கொலுவிலே இருக்கிற நள மகா ராஜாவைக் கண்டு, நமஸ்காரஞ் செய்து, அவனுடைய ஆதரணையினாலே உளுக்கார்ந்து கொண்டு, அப்போது அந்த நள மகா ராஜா இருக்கிற கொலு மண்டபச் சிங்காரமும் ஐம்பத்தாறு தேசத்து ராஜாக்கள் கைகட்டி நிற்கிற விதங்களும் தம்புரு ருத்திரவீணைகள் சுரமண்டல யாழ் இதுகள் முதலான வாத்தியங்கள் எல்லாம் முழங்க மத்தள தாளத்தொனிகளுடனே சங்கீதங்கள் பாட, பொற் பிரம்புக்காரர் பராபரி பண்ண, பாட்டுவான்கள் எதிர் நின்று கொண்டாட, நள மகா ராஜா தேவேந்திரனைப் போலே வீற்றிருக்கிறதையும் பார்த்து, புஷ்கர ராஜா பிர்மித்து எழுந்திருந்து, அவர் அண்டைக்குப் போய் நின்று சேவித்து, அநேக விதமாக வர்ணித்துக் கொண்டாடினான். அதற்கு நள மகா ராஜா சந்தோஷப் பட்டு, தன் அண்டையிலே நவரத்தின சிங்காதனம் போடுவித்து, அதன் பேரிலே புஷ்கர ராஜனை உட்காரச் சொல்லிச் செலவு கொடுத்தான்.—

### 18. §. THE TEMPTATION. THEY GAMBLE.

அப்படியே புஷ்கர ராஜா உட்கார்ந்து, "ஓய், நள மகா ராஜரே! உம்முடனே சற்று நேரம் சூது விநோதமாய் விளையாட

வேண்டும் என்று நினைத்து இவ்விடத்திற்கு வந்தேன், தயவு செய்து இந்த வரம் தரவேண்டும், இதற்கு ஒன்றுந் தேவரீர் யோசனை பண்ண வேண்டாம், பொழுது போக்கத் தக்கதாகச் சிறிது நேரம் விளையாடுவோம் வாரும்," என்று வேண்டிக் கொள்ளுகிற புஷ்கர ராஜாவைப் பார்த்து நள மகா ராஜா சொல்லுகிறான்:—

"ஓய், புஷ்கர ராஜரே! சூது ஆடுகிறது ராஜாக்களுக்கு அடுக்குமா? அது மெத்தப் பொல்லாது; பெரியோர்கள் சூது ஆடுகிறவர்களை மதிக்க மாட்டார்கள்; அநேகங் குரூரமான விசேஷங்கள் வரும்; திவேஷமும் உண்டாம்; அபகீர்த்திப் பட்டு மானங் கெட்டுப் போவார்கள்; அது வேண்டாம்," என்று நள மகா ராஜா சொல்ல, புஷ்கர ராஜா பின்னையும் இரட்டித்து; "ஐயா, தேவரீர் அப்படிச் சொல்ல வேண்டாம், அந்தச் சூதினுடைய மகிமை எல்லாருக்குந் தெரியாது, மகாத்துமாக்களுக்குத் தெரியும், அது எப்படி என்றால், சகல வித்தைகளையும் பிர்ம்மா உண்டாக்குகிற போது இந்தச் சூது வித்தையை உண்டாக்கி, க்ஷத்திரியாள் வசத்திலே ஒப்பித்து, இதைப் பரிபாலனம் பண்ணச் சொல்லி உத்தாரம் பண்ணினான். ஆனபடியினாலே, அந்தச் சூதினுடைய மர்மங்களை எல்லாம் அறிந்தால் நமக்குப் பிராண ரக்ஷையாக இருக்கும். அதனாலே இப்போது உம்மை அழைத்தேன். நீர் சிந்தனைப் படாமல் வாரும்" என்று புஷ்கர ராஜா விடாமல் அழைக்கிற போது நள மகா ராஜா சிரித்து, புத்தி மயங்கி, யோசனை பண்ணி, "ஓய், புஷ்கர ராஜாவே! சூதன் சூதனை மெச்சுவான், நான் அப்படிக் கொத்தவன் அல்ல, ஆனாலும் நீர் இது நிமித்தியம் இத்தனை தூரம் வந்தேன், என்று சொன்ன மட்டுக்கும் உம்முடைய மனதைச் சின்னப் படுத்தல் ஆகாது" என்று சொல்லிக் கொண்டிருக்கவே, சனீஸ்பரன் உசிப்பேற்றுகிற[1] படியினாலே நள மகா ராஜா சிங்காதனத்தை விட்டுத், திக்கென் றெழுந்திருந்து

[1] உசிப்பேற்று = stir up. (vulg.)

அங்கிருந்த ராஜாக்களுக் கெல்லாம் செலவு கொடுத்து, அவ ரவர்களை ஸ்தானங்களுக்கு அனுப்பித் தம்முடைய மந்திரி பிரதானிகள் மற்றும் உண்டான பேர்களையும் அங்கே நிறுத்தி வைத்து, 'புஷ்கர ராஜாவை வாரும்,' என்று அழைத்துக் கொண்டு, அந்தப்புரத்திற்குப் போய், அங்கே இருவரும் உளுக்கார்ந்து பல கையும் சாரையும் சொக்கட்டானும் அழைப்பித்துக் கொண்டு, பந்தையம் முன்னே கைக் கடையங்களை வைத்துச் சூதாடினார் கள். ஆடுகிற போது முதல் புஷ்கர ராஜா தோற்பாக ஆடின படியினாலே சனீஸ்பரன் கோபித்துக் கொண்டு, புஷ்கர ராஜா ஆடுகிற பாய்ச்சிகையிலே புகுந்து கெலிக்கப் பண்ணிக் கொண்டு வந்தான். புஷ்கர ராஜா கெலிக்கிற உபாயம் நளமகாராஜா வுக்குத் தெரியாமல் மயங்கித் தன்னுடைய அஸ்தகடகம் போயும் முத்துமாலை, பதக்கம், சரப்பளி, குண்டலம் முதலான ஆபரணங்களை எல்லாம் வைத்து ஆடித் தோற்றுத் தம்முடைய பொக்கிஷ பண்டாரம் எல்லாம் தோற்று, தம்முடைய இராச்சி யம் எல்லாம் தோற்று, மதி மயங்கி இருந்தான்.



**19.** § THE REMONSTRANCES OF THE PEOPLE. DAMAYANTI'S FEELINGS. THEY LEAVE THE CITY.

அவ்வேளையிலே அந்தச் செய்திகளைக் குடிகள் எல்லாருங் கேட்டு அலறிக் கொண்டு, விசாரங்களுடனே புறப்பட்டு வந்து, அந்தப்புரத்திலே இருக்கிற நளமகாராஜாவைக் கண்டு சாஷ்டாங்கமாகச் சேவித்துக் கை குவித்துச் சொல்லுகிறார்கள்:—

"ஓய், சுவாமி, இராஜேந்திரரே, கேளும்! தேவரீர் அவர்கள் தான தர்மங்களுடனேயும் துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபால னஞ் செய்து இந்த இராச்சியத்தை ஆண்டு கொண்டு வந்த படி யினாலே ஏதும் குறை இல்லாமல் நாங்களும் தாய் தகப்பன் கீழே பிள்ளைகள் வளர்ந்தாற் போலே சுகத்தை அடைந்திருந்

தோம். இப்போது நாங்கள் பண்ணின பாவமோ என்னமோ தெரியாது, தேவரீர் சூது விளையாடுகிறதைப் பார்த்தால் இராச்சியம் எல்லாம் தோற்றுத் தேசாந்தரம் போகிறவனைப் போலே காணுகிறது. உம்முடைய அண்டையிலே இருந்த கனமான வஸ்துக்களை எல்லாந் தோற்றீர். உம்முடைய மந்திரிகள் பிரதானிகள் முதலான பேர்களுக்கும் ஒரு யோசனையுந் தோன்றாமல் நீர் ஆடுகிற சூதைப் பார்த்து வெகு விசாரங்களுடனே உமக்கு ஒன்றுஞ் சொல்லாமல், 'இதற்கு இனி நாம் என்ன செய்யப் போகிறோம் என்று' அலைகிறார்கள். உம்முடைய குல குருவாகிய வசிஷ்ட மகா முனீஸ்பரரும் பிரிந்து போனார். ஆனபடியினாலே தேவரீர் சூதாடுகிறது பரிச்சேதம் ஆகாது, என்று சொல்லி மனுப் பண்ணிக் கொள்ள வந்தோம்; ராஜாக்களுக்குத் தம்முடைய மந்திரி பிரதானியர்கள் சொல்லைப் பார்க்கிலும் குடிகள் சொல்லுகிற வார்த்தை மிகவும் பிரியமாய் இருக்கும்; அதைக் காது கொண்டு கேட்பார்கள். ஆனபடியினாலே, எங்கள் பேரிலே தேவரீர் தயவு பண்ணி, இந்த மட்டில் இந்தச் சூதாட்டத்தை நிறுத்த வேணும்; ஓய், ராஜேந்திரரே! நீர் சூதாடுகிறது எங்களுக் கெல்லாம் இது அவகுணங்களாலே காண்பிக்கிறது; என்ன விபரீதம் நேரிடுமோ தெரியாது," என்று சொன்ன குடிகளை நள மகா ராஜா பார்த்துக் கோபித்துக் கொண்டு, தன் சேவகர்களை விட்டு அவர்களைத் துரத்தி, "அடியுங்கள்!" என்றும், "நீங்கள் ஏன் வந்தீர்கள்?" என்றும், "உங்களை எனக்குப் புத்தி சொல்லச் சொல்லி ஆர் சொன்னார்கள்? சொல்லுங்கள்" என்றும், சொல்லி, கலி ராஜா ஆன சனீஸ்பரன் மாய்கையினாலே நள மகா ராஜா அந்தக் குடிகளை எல்லாம் அதட்டித் துரத்தி விட்டான். அவர்கள் அதைக் கேட்டு வெகு விசாரங்களுடனே தெய்வத்தை நொந்து கொண்டு போனார்கள். அந்தச் சமயத்திலே நள மகா ராஜா தேவி ஆகிய தமயந்தி இந்த விருத்தாந்தங்கள்

எல்லாம் கேட்டு அதிக விசாரப் பட்டு, "இது ஆபத்துகளுக்கு மூலமாகக் காண்கிறது. தம்முடைய நிமித்தியம் லோகத்துச் சனங்கள் வந்து தாபந்திரியப் பட்டு, சூதாடுகிறதை விட்டு விடச் சொல்லி மனுவாய்க் கேட்டுக் கொண்டால் அவர்களை ஆதரியாமல் இப்படித் துரத்தி விடலாமோ? அந்தக் குடிகள் எப்படி மனது நொந்து கொண்டு போகிறார்களோ தெரியாது, நல்லவர்களுக்குப் பொல்லாத குணம் வந்தால் அதனாலே ஆபத்துகள் வரும். ஆனபடியினாலே காரியங்கள் நலமாய்க் காணவில்லை. இந்த நளமகாராஜருக்கு இப்படிக்கொத்த நினைவு பிறந்த மட்டுக்கும் ஏதோ விபரீதம் பிறக்கப் போகிறது; இதற்குச் சமுசயம் இல்லை" என்று யோசனை பண்ணி, ரதசாரதியை அழைத்துத் தன்னுடைய இரண்டு பிள்ளையும் ரதத்தின் பேரிலே ஏற்றித் தன் தாய் வீட்டுக்கு அனுப்பி வைத்தாள். பிறகு தமயந்தி விசாரத்தை விட்டு, தைரிய சாலியாய், "இனிமேல் என்ன ஆபத்து வந்தாலும் அனுபவிக்க வேணும்; நம்முட புருஷருடைய மனதின்படி ஆகட்டும்," என்று சொல்லி அந்தப்புரத்திலே இருந்தாள். இப்படி இருக்கிற போது நளமகாராஜா சமஸ்தமுந் தோற்று புஷ்கர ராஜாவுக்கு ஒப்பித்து விட்டு, விசேஷ வஸ்திரங்கள் தரியாமல் ஏக வஸ்திரத்துடனே தன் பெண்சாதி அண்டைக்கு வந்து, அவளை அழைப்பித்துக் கொண்டு, பட்டணத்துச் சனங்கள் எல்லாம் பிர்மித்தாற் போலே பார்த்து முகம் வாடி, சிந்தாக்கிராந்தர்களாய்த் துக்கப்பட்டு நிற்க, மந்திரி பிரதானியர்கள் முதலான பேர்கள் எல்லாரும் கண்ணீர்களுடனே விசாரப்பட, நளமகாராஜா ஒருவருடனேயும் பேசாமல், தன்னைத் தானே நிந்தித்துக் கொண்டு, தன்னுடைய பட்டணம் விட்டு, ஒன்றுந் தோற்றாமல் திகில் எடுத்துப் பட்டணத்திற்குப் புறத்திலே வந்து மூன்று நாள் இருந்தான்.

**20.** §. NALA AND DAMAYANTI WANDERING. THEIR CONVERSATION.

அப்படிச் சோகப் பட்டுக் கொண்டிருக்கிற புருஷனைப் பார்த்து புத்திசாலியாகிய தமயந்தி ஒரு வார்த்தை சொல்லுகிறாள்: "ஓய், பிராண நாயகரே! ஆகிற காரியம் ஆகாமல் போமோ? தாம் பண்ணின கருமத்தின் பலனைத் தாமே அநுபவிக்க வேணும் அல்லாமல் தள்ளுகிறத்துக்கு ஒருவராலேயும் ஆகாது. நீர் ஏதாகிலும் வேணும் என்று சூதாடப் போனீரா? எங்கே இருந்த புஷ்கர ராஜா எங்கே வந்தார்? சூது ஏன் ஆடினீர்? அது உம்மாலே வந்ததோ? தெய்வ சங்கற்பம் இப்படி இருந்தது. நீர் ஏன் திகில் பட்டு இருக்கிறீர்? பயப்பட வேண்டாம். தலை எழுத்தை எவர்கள் தப்பித்துக் கொண்டார்கள்? முன்னே பிர்ம்ம தேவர் சிரசு ஈஸ்பரருடைய கையினாலே கிள்ளப் பட்டுப் போக இல்லையா? மகா பலிச் சக்கிரவர்த்தி ஸ்ரீ மகா விஷ்ணுவினுடைய பாதத்தின் கீழ்ப் பட்டு, பூமியின் கீழே அடங்கிப் போக இல்லையா? சூரியர் சந்திரர்கள் நிமிஷ மாத்திரம் ஆகிலும் நிற்காமல் அலைய இல்லையா? தேவேந்திரர் துருவாசர் கையிலே என்ன பாடு பட்டார்? அப்படி இருக்கிற போது குறை மனுஷர்கள் எம்மாத்திரம்? சுகம் வந்த போது சந்தோஷப் படுவார்கள். துக்கம் வந்த போது விசாரப் படுவார்கள். இது நியாயம் அல்ல. சுக துக்கம் இரண்டும் சமமாக அநுபவிக்க வேணும், சகல பிராணிகளுக்கும் சுக துக்கங்கள் இரண்டுஞ் சரியாய்ப் பிர்ம்மா கற்பித்தார். நீர் சகல சாஸ்திர புராணங்களும் கேட்டிருக்க இல்லையா? இப்படித் தேவரீர் எந்நேரமுந் தலையை இறங்கிக் கொண்டு இருப்பானேன்? நீர் அறியாத நியாயங்களும் புத்தியும் நான் என்ன சொல்லப் போகிறேன்? ஓய், சுவாமி! நீர் கண்ணீர் சொரிகிறது நியாயம் அல்ல. இவ்விடத்திலே நாம் இரண்டு பேரும் ஒழிய பின்னை யார் இருக்கிறார்கள்? ஓய், ராஜரே! சின்ன மனிதனைப்போலே

விசாரப் படலாமா? விசாரத்தை விட்டு இனிமேல் நடக்க வேண்டிய யோசனையை எனக்குத் தெரியச் சொல்லும்," என்று அமுர்த பிந்துகள் சிந்தினாற் போல் சில வசனங்களைத் தமயந்தி சொன்ன உடனே நளமகாராஜாவுக்குத் தெளிவு பிறந்து, தன் பெண்சாதி முகத்தைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறான்:—

"ஓய், பெண்ணே! பாக்கியசாலி, நாம் ஊரை விட்டு இன்னம் மூன்று நாளாக இல்லை, இதிலே ஒரு மனிதராகிலும் நம்மண்டைக்கு வாராமல் போனார்கள். நீயும் மூன்று நாளாய் அன்னாகாரம் இல்லாமற் பட்டினியாய் இருக்கிறாயே! தாகத்திற்குத் தண்ணீர் முதலாகக் கிடையாமற் போச்சுது. பார்த்தாயா? ஓ, நாயகி! உன் தகப்பனார் உன்னை என்னைப் போலொத்த பாவிக்கு ஏன் கட்டி வைத்தார்? அடி, பெண்ணே! பூர்வ ஜன்மத்திலே நாம் ஆரை அன்னாகாரம் இல்லாமற் பட்டினி போட்டு அலையப் பண்ணினோமோ, தெரியாது; அந்த அனுபோகம் இப்போது அனுபவிக்க வந்தது; இல்லா விட்டால், இத்தனை பெரிய பட்டணத்திலே ஒரு பெண்சாதிக்கு அன்னங் கிடையாமற் போமா? நாம் நமக்குப் பிரியமான வீட்டுக்குப் போனாலும் சாப்பாடு போடுவார்களா? கெட்டுப் போனவர்களை ஒருவரும் கிட்டச் சேரார்கள். அல்ல என்று பலவந்தமாய் ஒரு வீட்டுக்குப் போனாலும் பிறகே நிந்தித்துக் கொள்ளுவார்கள்; ஆனபடியினாலே, ஓ, பெண்ணே! லட்சுமி கடாக்ஷமே பெறவேண்டும், குலமும் குணமும் யார் பார்த்து மதிக்கப் போகிறார்கள்? முன்னே என் வாழ்வைப் பார்த்து என் மந்திரி பிரதானியர்கள், பந்து சனங்கள் எல்லாரும் தொடர்ந்து வந்து சூதாட வேண்டாம் என்று வேண்டிக் கொண்டார்கள். நான் கேளாமற் சூதாடினேன். இத்தனை காலமாய் அவர்களை ரக்ஷித்தேன். அப்படிப் பட்ட நான் அவர்களைக் கோபித்துக் கொண்டு துர்ப்பாஷை

களைப் பேசித் தூரத்தினேன். எல்லாரும் நல்லவன் என்ன இராச்சியத்தைப் பரிபாலித்தேன். இப்போது அவர்கள் வாயினாலே பொல்லாதவன் என்று சொல்ல உடம்படுத்தேன். பூ விற்ற கடையிலே புல்லு விற்கவும், புலி இருந்த கானகத்திலே பூனை இருக்கவும், சிங்கம் இருந்த குகையிலே நரி இருக்கவும், ஆனை ஏறினவன் ஆடு மேய்க்கவும் ஆச்சுதே; ஆனால், இனி என்ன செய்யலாம்? ஈஸ்பர சங்கற்பத்தினாலே வந்த தெல்லாம் அனுபவிக்க வேண்டும். நாம் செய்த பாவ புண்ணியம் நம்மைச் சேருமே அல்லாமல் மற்றொருவனைச் சேருமோ? ஆகையினாலே, நாம் காட்டுக்குப் போய் அங்கே பன்ன சாலைகளைக்[1] கட்டிக் கொண்டு தபசிகளாய் அங்கே கந்த மூல பலங்களையாகிலும் போசித்து, அவ்விடத்திலே தானே வாசம் பண்ணுவோம். பிறவிச் செல்வமாய் இருந்த நீ இந்த அகோரங்கள் எல்லாம் எப்படிப் பொறுக்கப் போகிறாய்? பொன்னுப்பரிகையின் பேரிலே இருந்த நீ காட்டிலே பன்னக சாலையிலே எப்படி இருக்கப்போகிறாய்? இஷ்டமான பதார்த்தங்களைச் சாப்பிட்ட உனக்குக் கந்த மூல பழங்களைச் சாப்பிடலாச்சுதே. அமிச[2] தூளிகா[3] மஞ்சத்தின் பேரிலே படுக்கிற உனக்குப் பயங்கரமான காட்டிலே புழுதியிலே படுக்கல் ஆச்சுதே; நல்ல ரூபரேகலாவண்ணியமான[4] ஸ்திரீ சனங்களுடனே கூடி இருக்கிற உனக்கு மிருக ஜாதிகளுடனே கூடி இருக்கல் ஆச்சுதே. ஓ! ஓ! தெய்வமே! எங்களுக்கு இத்தனை ஆபத்துகள் கொண்டு வந்து விட்டாயோ? நாங்கள் இனி எங்கே ஒளித்துக் கொண்டு இதைத் தப்பித்துக் கொள்ளப் போகிறோம்," என்று தெய்வத்தை நொந்து கொண்டு திரும்பவும் தமயந்தியைப் பார்த்து, "ஓ! பிராண நாயகி! நீ இங்கே காடுகளிலே வாசம் பண்ணுவையா? கந்த மூலங்களைச் சாப்பிடுவா

[1] Booths of leaves and branches.

[2] S. அன்னம்.

[3] Made up of தூளி = *down*.

[4] S. comp. *The beauty of forms and lines.*

யா? மிருக சாதிகளைக் கண்டு பயப்படாமல் இருப்பாயா? ஏது? இருக்கமாட்டாய். ஆனபடியினாலே, நான் சொல்லுகிற வார்த்தையைக் கேட்டு, நீ உன் தாய் வீட்டுக்குப் போய், எனக்கு நன்மையை எப்போதுங் கோறிக் கொண்டு சுகமாய் இரு, உன் தாய் தந்தைமாருடனே எனக்கு வந்த ஆபத்துகளை எல்லாஞ் சொல்லிப் பிள்ளைகளை மாத்திரம் பத்திரமாய் விசாரித்துக் கொள், நான் காடுகளிலேயும் கிராமங்களிலேயும் திரிந்து காலத்தைக் கழிக்கிறேன், நீ போய் வா, பெண்ணே!" என்று சொல்லி, நளமகாராஜா புறப்பட்ட உடனே தமயந்தியும் புருஷனைப் பிரியமாட்டாமல் கூடவே தொடர்ந்து போனாள். அது எப்படி இருந்தது என்றால், தயவும் தாக்ஷணியமும் இல்லாத புஷ்கர ராஜா பண்ணின அநியாயத்தினாலே அந்த ராஜாவைக் கசந்து கொண்டு லட்சுமி அவன் அண்டையிலே இருக்க மாட்டாமல் நளமகாராஜாவின் பின்னே போகிறது போலே இருந்தது. இப்படிப் புருஷனும் பெண்சாதியும் அதிக பயங்கரமான காட்டுக்குள்ளே பிரவேசித்தார்கள்.



**21.** §. THE GOD OF MISFORTUNE SENDS HIS MESSENGERS TO ROB NALA OF HIS GARMENT.

இப்பால் சனீஸ்பரன் ஏவலினாலே மகா அலங்காரமாக விநோத நிறங்கள் உள்ள இரண்டு அன்னப் பக்ஷிகள் அவர்கள் முன்னே வரக் கண்டு, அவைகளின் அழகைப் பார்த்துப் பிரமித்தாற் போலே பார்க்கவே, அந்தப் பக்ஷிகள் நளமகாராஜாவுக்குச் சமீபத்திலே வந்து இறங்கி, முன்னே பழகின பக்ஷிகளைப் போலே ராஜா அண்டையிலே சேரப் போகிறதும் ஓடிப் போகிறதும் நிற்கிறதுமாய் விநோதங்களைக் காட்டிக் கொண்டிருக்கிற பக்ஷிகளை ராஜா பார்த்துத் தன் பெண்சாதிக்குக் காண்பித்து அவளுடனே ஒரு வசனஞ் சொல்லுகிறான்:

"ஓ, பிராண நாயகி! இதோ இருக்கிற பக்ஷிகளின் ரூபங்களைப் பார்த்தாயா? கண்களுக்கு வேடிக்கையாக இருக்கின்றன. எவர்களோ வளர்த்த பக்ஷிகளைப் போலேயும் காணுகின்றன. இல்லாவிட்டால், இவைகள் இப்படி வரக் காரணம் என்ன? நாம் பசித்திருக்கிறதைப் பார்த்து ஈஸ்பரன் தயவு பண்ணி அனுப்பினாற் போலே இருக்கின்றன. ஆனபடியினாலே, நாம் இவைகளைப் பிடித்து நெருப்பிலே போட்டுச் சற்றாகிலும் தின்று பசி ஆறுவோம்" என்று சொல்லி, அந்த நளமகாராஜா அந்தப் பக்ஷிகள் அண்டைக்குப் போன உடனே அந்தப் பக்ஷிகள் மெள்ள மெள்ளச் சேர வருகிறதும் அகப் படுகிறாப் போலே நழுவிப் போகிறதுமாய்ச் செடிகளிலேயும் கல்லுகளிலேயும் முள்ளுகளிலேயும் திருப்பி வேசாறப் பண்ணி வைத்து, பின்னையும் சேர வந்த பக்ஷிகள் பேரிலே நளமகாராஜா கோபித்துக் கொண்டு இவைகளை இனி ஓடிப் போகாமற் பிடிக்க வேணும் என்று சொல்லித் தன் பேரில் இருக்கிற வஸ்திரத்தைப் பக்ஷிகள் பேரிலே நிதானித்துப் போட்டான். அந்த வஸ்திரத்தைப் பக்ஷிகள் சிவுக்கென்று எடுத்துக் கொண்டு ஆகாசமே பறந்து போயின. அந்த ஆச்சரியத்தை ராஜா பார்த்துக் கொண்டிருக்கவே பக்ஷிகள் போய் ஆகாசத்திலே நின்று மேகம் கெர்ச்சித்தாற் போலே சில வார்த்தைகள் சொல்லுகின்றன: "ஓகோ, ராஜரே! கேளும், நீர் சூதாடுகிற போது புஷ்கர ராஜாவினுடைய பாய்ச்சிகையிலே இருந்து உம்முடைய சம்பத்துகளை எல்லாம் வாங்கிப் புஷ்கர ராஜாவுக்குக் கொடுப்பித்தவர்கள் நாங்கள். எங்களைப் பிடிக்க நீர் எண்ணவேண்டாம். நீர் சகல சாம்பிராச்சியங்களையும் தோற்றுத் தபசியாய்க் காட்டிலே வாசம் பண்ணப் போகிறீரே. அப்படித் தபசியாய்ப் போகிற உமக்கு வஸ்திரம் என்னத்துக்கு? இனிமேல் உம்முடைய சரீரத்தைக் கைகளால் மூடிக் கொண்டு போம். ஓய்,

ராஜரே! நீர் வித்துவாமிசருக்கு எல்லாம் வஸ்திரம் கொடுத்து, கீர்த்தி பெறுகிறீர் என்று கேட்டு வந்த எங்களுக்கும் நீர் கட்டி இருந்த வஸ்திரத்தைக் கொடுத்தீரே, இந்தச் சுகுர்தத்தினாலே நீர் சுகமாக வாழக் கடவீர்! உம்மைப் போலே இப்படி யாசகருக்குக் கொடுக்கிற பெயர் இல்லை, உம்மையே மெச்ச வேண்டும். நீர் மஹா தானவினோதர், நல்லது நாங்கள் போய் வருகிறோம், நீர் சுகமே இரும்," என்று சொல்லி எச்சரித்துப் போட்டு, அப்பக்ஷி ரூபிகள் "நாங்கள் சனீஸ்பரனுடைய தூதர்கள்," என்று சொல்லிப் புறப்பட்டு, சனீஸ்பரர் அண்டைக்குப் போய், தெண்டன் இட்டு, சந்தோஷத்துடனே சொல்லுகிறார்கள்:—

S. Good heartedness.

"ஓய், கலி ராஜரே, நாங்கள் நள மகா ராஜாவினுடைய வஸ்திரத்தையும் வாங்கிக் கொண்டு, அவனைக் கோமணாண்டி ஆக்கி, காட்டிலே துரத்தி விட்டு வந்தோம்," என்று சொன்ன உடனே சனீஸ்பரன் மிகவும் சந்தோஷப் பட்டு, "மெத்த நல்ல காரியம் செய்தீர்கள்" என்று சொல்லி, அவர்களை மெச்சி, ராஜாவினுடைய வஸ்திரத்தை அவர்களுக்கே கொடுத்து, அனுப்பி விட்டான்.

A beggar with only a கோமணம்.



### 22. §. HIS GRIEF. HER CONSOLING WORDS. SHE SHARES HER GARMENT WITH HIM.

பிறகு நள மகா ராஜா மிகவும் ஆச்சரியத்துடனே விசாரப் படுகிற போது பெண்சாதி ஆகிய தமயந்தி வந்து, தன் முன்றானையிலே கண்ணீரைத் துடைத்து, "விசாரப் படவேண்டாம்," என்று சொல்லப் பெண்சாதியைப் பார்த்து ராஜா சோகத்துடனே சொல்லுகிறான்:—

"ஓ, பெண்ணே! அந்தப் பக்ஷிகள் சொல்லிப் போன வார்த்தைகளைக் கேட்டாயே, எல்லாம் சனி பகவான் செய்வித்த

வஞ்சனைகள் என்று தெரியல் ஆயிற்று. இன்னம் சுவாமியாருடைய கிருபை என்னமாய் இருக்குமோ, தெரியாது. உனக்கும் எனக்கும் கலியாணம் ஆனதும் சந்தானம் உண்டானதும் சனீஸ்பரர் பார்த்து மனம் பொறுமல் இப்போது இந்த ஆபத்துகள் எல்லாம் வரப் பண்ணி, நாம் தப்பித்துக் கொண்டு சும்மா போவோம் என்றாலும் போக ஒட்டாமல், சனீஸ்பரன் பக்ஷிகளை ஏவி, உபசாரமாய் என் வஸ்திரத்தையும் பறித்துக் கொண்டு சும்மா போகச் செய்தான். நம்மைச் சனீஸ்பரன் செய்த சதிகளை அவனாலே ஏவப் பட்ட அந்த அன்னப் பக்ஷிகளே சொல்லிப் போயின. இனி சந்தேகம் இல்லை. பெண்ணே! இன்னம் என்னென்ன ஆபத்துகள் பட வேண்டி இருக்கின்றனவோ தெரியாது. எனக்கு ஆனால் பேசக் கூடச் சக்தி இல்லை. ஓ, பெண்ணே! நம்முடைய பிள்ளைகள் என்ன பாடு படுகிறதோ? நம்முடைய தூதனும் வந்து, பிள்ளைகள் உங்கள் தாய் வீடு சேர்ந்த செய்திகள் சொல்லாமலும் போனான். நாம் ஒரு காரியத்தை நினைத்தால் அபஜெயமே வருகிறது. உன்னுடைய முகமும் சரீரமும் எல்லாம் பசி தாகத்தினாலே வதங்கிக் கரிகறுத்து இருள் அடைந்து காண்கிறது. வெய்யில் உன்னைத் தகித்துப் போடுகிறது. நீ நிற்க நிழலும் இல்லாமற் போயிற்று. குளங்களிலே குடிக்கத் தண்ணீரும் கிடைக்க இல்லை. ஒரு இடத்தே போவோம் என்றால் வழி தெரிய இல்லை. கட்டின வஸ்திரமும் போயிற்று. அனாதர்களைப் போலே ஆனோம், பார்த்தாயா?" என்று கிலேசப் படுகிற தன் புருஷனைப் பார்த்துத் தமயந்தி சொல்லுகிறாள்:

"ஓய், பிராண நாயகரே! இனி துக்கத்தை விட்டுவிடும். இடி வந்து மேல் விழுந்தாலும் தாங்குகிறோம் என்கிற தைரியமும், என்ன காரியம் வந்தாலும் எனக்கில்லை என்கிற தைரியமும், ராஜாக்களுக்கு இருக்க வேணும். தைரியமே தெய்வம்!

தைரியமே ஜெயம்! அந்தத் தைரியத்தை விட்டால் தேவர்கள் நகைப்பார்கள். எப்படிப் பட்ட பேருக்கும் தைரியமே தெய்வம். ஆனபடியினாலே தைரியத்தைக் கெட்டியாய் நிறுத்தும். இராச்சியத்தையும் பிள்ளைகளையும் வாழ்வையும் நிலையாக நினைத்தால் தைரியம் போய் விடும். ஆகையினாலே அவைகளை நினைக்க வேண்டாம். இன்னம் என்னென்ன ஆபத்துகள் வந்தாலும் வரட்டும். சந்தோஷமாய் அனுபவிப்போம். நாம் செய்த பூர்வ கருமங்கள் வந்தால் நாம் தைரியம் விட்டால் அவைகள் போய் விடுமோ? முன் ஜன்மத்திலே நாம் சம்பாதித்தவைகள் இப்பவும் நாம் அல்லவோ அனுபவிக்க வேணும். பூர்வ வினைப்பயன் மகா யோகீஸ்வரரையும் விட்டதா? நம்மை விட புஷ்கர ராஜன் பேரிலேயும் சனீஸ்பரன் பேரிலேயும் நிந்தைகள் ஏன் சொல்ல வேணும்? நமக்குப் புண்ணிய பலன் உண்டான போது நாம் அவராலே நிந்திக்கப் பட்டோம். ஆகையால் இனி துக்கம் என்கிற அக்கினியைச் சாந்தம் என்கிற தண்ணீரை வார்த்து, அணைத்துப் போடும். ஸ்ரீமன் நாராயணரைத் தியானம் பண்ணும். அவர் நம்முடைய கஷ்டத்தை நிவர்த்தி பண்ணுவார். நமக்குச் சகல ஜெயமும் உண்டாம். அவருடைய அனுக்கிரகத்தினாலே புஷ்கர ராஜாவையும் கெலித்து, சகல சாம்பிராச்சியங்களையும் நாமே கைக் கொள்ளப் போகிறோம். தேவர்களுக்கும் ஆபத்துகள் வர இல்லையா? தேவேந்திரரைப் போலொத்தவர் நிஷத கிரியிலேயும் தாமரைத் தண்டிலேயும் அநேகம் காலம் கஷ்டப் பட்டு, விஷ்ணு தேவர் கிருபையினாலே எப்போதும் போலே இராக்ஷதர்களைக் கெலித்து, பிற்பாடு தம்முடைய இராச்சிய பரிபாலனம் பண்ணவில்லையா? அப்படிப்போல் சுவாமியார் திரும்ப இராச்சியம் தயவு பண்ணி நீர் பரிபாலிக்கப் போகிறீர். சகல சாம்பிராச்சியங்களையும் விட்டு, ஒரு வஸ்திர நிமித்தியம் கிலேசப் படுகிறீர். நீர் எப்போ

S. Srimad = most fortunate.

தும் போலே சகல ராஜாக்களும் கை கட்டி நிற்க நீர் இராச்சியம் ஆளச்சே நானே பார்க்கப் போகிறேன். பயப் படவேண்டாம்! தைரியத்தைக் கெட்டியாய் நிறுத்தும்! ஸ்ரீமன் நாராயணர் தயவு பண்ணுவார். சகலமும் அநுகூலமும் ஆம்," என்று சொல்லி, தமயந்தி தான் கட்டி இருக்கிற புடவையை ஒரு புறம் மேலே போர்த்தாள்.



**23.** §. HE WISHES HER TO RETURN HOME. SHE REFUSES.

இப்படிப் புருஷனும் பெண்சாதியும் அலைந்து கொண்டு, இரண்டு பேரும் ஒரு புடவையைக் கட்டிக் கொண்டு, காட்டிலே வெகு தூரம் நடந்து போகவே அவ்விடத்திலே நாலு வழிகள் பிரிந்து போகிறதை ராஜா கண்டு, தன் பெண்சாதியுடனே ஒரு வார்த்தை சொல்லுகிறான்:

"ஓய், பெண்ணே! இதோ போகிற வழி தெற்குச் சமுத்திர மட்டுக்கும் போகலாம். அந்த வழி விதர்ப்ப புரத்துக்குப் போகிற வழி. இந்த வழி அயோத்தி பட்டணத்திற்குப் போகிற வழி. இதிலே எந்த வழி நடப்போம்? சொல்லு," என்று கேட்டதற்குப் புருஷனைப் பார்த்துத் தமயந்தி சொல்லுகிறாள்: "கேளும், ராஜசேகரரே! மிருகங்கள் சஞ்சரிக்கிற காடுகளிலே நாம் ஏன் விருதாவாய் அனாதர்களைப் போலவும் அந்த மிருக சாதிகளைப் போலேயும் திரிய வேணும்? அப்படித் திரியாமல் நாம் இரண்டு பேர்களும் உங்கள் மாமியார் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்து சுகமாய் இருப்போம் வாரும்," என்று சொல்லிச் சாஷ்டாங்கமாகத் தெண்டன் இட்டுக் கைகளைக் கட்டிக்கொண்டு வேண்டிக் கொள்ளுகிற பெண்சாதியைப் பார்த்து, நள மகா ராஜா வெட்கத்துடனே தலையை இறக்கிக் கொண்டு சொல்லுகிறான்:—

"ஓய், பெண்ணே! முன்னே எப்போதும் நான் மாமியார் வீட்டுக்குப் போனால் பல்லக்கில் ஏறிக் கொண்டு, ரத கெஜ துரக

பதாதிகளுடனேயும் பேரிகை முழங்க அனேகம் வேடிக்கைகளுடனேயும் போகிறதாச்சுதே. இப்போது பாதசாரியாக எப்படி வருவேன்? அந்த மாமனை நான் எப்படிக் காண்பேன்? அவர் சகல ராஜாக்களுடனேயும் கொலு தீர்ந்து இருக்கிற சபையிலே நான் ஒண்டியாய்ப் போக எனக்கு இந்த ஆபத்துகள் வந்தன என்று எப்படிச் சொல்லுவேன்? இது அல்லாமலும், ஓய், பெண்ணே! கெட்டவர்கள் தங்கள் இனத்திலே போய்ச் சேரப் போகாது, என்று சாஸ்திரங்களிலே சொல்லி இருக்கிற படியினாலே நான் வரக் கூடாது. நீ மாத்திரம் உன் தாயார் வீட்டுக்குப் போய், உன் பிள்ளைகள் என்னமாய் இருக்கிறார்களோ தெரியாது, அவர்களையும் விசாரித்துக் கொண்டு, சுகமாய் இரு. நானும் சிறிது நாளையிலே வந்து சேருகிறேன். இதுவும் அல்லாமல் நீ வனத்திலே என்னுடனே மெத்த கஷ்டப்படுகிறது எனக்கு வெகு துக்கமாய் இருக்கிறது. நீயும் நிர்வாகம் பண்ண மாட்டாய். என் பிறகே நடக்கவும் மாட்டாய். ஸ்திரீ ஜாதிகள் காட்டிலே சஞ்சரிக்கக் கூடாது, நீ வீணாகப் பூமியிலே விழுந்து கிடந்து, வெகு தாபந்திரியப் படுவானேன்? என் பேச்சைத் தள்ளாமல் நடக்கிற நீ ஆனால் உன் தாய் வீட்டுக்குப் போய் இரு. நான் உன் மனது சோதிக்கிறேன் என்று நினைக்காதே! நீ இப்போது தானே போ, இதுவே உன் தாய் வீட்டுக்குப் போகிற வழி," என்று சொன்ன உடனே தமயந்தி பிரிந்து போக மாட்டாமல், துக்கப் பட்டுக் கொண்டு ராஜாவுடனே சொல்லுகிறாள்:—

On foot.

"ஓய், சுவாமி! பிராண நேசரே! நீர் இந்தப் பயங்கரமான காட்டிலே அலையச்சே நான் பட்டணத்திலே போய் எப்படி மனம் பொறுத்துக் கொண்டிருப்பேன்? நீர் ஒண்டியாய்க் காட்டிலே கந்த மூல பழங்களைச் சாப்பிட்டுக் கொண்டு புழுதியிலே புரண்டு கொண்டிருக்க எனக்குத் திவ்விய அன்னத்தைச் சாப்

பிட்டுக் கட்டில் மெத்தையின் பேரிலே படுத்திருக்க மனம் வருமோ? தண்ணீரிலே இருக்கிற மீன் குஞ்சைக் கரையிலே போட்டால் போலே உம்மை விட்டுப் பிரிந்து நிமிஷ நேரம் ஆகிலும் நான் சகிக்க மாட்டேன். என்னைப் பிரிந்து போகச் சொல்லுகிறது உமக்கு நியாயமா?" என்று புலம்புகிற பெண்சாதியை ராஜா கட்டிக் கொண்டு, கண்ணீரைத் துடைத்து, நல்ல வசனத்தினாலே தேற்றி, "ஓய், பெண்ணே! உன்னை விட்டு நான் போவேனா? அப்படிப் போனால் என் சரீரத்திலே பிராணன் இருக்குமா? நீ என் பிறகே வந்தபடியினாலே எனக்கு எப்போதும் போலே பட்டணத்திலே சுகமாக இருக்கிறாப் போலே இருக்கிறது. ஆயிரம் பேச்சுகள் என்னத்திற்கு. உன் முகத்தைப் பார்த்தால் இராச்சியம், பந்து சனங்கள், சிநேகிதர்கள் இவர்களைப் பிரிந்து, காட்டிலே கிலேசப் படுகிறது எனக்குத் தெரிய இல்லை," என்று இப்படிப் பெண்சாதிக்கு நள மகா ராஜா உபசாரமான வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டு அப்புறம் நடக்கிற போது இவைகளை எல்லாம் சூக்ஷுமரூபமாகக் கூட வந்து கொண்டிருக்கிற சனீஸ்பரன் பார்த்து, தன் மனதிலே இருக்கிற மர்மம் விடாமல், அவர்களை மேடுகளிலேயும் பள்ளங்களிலேயும் முள்ளுகளிலேயும் செடிகளிலேயும் புதறுகளிலேயும் இழுத்து, பயத்தை உண்டாக்கி, வழிதெரியாமற் பண்ணி வைத்தான். ராஜாவும் தைரியம் விடாமல், பொறுமையுடனே காடுகளிலே சஞ்சரிக்கவே அந்தகாரமாக இருட்டிக் கொண்டிருக்கிற அந்தக் காட்டிலே நள மகா ராஜாவும் தமயந்தியும் ஏகாந்தமாய்ப் போகிற போது, அங்கங்கே குளங்களிலே தண்ணீர் குடித்துத் தாகத்தைத் தீர்த்துக் கொண்டு, திக்குகள் தெரியாமல் பிரமித்துப் பார்த்துக் கொண்டிருக்கவே தமயந்திக்கு நித்திரை வந்து தரையிலே படுத்துக் கொண்டு நித்திரை போனாள்.

**24.** §. NALA LEAVES HER THAT SHE MAY GO TO HER PARENTS' HOUSE.

அப்போது ராஜாவுக்கு நித்திரை பிடியாத படியினுலே யும், ஆரும் இல்லாத படியினுலேயும், தைரியம் விடாமல் நள மகா ராஜா சகல துக்கத்தையும் தன் மனதிலே அடக்கிக் கொண்டு கனைத்து, பூமியின் மேலே சாய்ந்து, தனக்கு வந்த ஆபத்துகளையும் புஷ்கர ராஜா பண்ணின கபடத்தையும் எண்ணிக் கொண்டு, தன் பெண்சாதி பூமியின் பேரிலே படுத்துக்கொண்டிருக்கிறதையும் பார்த்து, நள மகா ராஜா தனக்குள்ளே தானே விசாரப் படுகிறுன்: "ஐயையோ! பார்த்தையா! சூரிய கிரணத்தினுலே வதங்கின தாமரைக் கொடியைப் போலே துவண்டு, களை கூர்ந்து, இவள் நித்திரை போகிறுள். சகல ராஜாக்களினுடைய பெண்களும் இவளுடைய கண் சைகையினுலே ஊழியம் பண்ண இவள் புஷ்ப மெத்தையின் பேரிலே படுத்துக் கொண்டு சுகமாக இருந்தாளே. அப்படிக் கொத்தவளுக்கு இப்போது பூமியே மெத்தை ஆச்சுது. மிருக சாதிகளே ஏவல் தொழில் செய்கிறவர்களைப் போலே சூழ்ந்திருக்கின்றன. ஆகையினுலே என் நிமித்தியம் படுகிற கிலேசத்தைச் சொல்ல மாட்டாமல் இருக்கிற பெண்சாதியுடைய அகோரத்தை என் கண்களாலே நான் பார்க்க மாட்டேன். சுவாமி! இவளை இங்கே காணுமல் உபாயமாய் விட்டு விட்டு, நான் ஒண்டியாய்ப் போய் விட்டாலும் இவளுக்கு நான் முன்னே விதர்ப்ப புரிக்குப் போகிற வழி காண்பித்தேனே, அதை அறிந்து போக மாட்டுவாளோ, என்னமோ, தெரியாதே. "நல்லது சமாதானம் பண்ணி ஆவது போகச் சொல்லுவோம் என்றுல், அப்படியும் போகிறவள் அல்லவே," என்று இப்படிப் பலவிதமாகச் சொல்லிக் கொண்டு, சனீஸ்பரனுடைய மாய்கையினுலே மனந் துணிந்து, "ஒண்டியாகவே போய் விடுவோம்," என்று மெள்ள எழுந்திருந்து, அவள் கட்டி இருக்கிற சேலையிலே நாலு முழந்

கிழித்துக் கொண்டு, மனதிலே மிகுதியான துக்கத்தைப் பொருந்தி, எப்படி இவளை விட்டுப் போவேன்? தெய்வமே!" என்று சிறிதுதூரம் நடந்து போய், அப்புறம் போகக் கால் எழாமல் திரும்பி, பெண்சாதி அண்டையிலே வந்து, நின்று, ஒரு வார்த்தை சொல்லுகிறான்:—

"ஐயையோ! கோமள தேகத்தை உடைய பெண்ணே! தேவேந்திரன் முதலான தேவர்களை எல்லாம் வேண்டாம் என்று சொல்லி மகா பாவியான என்னை ஏன் கோறினாய்? உன்னைக் கூட்டிக் கொண்டு காடுகளிலே சஞ்சரிக்க வேண்டும் என்று நான் நோன்பு நோற்றேனோ? பிர்ம்மாவினுடைய ஆக்கினையைத் தள்ள ஆருக்குங் கூடாதே! அதை நான் தள்ள மாட்டுவேனோ? தெய்வமே! இந்தப் பெண் என் நிமித்தியம் இந்தக் காடுகளிலே சஞ்சரிக்கல் ஆயிற்றே. பிரியமான பிள்ளைகளை விட்டுப் பயங்கரமான காடுகளிலே அலையல் ஆயிற்றே. கடினமான பசியினாலே களைத்து நித்திரை தெரியாமற் போயிற்றே. இவளுக்குத் தீராத சோகாக்கினியிலே முழுகல் ஆயிற்றே. என்ன செய்வேன்? நான் எங்கே போவேன்," என்று வெகு துயரப்பட்டுக் கொண்டு, அவளுடைய முன்றானையை எடுத்து, அவள் சரீரம் எல்லாம் மூடி, அவளைப் பிரிந்து, நாலடி தூரம் அப்புறம் போய், மனசு பொருந்தாமல் திரும்பிப் பார்த்து, பெண்ணாசை என்கிற பாசக் கயிற்றினாலே கட்டுப் பட்டு, திரும்பவும் தன் பெண்சாதி அண்டையில் வந்து நின்று, மெத்தவும் சோகித்து விழுந்து, களை தெளிந்து, பெண் சாதி குணங்களை வர்ணித்து, அவள் முகத்தைச் சற்று நேரம் விடாமல் உற்றுப் பார்த்து, முகக் காந்தியையும் கண்களின் அழகையும் சரீர காந்தியையும் அவயவங்களின் அழகையும் வர்ணித்து வர்ணித்து, பின்னையும் தான் முன்னே அவளுக்கு நடப்பித்த செல்வத்தையும் அவள் தன்னைப் பிரியாமல் தன் தாய்

S. Softness.

தகப்பனையும் மறந்து, தன்னையே திக்கென்று நம்பி, தன் அருகே இருந்ததையும் முன்னே தானும் அவளும் கூடி அனுபவித்த சுகங்களையும் நினைத்துப் பார்த்து, அதிக விசாரப் பட்டு, திரும்பவும் தைரியத்தினாலே, "இவைகள் எல்லாம் அற்ப சுகங்கள் அல்லவோ? இப்படி காம மயங்கல் ஆகாது," என்று மனந் தெளிவு கொண்டு அவளை விட்டு, அப்புறம் புறப்பட்டுப் போய், திரும்பவும் பெண்சாதி அண்டையிலே வந்து நின்று நள மகா ராஜா சொல்லுகிறான்:

"இந்தக் காடுகளிலே இருக்கிற சிங்கங்கள், புலிகள், கரடிகள், யானைகள், செந்நாய்கள், பூதங்கள், பசாசுகள், வேதாளங்கள், இப்படிப் பட்டவைகள் கையிலே அகப்படாமல் சுகமாகப் போய், தாய் வீடு சேரக் கடவது" என்று ஆசீர்வாதம் பண்ணி, புறப் பட்டுப் போய், அங்கே நெடுங் குரல் இட்டு, சற்றே பெண்சா தியை நினைத்து அழுது, திரும்பவும் நித்திரை போகிற பெண் சாதி அண்டையிலே வருவான்; பின்னும் போவான்; இப் படி ஒரு சாம பரியந்தம் நள மகா ராஜா ஊஞ்சல் ஆடுகிறாப் போலே அங்கும் இங்கும் அலைந்து கடைசியிலே அவள் பாசத் தை விட்டு, அந்த நள மகா ராஜா காட்டுக் குள்ளே நடந்து, வெகு தூரம் திரும்பிப் பாராமல் போனான்.



25. §. NALA IN THE FIRE; BITTEN BY THE DRAGON.

அதைச் சனீஸ்பரன் பார்த்து, நள மகா ராஜன் சம்பத்தெல் லாம் பறித்து, அவன் கட்டி இருந்த வஸ்திரத்தையும் பறிப்பித்து, பெண்சாதியை விட்டு ஒண்டியாய்ப் போகிற ராஜாவின் பேரிலே பின்னும் அக்கினி தேவனை அழைத்து துன்பப் படுத் தச் சொல்ல, அந்த க்ஷணமே அவன் தன் சரீரத்தைப் பிர்ம் மாண்டமாக வளர்த்தி, அந்தக் காட்டுக்குள்ளே நுழைந்து, மூங்கிற் புதர்களின் கீழே உலர்ந்து கிடக்கிற சருகுகளிலே

பற்றிச் செடிகளைச் சேர்ந்து, விருக்ஷங்களை அண்டி, புகைகள் கப்பி, காடெல்லாம் பரவி, நளமகாராஜாவைச் சுற்றிக் கொண்டான். அந்த மகானுபாவன் சற்றுகிலும் பயப்படாமல் கைகளினாலே அந்த நெருப்பை அணைத்து விலக்கிக் கொண்டு, தைரியத்துடனே அந்த அக்கினியைத் தாண்டி, அப்புறம் தன் பெண்சாதி என்னம் ஆனளோ? அவளை விசாரிக்க வேண்டும் என்று மனதிலே எண்ணி, அவள் அண்டைக்குப் போக வேண்டும் என்று திரும்புகிற போது, அந்தச் சனீஸ்பரனுடைய பிரபாவத்தினாலே[1] கார்க்கோடகன்[2] என்கிற பாம்பு அந்த அக்கினி நடுவே அகப்பட்டுக் கொண்டு துன்பப் பட்டு, மூங்கிற் புதரின் பேரிலே குதித்தேறிக் கொண்டு, பிராண பீதியினாலே நளமகாராஜாவைப் பார்த்து, "ஓய் ராஜரே! சர்வ ஜீவ தயாபரரே! சரணம் என்கிற பேரைக் காக்கிற விருது உம்மிடத்திலே இருக்கிற படியினாலே உம்மைச் சரணம் அடைந்தேன்; என்னைக் காப்பாற்றும்; ஐயா! இதோ, அக்கினி தேவன் வந்து சுற்றிக் கொண்டு, என்னை வெகு வேதனைப் பண்ணுகிறான். இந்த வேளையிலே நீர் என்னை ரக்ஷியும், ஐயா!" என்று அனேகமாகப் பரிதாபப் படவே, அது கேட்டு நளமகாராஜா, தயவுள்ளவன் ஆனபடியினாலே, தன் ஆபத்தையும் பாராமல், அந்தப் பாம்பை ரக்ஷிக்கத் தன் மனதிலே நினைத்து, மேலே இருந்த புடவையைத் தன் அரையிலே கெட்டியாக வரிந்து கட்டிக் கொண்டு, பூத தயவுடனே இந்த ஆபத்துக் காலத்திலே காக்கிறதே பரம தர்மம் என்று, அந்தத் தணலிலே புகுந்து, பாம்பினுடைய வாலைப்பற்றி இழுத்து, நெருப்புக்கு அப்புறம் போட்ட உடனே அந்தப் பாம்பு திரும்பிக் கொண்டு, புஸ் என்றெழும்பி வந்து, நளமகாராஜாவைக் கையிலே கடித்தது. கடித்த உடனே ராஜாவினுடைய சரீரம் எல்லாங் கறுத்து

[1] பிரபாவம் = power, might.

[2] A huge black dragon.

விகாரமாய்க் காணப் பட்டது. அப்போது தன் பெண்சாதி சொன்ன வார்த்தையை நினைத்துக் கொண்டு, அந்தப் பாம் பைப் பார்த்து நள மகா ராஜா சொல்லுகிறான்:

"ஓ, கார்க்கோடகா! நான் ராச்சியத்தையும் விட்டு, வஸ் திரமும் இழந்து, பெண்சாதியையும் விட்டுப் பரதேசியைப் போலே போகிற என்னை நீ சரணம் அடைந்து, என்னைக் கூப்பிட்ட படியினாலே நான் உன் ஆபத்தைத் தீர்த்தால் எனக்கு நீ, பிராமண ஸ்திரீக்குக் கீரிப் பிள்ளை பண்ணின உபகாரத்திற் குப் பதில் உபகாரமாக அந்தப் பிராமண ஸ்திரீ கீரிப்பிள்ளையை உலக்கையால் அடித்தாற் போலே, பிரதி உபகாரம் பண்ணி னாய். ஆராகிலும் இப்படி உன்னைப் போலே உபகாரம் பண்ண மாட்டுவார்களோ?" என்று சொன்னதிற்குக் கார்க்கோடகன் நகைத்துச் சொல்லுகிறான்:

"ஓய், ராஜரே! நெருப்பிலே விழுந்து மடிந்து போகிற என்னை ரக்ஷித்த மகாத்துமாவான உமக்கு நான் அபகாரம் பண்ணு வேனோ? உமக்கு வாராத ஆபத்துகள் எல்லாம் வந்தது. ஆகை யினாலே, உம்முடைய ரூபத்துடனே ஒரு இடத்துக்குப் போ னால் உம்முடைய ராஜ ரூபத்தைக் கண்டு எவனும் பயப்பட்டு, உம்மை ஒரு வேலைக்கும் வைத்துக் கொள்ளான். ஆனபடியி னாலே மறு ரூபம் ஆக வேணும் என்று நினைத்து, நான் இந்தப் பிரதி உபகாரம் பண்ணினேன்; உம்முடைய ஆபத்துகள் தீர்ந்த பிறகு என்னை நீர் நினைத்தால் நான் வந்து கடித்த வாயிலே கடித்து விஷத்தை வாங்கிக் கொண்டு, எப்போதும் போலே உம் முடைய நல்ல ரூபத்தை உண்டாக்கிப் போகிறேன். நீர் பயப் பட வேண்டாம்," என்று சொன்னான்.



**26. §. NALA ARRIVES AT OUDE AND BECOMES A COOK AND COACHMAN.**

சொன்ன உடனே நள மகா ராஜா அதிக சந்தோஷப் பட்டுக் கார்க்கோடகன் கையிலே செலவு பெற்றுக் கொண்டு, கடின

மான காடுகளிலேயும் குன்றுகளிலேயும் திரிந்து, அநேகம் ரிஷிகளின் ஆச்சிரமங்களையும்[1] கடந்து, ஒரு இடத்திலேயும் நிலையாக இருக்கக் கூடாமல், நவ கண்டங்களும் ஒரு குடையின் கீழே ஆண்ட நள மகா ராஜா நாலு முழப் பழ வஸ்திரந் தரித்து, இரந்துண்டு, தன்னைச் சகல சனங்களும் பார்க்கவே வெட்கப் பட்டுக் கொண்டு போய், அளகா புரிக்கும் அதிகமான செல்வமுள்ள அயோத்தியா புரி பட்டணஞ் சேர்ந்து, அந்தப் பட்டணம் ஆளப்பட்ட ரிதுபர்ன மகா ராஜாவைக் கண்டு, தெண்டனிட்டு, அவனுடனே ஒரு வசனஞ் சொல்லுகிறான்:—

[1] Asramam = a refuge-hut.

"ஓய், மகா ராஜரே! நான் நிடத புரத்திலே நள மகா ராஜருடைய அரண்மனையிலே சுயம்பாகியாய் இருந்தேன். அவரும் எவ்வளவும் பேதகம் இல்லாமல் தன்னைப் போலே என்னையும் ரக்ஷித்துக் கொண்டு இருந்தார். அவர் இப்போது தம்முடைய ராச்சியத்தைப் புஷ்கர ராஜாவின் இடத்திலே சூதாடித் தோற்று விட்டு, வன வாசமாய்ப் புறப் பட்டுப் போய் விட்டபடியினாலே நான் அந்தப் புஷ்கர ராஜா அண்டையிலே இருக்க மனது வராமல், இப்படிப் புறப் பட்டு, உம்மண்டையிலே இருந்து காலத்தைக் கழித்துப் போடுவோம் என்று எண்ணி வந்தேன். ஓய், சுவாமி! நான் சமையல் வெகு நேத்தியாகச் சமைக்க மாட்டுவேன். ஒவ்வொரு வேளை ரதசாரத்தியமும் நேர்ப்பாக நிர்வாகம் பண்ண மாட்டுவேன். என் பெயர் வாகுகன் என்றுஞ் சொல்வார்கள். ஆகையினாலே, என்னை உம்மண்டையிலே நிறுத்திக் கொண்டு, ரக்ஷிக்க மாட்டுவீரோ?" என்று கேட்ட உடனே அந்த ராஜாவும் ரூபம் மாறுபட்டு வந்திருக்கிற நள மகா ராஜாவைப் பார்த்து நகைத்து, "இப்படிக் கொத்தவன் நம்மண்டையிலே இருந்தால் ஒரு வேளையிலே உதவி ஆவான்" என்று நினைத்து, அவனை மரியாதையுடனே

தன்னிடத்தில் வைத்துக் கொண்டிருந்தான். அங்கே நள மகா ராஜாவும் பயபத்தியுடனே ரிதுபர்ன மகா ராஜாவுக்குச் சந்தோஷம் உண்டாகும் படிக்கு ஏவற் றொழில்கள் செய்து காலத்தைப் போக்கிக் கொண்டிருந்தான்.

இப்பால் நள மகா ராஜாவுக்குச் சிநேகிதனும் விஷ்ணு பத்தனுமான பௌஷியன் என்கிறவன் நள மகா ராஜா பிள்ளையையும் பெண்ணையும் அழைத்துக் கொண்டு போய், வீம ராஜா பட்டணஞ் சேர்த்துத் திரும்பி மஹா விந்த புரிக்கு வருகிற போது, அவ்விடத்தில் புஷ்கர ராஜா ராச்சிய பரிபாலனம் பண்ணுகிறான். அதை அவன் கண்டு, நள மகா ராஜாவுக்கு வந்த ஆபத்துகளை அறிந்து, மிகவும் வியாகுலப் பட்டு, விதிப் பயனை நொந்து கொண்டு, தானும் முன்னே சேவித்த ரிது பர்ன ராஜா அண்டையிலே போய்ச் சேர்ந்திருந்தான். நள மகா ராஜாவும் பௌஷியனைப் பார்த்துப் பேசாமலும் தன் பேர் சொல்லாமலும் மௌனமாய் இருந்தான். பௌஷியனும் நள மகா ராஜா என்று தெரியாமல், ஆரோ சேவகன் என்று எண்ணிக் கொண்டு, அவனுடனே தானும் அந்த ரிதுபர்ன ராஜாவிடத்தில் சேவகாவிர்த்தி[2] பண்ணிக் கொண்டிருந்தான்.

[2] Service.



## 27. §. HOW DAMAYANTI FARED.

முன் அந்தக் காட்டிலே நித்திரை போன தமயந்தியானவள் நள மகா ராஜா பிரிந்து போய் விட்ட உடனே நித்திரை தெளிந்து எழுந்திருந்து பார்த்துத் தன் அண்டையிலே புருஷனைக் காணாமல் திகில் எடுத்துத் தன் புடவையிலே பாதிப் புடவை கிழித்திருக்கிறதையும் கண்டு, நாலு பக்கமுந் தேடிப் பார்த்து, அல் வித்தண்டு போலே சோர்ந்து விழுந்து, பூமியிலே புரண்டு புரண்டு அழுது, கண்ணீர் ஆறாய்ப் பெருகக் கூவென்ற சத்

தத்துடனே வாய் விட்டலறி முகத்திலே அறைந்து கொண்டு சொல்லுகிருள்:

"ஓய், என் பிராண நாயகரே! இன்றையதினம் என்னை விட்டுப் பிரிந்தீரோ? இவள் கூட இருந்தால் நமக்குக் கால்கட்டாய் இருக்குது என்று நித்திரை போகிற என்னை ஆரண்ணியத்திலே வஞ்சனை பண்ணி விட்டுப் பிரிந்தீரோ? ஓய், கீர்த்திப் பிரதாபரே! ஓய், தயாபரரே! ஓய், கலியாண குண பரிபூரணரே! ஓய், தீனரக்ஷகரே! ஓய், பிராணேசரே! ஓய், சுவாமி! என்னை ஒண்டியாய் விட்டுப் போக நீதியோ? இதுவரையிலே நிமிஷ நேரம் ஆனலும் பிரிந்திருந்த நாம் அல்லவே. உயிர் ஒன்றும் பொந்தி இரண்டுமாக இருந்தோமே. இப்படி லோகத்திலே ஸ்திரீ புருஷாள் உண்டோ என்று அவரவர்கள் ஆச்சரியமாய்ச் சொல்லிக் கொண்ட வார்த்தையும் போய் விட்டதே. அப்படி லோகத்தார் சொன்னதும் என் மனதும் உம்மிடத்திலே இருந்ததும் மெய்யானல் உம்மைப் பிரிந்து என் சீவன் இன்னம் பொந்தியிலே இருக்குமா? இத்தனை நேரம் நான் நித்திரை பண்ணினது என்ருகிலும் உண்டோ? உம்மைப் பிரிகிற நிமித்தியமோ? நீர் என்னை விட்டுப் பிரியலாமா? கூடி இருந்து காடுகளிலே காலங் கழிக்க மாட்டோமா? இந்த லோகத்திற்கு எல்லாம் நீர் ராஜாவும் எனக்குப் புருஷருமாய் இருந்தபடியினலே என்னைப் பிரிய மாட்டீர் என்று நான் மிகவும் நம்பி இருந்தேனே அல்லாமல், இப்படிப் பட்ட காட்டில் என்னை விட்டுப் பிரிந்து போவீர் என்று நான் அறியேன். ஆனல் உம்மைத் தூறுகிறது எனக்குத் தகாதே. முன்னே நான் என்ன நோன்பு நோற்றேனே, அது இப்போது பிரியப் பண்ணி வைத்தது. நான் மகா பாவியான படியினலே உமக்கு அந்த ஆபத்துகள் எல்லாம் வந்தது. நான் நல்ல குணங்களை உள்ளவள் ஆனல் இந்த ஆபத்துகள் உமக்கு என்னத்திற்கு வரும்?

மகா பாவியான என்னைக் கைபிடித்த படியினாலே உமக்கு இப்படிக்கொத்த ஆபத்துகள் வந்தது. கடைசியிலே என்னை யும் விட்டுப் பிரிந்து போனீர். இப்போதல்லவோ காடு என் றும், ஒண்டியாய் இருக்கிறேன் என்றும் எனக்குப் பயந் தோன்று கிறது. புருஷனை நீங்கின பெண்சாதி மரத்திற்குச் சமானம். புருஷன் சேர்வை பண்ணாத பெண்சாதி பசுவுக்குச் சமானம். புருஷனுடைய இஷ்டம் அறியாத பெண்சாதி கடினமான முள் ளுக்குச் சமானம். ஓய், பிராண நாயகரே! உம்முடனே எதிர்த்து வார்த்தைகள் சொன்னேனோ? ஊழியத்திலே தாழ்வு பண்ணி னேனோ? உம்முடைய மனது நோகப் பண்ணினேனோ? இப் படிப்பட்ட அக்கிரமம் என்னிடத்திலே உண்டானால் அல்லவோ நீர் என்னை விட்டுப் பிரிய வேணும். ஆனாலும் பெண்சாதி இடத்திலேயும் சேவகனிடத்திலேயும் தப்புகள் எத்தனை இருந் தாலும் துரைகள் ஆன பேர் பொறுக்க வேணும். இவர்களிடத் திலே நோஞ் சுமத்துகிறது அருமை அல்லவே. நீர் சகல தர் மங்களும் பரிபாலனம் பண்ணப் பட்ட மகா ராஜர் ஆச்சுதே," என்று இப்படிப் பல பல விதங்களாகச் சொல்லி, துக்கப் பட்டு, தெளிவு பிறந்து, தன்னுடைய கர்ம்ம வசத்தினாலே ராஜாவுக்குத் தன்னைப் பிரிய இத்தனை துணிவு பிறந்தது என்று நினைத்து, "ஓய், மகா லக்ஷ்மி மனோகரரே! நாராயணரே! வைகுண்ட வாசகரே! காட்டிலே என்னை விட்டுப் போனார் என்று என் பிராண நாயகரை நான் வீணாகத் தூறினேன்; என் தப்பைப் பொறுத்துக் கிருபை பண்ணி ரக்ஷிக்க வேணும்," என்று சொல்லி, தமயந்தி அனேக விதமாகத் தோத்திரம் பண்ணி, பகவானை வேண்டிக் கொண்டு, வெகுவாய்ப் பிரலாபித்து, விசாரத்தை அடைந்து, கடைசியிலே சற்றே தைரியம் உண்டாகி, எழுந் திருந்து நடக்கவே, திரும்பவும் மனது கலங்கி வாய் விட்டு அழுது சொல்லுகிறாள்:—

"ஓய், ராஜரே! பூரண சந்திரனைப் போல் ஒத்த உம்முடைய முகத்தை நான் என்றைக்குக் காணப் போகிறேன்? ஓய், பிராண நாயகரே! நான் எத்தனை தப்புகள் பண்ணினாலும், உமக்கு எத்தனை ஆபத்துகள் தான் வந்தாலும், பெண் சாதியான என்னை இப்படி அலையப் பண்ணலாமோ? முன்னே நாம் இருவரும் சிங்காரவனத்திலே பேசிக் கொண்டிருந்த பேச்சை நீர் மறந்து போனீரோ? இன்றைக்குத் தெய்வம் நம்மைப் பிரித்து விட்டதா? இனி எனக்குப் புத்தி என்ன? நீர் சீக்கிரமாவது வந்து சொல்லி என்னைக் காப்பாற்றுமற் போனால் என் சீவன் பொந்தியிலே நிற்க மாட்டாது. நீர் எங்கே ஒளித்திருக்கிறீரோ தெரியாதே. தேவரீர் ஓடி வந்து என் பிராணனைக் கொடுத்து ரக்ஷித்தல் ஆகாதா? சுவாமி!" என்று தமயந்தி இந்த விதமாகப் புருஷனை நினைத்து, பிரலாபப் படுகிற போது சூரியன் அஸ்தமனம் ஆனான். அந்த வேளையிலே தமயந்தி அந்தக் காட்டிலே விசாரப் படுகிறதைக் கண்டு, அவ்விடத்திலே இருக்கிற மிருகங்கள் எல்லாம் மேய்ச்சலுக்குப் போகாமல் சுற்றிலும் பார்த்துக் கொண்டிருந்தன. குயில்கள் அவள் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்தன.

---

### 28. §. DAMAYANTI AND THE FORESTER.

இப்படியாக தமயந்தி பிரலாபித்து, புருஷனைக் காணாத படியினாலே அவ்விடம் விட்டு நடக்கவே, புதர்களிலேயும் செடிகளிலேயும் புகுந்து, பக்ஷிகள், மிருகங்கள், விருக்ஷங்கள், இவைகளைப் பார்த்து, "ஓகோ, மிருகங்களே! பக்ஷிகளே! விருக்ஷங்களே! என் புருஷரான நளமகாராஜனைக் கணீர்களோ?"[1] என்று கேட்டுக் கொண்டு தேடுகிற தமயந்தியைச் சனீஸ்பரன் மாய்கையினாலே ஒரு மஹா பெரிய சர்ப்பம் துரத்திக் கொண்டு ஓடி வந்து,

[1] Comp. Poet. Anthology, 600—606.

இரண்டு காலையுஞ் சுற்றிக் கொண்டது. அதைக் கண்டு, தமயந்தி பயப்பட்டு, தன் புருஷனை நினைத்து, "ஓகோ, மஹாராஜரே! புண்ணிய புருஷரே! இந்தப் பாம்பின் வாயிலே அகப்படச் செய்து போய் விட்டீரோ?" என்று புலம்பினாள். அந்தச் சத்தங் கேட்டு, ஒரு வேடன் புதரிலே இருந்து கையிலே அம்பும் வில்லும் பிடித்து, அரையிலே ஒரு துப்பட்டியும் தலையிலே ஆட்டுச் சர்மத்தினுடைய குல்லாயும் நெற்றியிலே சிந்தூரப் பொட்டுஞ் செவந்த கண்ணும் விகாரமான மூக்குஞ் சிங்கப் பல்லுந் துலங்க, சீக்கிரமாகப் பாம்பினாலே இரண்டு காலுஞ் சுற்றப் பட்டு நள மகா ராஜாவை நினைத்துப் புலம்புகிற தமயந்தி அண்டையிலே ஓடி வந்து, அந்தப் பாம்பின் வாலைப் பற்றி இழுத்து, வெட்டிப் போட்டு, அந்தத் தமயந்தியைப் பார்த்து அந்த வேடன் சொல்லுகிறான்:

"ஓ! மன்மதன் தேவி போலே இருக்கப் பட்ட ஸ்திரீயே! துஷ்ட மிருகங்களினாலே பயங்கரமாய் இருக்கப் பட்ட காட்டிலே நீ ஒண்டியாய் இப்படி அலைந்து கொண்டு ஆரைத் தேடுகிறாய்? உன் பெயர் என்ன? நீ ஆருடைய மகள்? உன் புருஷன் பெயர் என்ன? சொல்வாய்," என்று கேட்ட உடனே தமயந்தி அந்த வேடனைப் பார்த்து, "ஓ! அண்ணா! விதர்ப்ப தேசத்தை ஆளுகிற வீம ராஜா மகள் நான். என் பேர் தமயந்தி என்று சொல்லுவார்கள். என் புருஷர் நள மகா ராஜர். என்னை இந்தக் காட்டிலே விட்டு ஏதோ ஒரு விசனத்தினாலே அவர் எங்கேயோ போய் விட்டார். அவரை நான் எங்குந் தேடுகிறேன். என் கண்ணிலே காணேன். அவர் மன்மதனைப் போலே சொரூபமும் தாமரை இதழ்களைப் போலே கண்களும் சந்திர விம்பம் போலே வதனமும் உடையவர். இந்தப் பூலோகத்திலே இருக்கிற நவகண்டங்களையும் ஆளப் பட்டவர். தேவப் பிராமண விசுவாசம் உள்ளவர். அவரை நீ எங்கே ஆகிலும் கண்ட துண்டோ? அண்ணா!" என்று கேட்ட உடனே

நல்ல உத்தரவு சொல்லாமல் அந்த வேடன் யோசனை பண்ணி, "இவள் நம்முடைய கையிலே ஒண்டியாய் அகப்பட்டுக் கொண்டாள். நம்முட பாக்கியமே பாக்கியம்," என்று அதிக சந்தோஷப் பட்டு, காம விகாரம் மிஞ்சினதால் ஒன்றுந் தோற்றாமல், அந்த வேடன் தமயந்தியைப் பார்த்துப் பின்னுஞ் சொல்லுகிறான்:—

"ஓ! ஓ! அதிக சௌந்தரியம் உள்ள பெண்ணே! சற்றும் இரக்கம் இல்லாமல் பிரிந்து போன உன் புருஷனை நீ தேடுவானேன்? அப்படிக்கொத்த புருஷன் லோகத்திலே கிடையானா? உன்னுடைய சௌந்தரியத்திற்கும் என்னுடைய சௌந்தரியத்திற்கும் சரியாய் இருக்கும்; என்னுடைய அவதானத்திற்கு தேவதா ஸ்திரீகள் ஆனாலும் மயங்கி என் கைவசம் ஆவார்கள். ஆகையினாலே, என் பெண்சாதியை நீ சொன்னபடி உனக்கு ஏவல் செய்து கை கட்டி உபசாரணை சொல்லி நிற்கப் பண்ணுகிறேன், அவள் மார்பில் அடித்தாற் போலே என் வீட்டுக்கு நீ வா, உனக்கு ஒரு குறைவுகளும் இல்லாமல் நடப்பிக்கிறேன்; எந்நேரமும் உன்னைப் பிரியாமல் இருக்கிறேன்; என்னுடைய ஊரைப் பார்த்து நீயே சந்தோஷப் பட்டு மெச்சப் போகிறாய்; என் வேட்டை நாய்களையும் என் கூட்டாளிகளையும் என் வீட்டிலே இருக்கிற விநோதங்களையும் இனிமேல் நீயே பார்க்கப் போகிறாய்; உன் மனதுக் கேற்ற படி போகங்களை அனுபவித்துக் கொண்டிருப்பாய். சுவாமி பாதத்து ஆணை. இதற்குச் சமுசயம் இல்லை. விருதாவாய் நல்ல எவ்வன காலத்திலே புருஷனை விட்டுப் பிரிந்து, மன்மத பாணங்களினாலே அடிபட்டு நோக வேண்டாம். உன்னுடைய பாக்கிய வசத்தினாலே நான் உனக்கு அகப் பட்டேன்; வா, பெண்ணே! ஓ, பிராண நாயகி! நான் சாமான்னியப்பட்டவன் அல்ல; உன்னுடைய புருஷனை மறப்பிக்க மாட்டுவேன்; கன்னம் இடவும், மூலையிலே இருக்கிற முடிப்பு எடுக்கவும், சொக்குப் பொடி போட

வும், வழி கட்டிப் பறிக்கவும், வலைகள் கண்ணிகள் ஒட்டிப் பக்ஷிகளை மிருகங்களைப் பிடிக்கவும், இப்படிப் பட்ட சமர்த் துள்ளவன்; சகலமான வேடரும் என்னை மெச்சுவார்கள். பெண் ணே! நீ என்னிடமாக இருந்து நல்ல ருசிகரமான மாங்கிசங் களைத் தின்று, தேனையுங் குடித்துக் கொண்டிருப்பாய். நீ கஷ் டப் படாத படிக்குத் தெய்வம் உன்னை என் கண்ணின் முன் னே கொண்டு வந்து விட்டு, எனக்கும் மோகத்தை உண்டாக்கி வைத்தது. ஆனபடியினாலே மன்மத பாணங்களுக்குத் தப்பக் கூட இல்லை. உன் பேரில் எனக்கு வெகு மோகமாய் இருக் கிறது; என் பெண்சாதியை நான் இனி விரும்பேன். முன்னே நான் செய்த பாக்கிய வசத்தினாலே நீ இங்கே வந்தாய்; நாம் இருவரும் நம்முடைய வீட்டுக்குப் போவோம், வா! நட! நட!" என்று சொல்லி இந்த விதமாக அந்த வேடன் துன்மார்க்கமான வசனங்களைச் சற்றும் அஞ்சாமல் மஹா பதிவிரதா சிரோமணி ஆகிய தமயந்தியைப் பார்த்துச் சொன்னான். அதைக் கேட்டு, அந்தத் தமயந்தி அதிக கோபத்துடனே அந்தக் குரூரமான வேட னை நீறுக்க வேணும் என்று நினைத்து, திரும்பவும் அந்தக் கோபத் தை மனதிலே அடக்கிக் கொண்டு, "ஐயையோ! தெய்வம் இந்த மஹா பாவியைக் கொண்டு வந்து எனக்கு எதிரே விட்டு, ஏன் இந்தத் துன்மார்க்கமான வார்த்தைகளைச் சொல்லுவித்தது? இந்த அதமன் இது பாவம் என்று சற்றாகிலும் எண்ணாமல் பேசினானே. இவனுக்கு நல்ல கதி கிடைக்குமா? நல்லது, இவ னைப் பிழைத்துப் போகத் தக்கதாக இன்னம் சில புத்திகள் சொல்லுவோம் என்று நினைத்துத் தமயந்தி அந்த வேடனைப் பார்த்துப் பின்னுஞ் சொல்லுகிறாள்:—



**29. § DAMAYANTI'S REPROOF AND ITS RESULT.**

"ஓ, அண்ணே! இப்படிப் பட்ட துன்மார்க்கமான வார்த் தைகள் சொல்லுகிறது, உனக்கு நியாயமா? ராஜ பத்தினியும்

தாயும் சரி ஆச்சுதே, நீ இப்படி யோசனை இல்லாமல் சொன்னத்தினாலே வந்த பாவங்கள் ஹரிஸ்மரணை[1] பண்ணினால் போம். அறிந்து செய்த பாவங்களுக்குப் பிராயச்சித்தம் ஒன்றும் இல்லை. அதனாலே முன் செய்த புண்ணியங்களும் இழந்து நரகத்துக்கும் போக வேண்டி இருக்கும். கெட்டுப் போவாய். ஆனபடியினாலே பர ஸ்திரீகளைச் சொப்பனத்திலேயும் விரும்பல் ஆகாது, விரும்பினால் அவர்களுக்கு லச்சையும் கேடும் வந்து சேரும், பாக்கியமும் போய்விடும், கீர்த்தி போய் அபகீர்த்தியும் உண்டாம், சகலமான பேர்களும் நிந்திக்கப் படுவார்கள். ஆயுசு சீரணம் ஆவாய். களை வாங்கிப் போய், சகல வியாதிகளும் உண்டாய்த் துக்கப் படுவாய். கடைசியிலே எமதூதாள் கையிலே அகப்பட்ட போது அவர்கள் கொண்டு போய், அரணைகள், அட்டைகள், பாம்புகள், கருந்தேள்கள், செந்தேள்கள் இவைகளை விட்டுக் கடிக்க இற்று, அக்கினித் தூணை அணைப்பித்து, உயிர்க் கழுவிலேயும் போட்டு, பாராங் கல்லுகளைக் கடிக்கப் பண்ணுவித்து, செக்கிலே போட்டுத் திருப்பி, எரிகிற நாராசங்களினாலே கண்களிலே குத்தி, பின்னையும் அனேகம் ஆயிரங் கோரங்களைச் செய்து, கடைசியிலே துர்க்கந்தமான எழுபத்தீராயிரம் நரகங்களிலேயும் போட்டு விடுவார்கள், என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். ஆகையினாலே பர ஸ்திரீகளைக் கண்ணினாலேயும் பார்க்கல் ஆகாது. பார்த்தால் லோக மாதாவைப் போலே எண்ணிப் பார்க்க வேணும். ஓ, அண்ணா! இதுவும் அல்லாமல் ராஜபத்தினி, குருபத்தினி, தமையன்பத்தினி, மாமன்பத்தினி, சிநேகிதன்பத்தினி, இவர்கள் ஐந்து பேரையும் தாய்க்குச் சரியாகப் பார்க்க வேணும். அல்லவென்று விரகம் மிஞ்சி மோகித்துப் பார்த்தால் பண்ணின புண்ணியங்கள் அழிந்து போம்;

[1] Meditation upon Vishnu.

ஐஸ்வரியமும் ஆயுசும் சீரணித்துப் போம்; கீர்த்தி, மானம், காந்தி, குணம் இவைகளுங் குறைந்து போம். வாராத ஆபத்து களும் வரும். புத்தி கெட்டுப் போம். இது அல்லாமல் இப் போது நான் சொன்ன படி எம தூதர் கையில் அகப்பட்டு, கதை, சூலம், இருப்புத்தடி, குந்தம், சுரிகை, கத்தி, சக்கரம், தோமரம், பாசு, பட்டையம், அஸ்திரங்கள், பாசக்கயிறுகள் இவைகளினாலேயும் வெகுசாய் வருத்தப்பட வேணும்; அகோர மான செந்துக்களாகப் பிறக்க வேணும். ஓ, அண்ணா! நீ ஒரு நாள் ஆகிலும் நீதி சாத்திரங்களைக் கேட்க இல்லையோ? பெரி யோர்கள் சகவாசம் பண்ண இல்லையோ? நீ பெண்களுடனே பிறக்க இல்லையோ? நான் உனக்குத் தங்கை, மஹா பதிவிரதை ஆகையினாலே உனக்கு இப்படிப் பட்ட துர்ப்புத்தி வேண் டாம், அண்ணா!" என்று அனேக விதங்களாக நீதிகள் தம யந்தி சொன்னாள். சொன்ன உடனே அந்த வார்த்தைகளை வேடன் கர்ணகடோரமாகக்[2] கேட்டு ஒப்பாமல் மரண காலம் சம்பவித்த படியினாலே தமயந்தி யுடைய சத்தியமும் மகிமையும் பின் வருகிறதுந் தெரியாமல் தன்னைத் தான் அறியாமல் கர்வித்துச் சொல்லுகிறான்:—

[2] Hardness of ears.

"அடி பெண்ணே! நீ இப்படி என்னை அலையப் பண்ணி, நான் வந்த காரியத்தைத் தடுக்கிறாய். நீ சொல்லுகிற வார்த் தைகள் ஒன்றும் நான் கேட்க மாட்டேன். அவைகள் ஒன்றும் என் செவியிலே நுழையவே இல்லை. இத்தனை உபாயமான வார்த்தைகள் என்னுடனே சொல்ல வேண்டாம். பின்னே வருகிற காரியங்களை எண்ணுவானேன்? எம தர்ம ராஜா கர் வித்து என் அண்டைக்கு வந்தால் நிமிஷத்துக்குள்ளே அவன் கர்வத்தை நான் அடக்கிப் போடுவேன். எப்படிப் பட்ட பலசாலிகள் ஆனாலும் என் முன்னே நிற்கப் பயப் படுவார் கள். என்னுடைய சௌரியத்தை நீ அறிய மாட்டாய். ஓய்;

பெண்ணே! இத்தனை காலம் என்னுடனே நீ பண்ண வேண்டாம். எம வாதையைக் கண்டவர் ஆர்? இனி மனம் ஒளிப்பானேன்? காட்டிலே திரிகிற எங்களுக்கு வரிசை, தயவு இவைகள் உண்டாயிருந்தால் நாங்கள் பிழைக்கவே மாட்டோம். எங்களுடைய குலத்து வாழ்க்கையே அப்படிப் பட்டது. எங்களுக்குப் புண்ணியம் என்றும், பாவம் என்றும் பார்க்க அக்கறை இல்லை; எல்லாம் சரிதான். ஆகையினாலே ஓ, மஹா ரூபவதியே! இனி தடை பேசாமல் என்னை ஆண்டு கொள். என் பேரிலே குற்றம் நீ சொல்லத் தகாது. உன் ஆணை நான் இனி பொறுக்க மாட்டேன். உனக்கு அடிமை ஆகிறேன். என்னை ஆள்வாய்! பெண்ணே! நம்முடைய ஊருக்குப் போவோம்," என்ற உடனே தமயந்தி யோசனை பண்ணி, அதிக கோபமாய் அந்த வேடனைப் பார்த்து, "அடா! பாவி! எனக்கு உபகாரம் பண்ணின உனக்கு அபகாரம் பண்ணத் தகாதே. நீ பண்ணின உபகாரத்தினாலே நீ செய்த அபகாரம் எல்லாம் நான் பொறுக்க மாட்டேன். நீ இப்படித் துன்மார்க்கமான பேச்சுகள் பேச வேண்டாம். சுகமாக ஓடிப் பிழைத்துப் போய் விடு," என்று கண்டித்துச் சொன்னாள். அதை வேடன் கேட்டுச் சம்மதியாமல் தன் கண் புருவத்தை நெறித்து விழித்துப் பார்த்து, தமயந்தி இவைகளினாலே எல்லாம் கைவசம் ஆக மாட்டாள், பலவந்தமாய்ப் பிடித்துப் போகிக்கிறதே யோசனை என்று சொல்லி, அந்த வேடன் தமயந்தியைப் பிடிக்கக் கிட்ட வந்தான். அது கண்டு மஹா புண்ணியவதியாய் இருக்கிற அந்தத் தமயந்தி தேவி அதிக ரோஷத்துடனேயும் தன் கண் செவக்க மஹா கிலேசத்துடனேயும் மனம் நொந்து, பகவானை நினைத்துச் சொல்லுகிறாள்:—

"ஓ, அநாத ரக்ஷகா! ஆப்த பாந்தவா! பக்த வச்சலா! பரப்பிர்ம்ம சொரூபா! ஓய், சுவாமி! நான் மனோ வாக்குக் காயகர்மங்களினுலேயும்[3] என் புருஷனுக்கு வஞ்சனை பண்ணுதவளுமாய், சகல லக்ஷணங்களும் உள்ள பதிவிரதையுமாய், இந்த லோகத்துச் சனங்கள் எல்லாம் புகழப் பட்ட நள மகா ராஜா் எனக்குப் புருஷருமாய், நான் அவருக்குப் பெண்சாதியுமாய், என்னிடத்திலே ஒரு தப்பிதங்களும் இல்லாமல் இருக்கிறது நிசமே ஆனுல் இந்த வேடன் எரிந்து சாம்பலாய்ப் போகக் கடவன்!" என்று சொல்லிச் சபித்தாள். சபித்த உடனே அந்த வேடன் இடி விழுந்தாற் போலே ஒரு சொல்லுக்குள்ளே பக்கென்று எரிந்து, சாம்பலாய் விழுந்து, ரௌரவாதி[4] நரகத்திற் சேர்ந்தான்.

[3] S. Comp. = By mind, word, body or deed.

[4] The horrible: One of the divisions of the lower world.



**30. §. DAMAYANTI SEEKS IN VAIN FOR DEATH.**

அதின் பிறகு தமயந்தி தேவியும் மெத்தக் கிலேசத்தை அடைந்து, என் புருஷன் என்னைப் பிரிந்து போனபடியினுலே அல்லவோ இந்தப் பாவி இப்படி என்னைப் படுத்தினுன். புருஷன் என் அண்டையிலே இருந்தால் இவன் என்னைத் தலை எடுத்துப் பார்ப்பானு? ஆண் திக்கில்லாத பெண்சாதி இந்தப் பூமியிலே பிழைத்திருக்கல் ஆகாது, ஒண்டியாய் வெளிப் படவும் தகாது. ஸ்திரீயாய்ப் பிறக்கிறது மெத்தத் தோஷம். தண்ணீரிலே இருக்கிற சீவனை வெளியிலே பிடித்துப் போட்ட பாவனை போலே நான் இந்தப் பூமியிலே என் புருஷனை விட்டு ஒண்டியாய்ப் பிழைத்திருக்க மாட்டுவேனுே? ஒரு நாளும் கேளாத விந்தைச் சொல்லுகள் இன்றைக்கு நான் கேட்கல் ஆச்சுதே. இந்தக் காட்டிலே என் புருஷன் ஒரு இடமும் பிள்ளைகள் ஒரு இடமும் போம் படிக்கு என்னை ஆர் சபித்

தார்களோ தெரியாது. இனிமேல் இந்த வேடனைப் போலே பாவிகள் எத்தனை பேர் வழிக்கட்டுவார்களோ, தெரியாதே. ஆகையினாலே, இனி நாம் பிராணனை விட்டு விடுகிறதே உத்தமம். பின் வாங்கப் போகாது," என்று நினைத்து, தமயந்தி தன் புருஷனை நன்றாகத் தியானம் பண்ணிக் கொண்டு, தனக்கு எதிரே வருகிற மிருகங்களையும் பக்ஷிகளையும் எச்சரித்துக் கொண்டு வரவே, சனீஸ்பரன் மாய்கையாய் அக்கினி பகவானுடனே சொல்லி, தமயந்தியை வருத்தப் படுத்தச் சொன்னான். அப்போது ஆகாயத்திலே தேவர்களும், யக்ஷ கின்னர கிம்புருஷ கருட காந்தருவர்களும், பன்னக ஸ்திரீகளும் கண்டு கிலேசப்பட, தமயந்திக்கு முன்பாகச் ஜெக சோதியாய் அக்கினி பிரவேசித்தபடியினாலே அந்தத் தமயந்தி தேவி அக்கினியைப் பார்த்து, இது 'சமயம் இந்தப் பிராணனை வைத்திருக்கல் ஆகாது என்று மனதுக்குள்ளே எண்ணி, அந்த அக்கினியிலே போய் விழுந்தாள். விழுந்த உடனே அந்த அக்கினி தேவன் பயந்து குளிர்ந்த சலம் போலே இருந்தான். தமயந்தி தேவி அக்கினியிலே விழுந்தும் சாவு வாராமற் போயிற்று என்றும், தன் மனதுக்குள்ளே எண்ணி, அப்பாலே போய் அந்தக் காடுகளிலே திரிகிற போது அவ்விடத்திலே இருக்கிற மிருகங்கள் கையிலே ஆகிலும் அகப்பட்டுச் சாவோம் என்று எண்ணிக் கொண்டு போகவே, வேங்கைப் புலிகளைக் கண்டு அவைகள் அண்டையிலே போனாள். அவைகளும் பயந்து ஓடிப் போயின. அப்பால் போகவே காடிகளைக் கண்டு அவைகள் அண்டையிலே போய், கல் விட்டெறிந்தாள். அவைகளும் பயந்து ஓடிப் போயின. அப்புறம் போகிற போது காட்டெருமைகளைக் கண்டு அவைகள் அண்டையிலே போய்க் கொம்பைப் பிடித்திழுத்தாள். அவைகளும் பயந்து முறித்துக் கொண்டு ஓடிப் போயின. அப்புறம் போகிற போது

காட்டுப் பன்றிகளைக் கண்டு, அவைகள் அண்டையிலே காலைப் பிடித்து இழுத்தாள். அவைகளும் பயந்து ஓடிப் போயின. அப்புறம் போகிற போது ஆனைகளைக் கண்டு, அவைகள் அண்டையிலே போய் அதட்டித் துதிக்கையைப் பிடித்தாள். அவைகளும் பயந்து ஓடிப் போயின. அப்புறம் போகிற போது சிங்கங்களைக் கண்டு, அவைகள் அண்டையிலே போய் கெர்ச்சித்து நின்றாள். அவைகளும் பயந்து ஓடிப்போயின. இப்படி எந்த விதத்திலே பிராணனைப் போக்கடித்துக் கொள்ளுவோம் என்று திரிந்தாலும் தமயந்திக்குப் பிராணன் போகாமல் அலைந்து, கண்ணீர் சொரிந்து, பின்னையும் சொல்லுகிறாள்:—"இந்த உலகில் சனங்கள் சாகிறது என்னென்ன மருந்துகளைத் தின்று சாவார்களோ, தெரியாதே. நான் என்ன செய்வேன், தெய்வமே!" என்று கண்ட கண்ட இலைகளையும் வேர்களையும் மென்று மென்று தின்றும் பார்த்தாள். அதிலும், சாவு வராமல் பசியும் அடங்கிப் போய்ப் பிரேதம் பிடித்தவர்களைப் போலே இப்படிப் பிரமித்துக் கொண்டு, தொங்குகிற மயிரும் சொரிகின்ற கண்ணீருமாய் நடக்கிற போது நடை தள்ளாடித் தத்தளித்து, பெரு மூச்செறிந்து, குரலும் கம்மி, கிலேசத்துடனே அந்தக் காட்டிலே சிஷ்ய சனங்கள் சேவிக்க வேத பாராயணங்களுடனேயும் இருக்கிற இரிஷிகளைக் கண்டு சேவித்து, தன் துக்கங்கள் எல்லாம் அவர்களுடனே சொல்லி, "ஓய், சுவாமிகளே! பசியாத்தாபம் உள்ளவர்களே! என்னை நள மகாராஜாவானவர் இந்த ஆரண்ணியத்திலே விட்டுப் போய் விட்டார். அவரை நான் காடுகள் எங்குந் தேடிக் காணாமல் உங்கள் சன்னிதியிலே வந்து சரண் அடைந்தேன். நீங்கள் கடாக்ஷித்து என்னை ரக்ஷியுங்கள்," என்று சொன்னாள்.

சொன்ன உடனே இரிஷீஸ்பரர்கள் எல்லாரும் அவளைப் பார்த்து, பசிதாபத்துடனே தங்கள் திவ்விய திருஷ்டியினாலே

பார்த்து, "ஓ, ராஜ குமாரத்தியே! நீ பயப்பட வேண்டாம். விசாரப் படாதே, அம்மா! மகா குரூரன் ஆன சனிஸ்பரன் இத்தனை காரியங்களும் செய்து, உன்னை அலையப் பண்ணுகிறான். அவனுக்குத் தயவு வரப் போகிறது. எப்போதும் போலே உன் புருஷனும் உன் பிள்ளைகளும் நீயுங் கூடிச் சேர்ந்து ராச்சிய லட்சுமியினுடைய விபவத்தை அனுபவிக்கவே போகிறீர்கள். சிந்தனைப் படவேண்டாம், அம்மா!" என்றார்கள். தமயந்தியும் அதைக் கேட்ட உடனே விசாரந் தீர்ந்து, "ஓய், சுவாமிகளே! நீங்கள் சொன்ன படி நாங்கள் கூடி இருக்க எத்தனை நாள் செல்லும்?" என்று கேட்க முனீஸ்பரர்களும் யோசனை பண்ணி, "அம்மா! தமயந்தி! இன்னம் மூன்று வருஷம் சென்ற பிறகு உன் புருஷனும் நீயும் உன் பிள்ளைகளுங் கூடிச் சந்தோஷமாக இருக்கப் போகிறீர்கள். அப்படி இருக்கிற போது நாங்கள் சொன்ன வார்த்தையை நீ நினைத்துக் கொள்ளப் போகிறாய். எங்களிடத்திலே அபத்தம் பிறவாது. கெட்டியாக நம்பு," என்று அபயாஸ்தம்[1] கொடுத்தார்கள். அந்த வார்த்தைகளையும் தமயந்தி கேட்டு, வெகு சந்தோஷத்துடனே நம்பி, தன் மனதைத் தேற்றிக் கொண்டு, அவர்கள் அண்டையிலே தானே அவர்களுக்குப் பணிவிடைகள் செய்து கொண்டிருந்தாள்.

[1] Hand of refuge = assurance of kindly reception.

---

### 31. §. DAMAYANTI'S JOURNEY WITH THE BULLOCK DRIVERS.

சில நாள் சென்ற பிறகு தமயந்தியைப் பார்த்து, "ஓ, அம்மா! பாக்கியவதியே! நீ இன்றைய வரைக்கும் எங்கள் வாசத்தில் இருந்தாய்! எங்களுடைய தபசு முடிந்த படியினாலே இனி எங்கள் இருப்பிடத்துக்கு நாங்கள் போகிறோம். நீ சுபாகு மகா ராஜாப் பட்டணம் போய்ச் சேர்ந்திரு. இந்தக் காட்டிலே நீ ஒண்டியாகத் திரிய வேண்டாம். அந்தப் பட்டணத்துக்குப்

போகிற மார்க்கம் இது தான்," என்று சொல்லி, அந்த இரிஷிகள் எல்லாரும் தங்கள் கூட்டத்துடனே கேசர மார்க்கத்திலே எழும்பிப் போனார்கள். தமயந்தி தேவியும் அங்கே இருந்து புறப்பட்டு, பாட்டை வழியைக் கூட்டிக் கொண்டு, சுபாகு மகா ராஜாப் பட்டணத்தைப் பார்க்க நடந்து போகவே, அந்த மார்க்கத்திலே போகிற சில பொதிமாட்டுக்காரர் அந்த ராஜ பத்தினியைக் கண்டு, சிந்தை கலங்கி, ஒருவரைப் பார்த்து ஒருவருக்கு ஒருவர் சொல்லுகிறார்கள்:—"பார்த்தீர்களோ? அதோ, ஆரோ, தெரியாது. பாருங்கள்! சேல் கெண்டையைப் போலே விசாலமான கண்களும், சந்திர பிம்பம் போலே முகமும், வல்லிசாதக்கொடியைப் போலே சிறுத்த இடையும், சோதி மின்னலைப் போலே காந்தியுள்ள சரீரமும் உடையவளாய் ஒரு ஸ்திரீ மஹா விசாரத்துடனே வருகிறாள். இந்தக் காட்டிலே ஒண்டியாய் இப்படி இவள் வருவானேன்? இது என்ன மாயமோ தெரியாது. இவள் பயித்தியக்காரியோ? அல்லது ராக்ஷசியோ? மிருத்தியு தேவதையோ? தெரிய இல்லையே. அதோ நின்று நம்மையே பார்த்துக் கொண்டு வருகிறாள். ஒரு வேளை மோசம் வரப் போகிறது. சீக்கிரமாக நடவுங்கள், நடவுங்கள்," என்று சொல்லிக் கொண்டு, பொதிமாட்டுக்காரர் எல்லாரும் பயங்கரத்துடனே பொதிமாடுகளையும் விட்டு ஓடிப் போகவே, அதிலே ஒரு பொதிமாட்டுக்காரன் தைரியத்துடனே நின்று, தமயந்தி கிட்ட வந்த உடனே தெண்டனிட்டுச் சொல்லுகிறான்:—

"ஓ, அம்மா! பாக்கியவதியே! நீ ஆர்? மனுஷியா? ராக்ஷசியா? தேவ கன்னிகையா? இந்த வனத்திலே இருக்கிற துர்க்கையா? ரதி தேவியா? லட்சுமி தேவியா? அல்ல என்று எங்கள் பங்கு தேவதையா? உன் செய்திகளை எங்களுக்குத் தெரியச் சொல்லு, அம்மா! தலையை விரித்துக் கொண்டு கண்ணீர் சொரிய இந்தப் பயங்கரமான காட்டுக்குள்ளே ஒண்டியாய்

வருகிற காரணம் என்ன? சொல்லம்மா!" என்று கேட்ட பொதி மாட்டுக்காரன் முகத்தைப் பார்த்துத் தமயந்தி தேவி சொல்லத் தொடங்கினாள்:—

"ஓ, அண்ணா! நான் தேவதாஸ்திரீயும் அல்ல; ராக்ஷசியும் அல்ல; லட்சுமி தேவியும் அல்ல; பார்வதி தேவியும் அல்ல; ரதி தேவியும் அல்ல; மிருத்தியு தேவதையும் அல்ல; இந்த வனத்திலே இருக்கிற துர்க்கையும் அல்ல; நான் மனுஷ ஸ்திரீ, தான் சகல தேசத்தாரும் அறிய விஷ்ணு சக்கிரத்தினாலே ஜெயங் கொண்டு நவ கண்டங்களும் ஆளப் பட்ட நளச் சக்கிர வர்த்தி மகா ராஜருடைய பெண்சாதி நான். என் பெயர் தமயந்தி என்று சொல்லுவார்கள்; என் பூர்வ கர்ம்ம வசத்தினாலே என் புருஷன் சகல சம்பத்துகளையும் சூதினாலே புஷ்கர ராஜாவுக்குத் தோற்று விட்டு, காடுகளிலே திரிவோம் என்று கூட என்னையும் இட்டுக் கொண்டு வந்த இடத்திலே ராஜா என்னுடனே கூட இருந்து கஷ்டப் பட மாட்டாமல் என்னைக் காட்டிலே தனியே விட்டு, அவர் மாத்திரம் எங்கேயோ போனார். அந்த இடம் தெரியாமல் நான் எங்கெங்கும் தேடிக் காணமல் இப்படி அநாதியாய்த் திரிகிறேன்" என்று நடந்த வர்த்தமானங்கள் எல்லாம் தமயந்தி சொல்லக் கேட்டு, அந்தப் பொதிமாட்டுக்காரன் வெகு தாபந்திரியப் பட்டுச் சொல்லுகிறான்:—

"ஓ, அம்மா! நீ இப்படிக் காட்டிலே திரிந்து வருத்தப் பட்டுக் கொண்டிருக்கிறது தர்மம் அல்ல. சுபாகு மகா ராஜா பட்டணத்திலே போய்ச் சேருகிறதே மெத்த நல்லது. நாங்களும் அந்தப் பட்டணத்துக்கே பல சரக்குகள் கொண்டு போகிறோம்; எங்கள் பிறகே நீ வந்தால் உன் புருஷர் அந்தப் பட்டணத்திலே ஒரு வேளை இருந்தாலும் இருப்பார். காட்டிலே அவர் இரார்; நீ ஏன் விருதாவிலே இவ்விடத்திலே கஷ்டப் பட்டுக் கொண்டிருக்கிறாய்? வேண்டாம்; எங்கள் பிறகே வா, அம்மா!" என்று மனம் தேறச் சொல்லி, தமயந்தியை அழைத்துக் கொண்டு

போய், ஓடிப் போகிற தங்கள் மனுஷரை நிறுத்தி, அவர்களுடனே அந்தத் தமயந்தி சொன்ன செய்திகள் எல்லாம் சவிஸ்தாரமாகச் சொல்லிக் கொண்டே தமயந்தியை அழைத்துக் கொண்டு போகிற போது, கடினமான வெய்யிலினாலேயும் காற்றினாலேயும் குடிக்கத் தண்ணீர் கிடையாமல் மெத்தவும் விடாய்ப் பட்டுப் போகவே, அங்கே ஒரு குளத்தைக் கண்டு சந்தோஷமாகப் பொதிமாட்டுக்காரர் மரத்து நிழலிலே பொதிகளைத் தள்ளிப் போட்டு, மாட்டுக்குத் தண்ணீர் காட்டித் தாங்களும் தண்ணீர் குடித்து விடாய் தீர்ந்தார்கள். தமயந்தியும் தண்ணீர்த் தடாகத்தினுடைய அழகைப் பார்த்துச் சந்தோஷப்பட்டு, அதிலே போய் இறங்கி, கால் கைகளை அலம்பிக் கொண்டு, தண்ணீர் குடித்துத் தாகமுந் தீர்த்து, மர நிழலிலே இருந்து, தன் புருஷனை நினைத்து, அதிக சோகத்துடனே "அவர் எங்கே கஷ்டப் படுகிறாரோ?" என்று துக்கப் படுகிற போது அண்டையிலே இருக்கிற பொதிமாட்டுக்காரர், "அம்மா," என்று அழைத்து நல்ல வசனங்களினாலே துக்கத்தைத் தீர்க்க, மனது குளிரப் பெண் படுகிற கிலேசத்தைப் பார்க்க மாட்டாமல் மேற்கே மறைந்து போனானோ என்றாற் போலே சூரியன் அஸ்தமனம் ஆனான். அப்போது தமயந்தியினுடைய முகம் குளிர்ந்து வாடினாற் போலே தாமரைப் புஷ்பங்களும் குமுளித்துக் கொண்டன. சனீஸ்பரன் முகம் மலர்ந்து களையாய் இருக்கிறாப்போலே செங்கழுநீர்ப் புஷ்பங்கள் மலர்ந்தன. காடாந்தகாரமான இருட்டு கம்மிக் கொண்டது. தேவர்கள் எல்லாரும் அந்தத் தமயந்தியுடைய துக்கத்தைத் தீர்க்க வந்தார்களோ என்றாற் போலே ஆகாயத்திலே நட்சத்திரங்கள் பிரகாசமாய் விளங்கின. அந்த வனத்துத் தேவதைகள் தமயந்தியுடைய துக்கத்தைப் பார்த்துப் பொறுக்க மாட்டாமல் உபசாரணை சொல்ல வந்ததோ என்றாற் போலே குயில்கள், கிளிகள், ஆந்தைகள்,

சக்கிரவாகங்கள், சகோரங்கள், மயில்கள், கொண்டலாத்திகள் முதலான பக்ஷிகள் எல்லாம் கல கல என்று தொனி செய்தன. ஸ்ரீ மகா லட்சுமி தேவியும் அந்தத் தமயந்தியுடைய விசாரத்தைப் பார்த்துச் சகிக்க மாட்டாமல் விசாரிக்க வந்தாளோ என்றாற் போலே மல்லிகை, முல்லை, இருவாக்ஷி, செண்பகம் முதலான புஷ்ப சாதிகள் எல்லாம் மலர்ந்தன. இப்படி எல்லாம் உண்டாக அந்த ராத்திரியிலே தமயந்தி விடாய்பட்டதினாலேயும் புருஷனைப் பிரிந்த விசாரத்தினாலேயும் சரீரஸ்மரணை இல்லாமல் மறந்து நித்திரைபோனாள். பொதிமாட்டுக்காரரும் அலைச்சல் பட்டு வந்தவர்களான படியினாலே அவர்களும் உடம்பு மறந்து நித்திரை போனார்கள்.

---

### 32. §. DAMAYANTI IN KING SUBÂGU'S CITY.

அந்தச் சமயத்திலே ராத்திரி பதினைந்து நாழிகை வேளையிலே அனேகங் காட்டானைகள் புறப்பட்டு வந்து, நித்திரை போகிற பொதிமாட்டுக்காரரை எல்லாம் எறித்துக் கிழித்துக் கொன்று போட்டுப் பொதி எருதுகளையும் கொன்று போட்டுப் போய், அந்த ஆனைகள் அங்கிருந்த தடாகத்திலே இறங்கித் தாமரைகளைப் பிடுங்கி வெளியிலே போட்டு, தண்ணீரை வாரி, நாலு திக்கிலும் இறைத்து, விளையாடி ஆரவாரம் பண்ணவே, தமயந்தி விழித்துக் கொண்டு செத்துக் கிடக்கிற பொதிமாட்டுக்காரரைப் பார்த்து, "ஐயையோ, இந்த ஆனைகள் மஹா பாவியான என்னை மாத்திரங் கொல்லாமல் விட்டு இவர்களை எல்லாங் கொன்று போட்டன. பார்த்தாயோ! இப்படிப் பட்ட சாவு எனக்குக் கிடையாமற் போச்சுதே; நான் இதற்கு இனி என் செய்வேன்? என் தலை விதி இன்னம் என்னை என்ன பாடு படுத்த இருக்கிறதோ தெரியாதே! என்றைக்கு என் கர்மம் தீர்ந்து என்னுடைய கோறிக்கை ஈடேறுமோ?" என்று சொல்லி,

வெகுவாகப் பிரலாபித்துக் கொண்டிருக்கவே சுக்கிர பகவான் மறைந்து உதய கிரியிலே சூரியனும் உதயமாகிக் கிரணங்கள் எங்கும் பரவின:—

அப்போது தமயந்தி எழுந்திருந்து புறப்பட்டு ராஜமார்க்கமே ஒண்டியாய் நடந்து போய்ச் சுபாகு மகா ராஜாப் பட்டணம் சேர்ந்து, தான் சைரந்தி என்கிற பெயருடைய தாதி என்று கேட்கிற பேர்களுக்குச் சொல்லி, பட்டணத்து வீதியிலே புருஷனைத் தேடிக் கொண்டு போகவே, மஹா ராஜ லக்ஷணங்கள் உள்ள தமயந்தியைப் பட்டணத்துச் சனங்கள் எல்லாரும் பார்த்து, ஆச்சரியப் பட்டு, ஒருவருக்கு ஒருவர் எச்சரித்துக் கொண்டு, "ஓ, அம்மா! ஓ, அக்கா! ஓ, தங்கை! ஓ, அத்தை! ஓ, மச்சி! ஓ, அண்ணி! ஓ, மாமி! பார்த்தாயோ? அதோ போகிற புண்ணியவதி ரூபத்தை எங்கேயும் நாம் கண்டறியோம், கேட்டும் அறியோம், அருந்ததியோ? சந்திரவதியோ? ரதிதேவியோ? அகலிகையோ? தெரியாது. பிறந்தால் இப்படிப் பட்ட ரூபவதியாய் அல்லவோ பிறக்க வேணும். நம்முடைய ஜென்மங்கள் என்னத்துக்கு? விருதாவான சரீரம் எடுத்தோம்," என்று ஆச்சரியமாகப் பார்த்துச் சொல்லிக் கொண்டிருக்கவே, தமயந்தி தேவி ஒருவரையும் கண் எடுத்துப் பாராமல், வீதியிலே நடந்து போகவே அப்போது சுபாகு மகா ராஜாவுடைய தாயார் கோகிலா தேவி என்கிறவள் உப்பரிகையின் பேரிலே இருந்து பார்த்துத் தன் பாங்கிமாரை அழைத்து, "ஓ, பெண்களே! அதோ, ஆரோ தெரியாது, ஒரு பெண் வீதியிலே போகிறாள்; பார்த்தால் அவள் அந்தப்புரத்திலே இருந்தவள் போலே இருக்கிறது. சகல ராஜ லக்ஷணங்களுடனே போகிறாள். அவள் இப்படித் திரியக் காரணம் என்னமோ தெரியவில்லை; நீங்கள் போய், அந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு வாருங்கள்," என்று சொன்ன உடனே பாங்கிமார்கள் "நல்லது" என்று வீதியிலே போய், தமயந்தியைக் கண்டு வெகுவாய்ப்

"ஓ, அம்மா! உனக்கு இச்சையானபடியே என் வீட்டிலே நீ இரு, என் பெண்களுக்குச் சரியாகப் பார்க்கிறேன், நீ எத்தனை காலம் இருந்தாலும், ஒரே சீராக நடப்பிக்கிறேன். ஸ்ரீ மகா லட்சுமி எங்கள் வீட்டிலே விளங்கி இருக்கிறாப் போலே நீ வாசமாய் இருந்து எங்களுக் கெல்லாம் புத்திமதிகளைச் சொல்லிக் கொண்டு இரு, அம்மா," என்று சொன்ன உடனே தமயந்தியும் அப்படியே சுபாகு மகா ராஜா தாயார் அண்டையிலே மரியாதைகளுடனே ஒரு குறைவும் இல்லாமல், எந்நேரமும் தன் புருஷனைக் கொண்டு வந்து தன்னுடனே சேர்க்க வேண்டும் என்று சொல்லி, ஸ்ரீ மகா விஷ்ணுவையே தியானம் பண்ணிக் கொண்டிருந்தாள்.



## 33. §. NALA NEARLY BETRAYS HIMSELF.

அங்கே அயோத்தியிலே ரிதுபர்ன ராஜா அண்டையிலே சேவித்துக் கொண்டிருக்கிற நளச் சக்கிரவர்த்தி வாகுவன் என்கிற பெயருடனே நல்ல சுயம்பாகி என்று ரிதுபர்ன ராஜா கொண்டாடச் சமையல் அறுசுவைகள் உடனேயும் சமைத்துப் போட்டு, அந்த ராஜாவுக்கு மகா சந்தோஷம் வர நடந்து கொண்டு, தான் தண்ணீரும் சாதமும் சாப்பிட்டு, தாம்பூலமும் வர்ச்சித்து,[1] புஷ்கர ராஜா தன் ராச்சியத்தைப் பறித்துக் கொண்ட துக்கத்தையும் தன்னைச் சேவித்த பேரைத் தான் சேவிக்கிற துக்கத்தையும் நினைத்து, மனம் சோர்வு பட்டு இருக்கிற நாளையிலே, ஒரு நாள் ராத்திரிகாலத்திலே நிலவிலே சயனித்துக் கொண்டு, தன் பெண்சாதியை நினைத்து, தன்னிலே தானே தெய்வத்தை நொந்து சொல்லிக் கொள்ளுகிறான்:—

[1] Reject.

"ஐயையோ, தெய்வமே! என் பெண்சாதியான தமயந்தியைக் காடுகளிலே கஷ்டப் படாத படிக்குத் தன் தாய் தகப்பன்

பிரிய வசனங்கள் சொல்லி அழைத்து வந்து, தங்கள் அம்மாள் அண்டையிலே விட்டார்கள்.

சுபாகு மகா ராஜாவின் தாயார் கோகிலா தேவி தமயந்தியைப் பார்த்து, உளுக்கார வைத்துக் கொண்டு, நல்ல வசனங்களினாலே, "ஓ, அம்மா! உன்னுடைய லக்ஷணங்களைப் பார்த்தால் நவ கண்டங்களும் ஆளப் பட்ட ராஜாவினுடைய பட்டத்துத் தேவி போலே இருக்கிறது. நீ இப்படி வாடி இருக்கக் காரணம் என்ன? சொல்லு, அம்மா!" என்று கேட்டதற்கு சுபாகு மகா ராஜாவின் தாயைப் பார்த்துத் தமயந்தி தேவி சொல்லுகிறாள்:—

"ஓ, அம்மா! நான் சைரந்திரி[1] என்கிற தாதிப் பெண். என் புருஷர் வெகு கீர்த்தி பெற்ற கந்தர்வ[2] ராஜர். என்னைப் பிரியாமல் கூடி இருந்தார். அவர் இப்போது சோகம் என்கிற பெண்சாதியைக் கூடி இருக்கிற படியினாலே நான் வாடி இருக்கிறேன். நீ சொன்ன படிக்கு என் புருஷர் நவ கண்டமும் ஆளப் பட்ட சாமார்த்தியம் உள்ளவர்தான். நான் ராஜ ஸ்திரீ என்கிறது மெய்தான். தெய்வ வசனத்தினாலே இப்படி ஆனேன். சைரந்திரி சாதி தாதிகளிலே நான் வெகு சமர்த்தி என்று பேர் பெற்றிருப்பேன். பரிமள வஸ்துகள் என்னைப் போலே ஆரும் கூட்ட மாட்டார்கள். நான் நவரத்தினங்களை விநோதமாகக் கோர்த்தால் சகலரும் மெச்சி எனக்கு வெகுமானங் கொடுப்பார்கள். கண்ணுக்கு மை தீட்டினால் எல்லாரும் சந்தோஷப் படுவார்கள். பெண்ணை மன்மதனுக்கு மெச்சச் சிங்காரிப்பேன். அசல் வீடு போகேன். பல் காட்டி நகையேன். பல பல வார்த்தைகள் பேசேன். அம்மா, என்னை உங்கள் வீட்டிலே வைத்துக் கொள்ளுங்கள்," என்று சொன்னாள். இவைகளைச் சுபாகு மகா ராஜா தாயார் கேட்டுச் சொல்லுகிறாள்:

[1] S. = A menial servant.

[2] Gandharba = celestial chorister.

"ஓ, அம்மா! உனக்கு இச்சையானபடியே என் வீட்டிலே நீ இரு, என் பெண்களுக்குச் சரியாகப் பார்க்கிறேன், நீ எத்தனை காலம் இருந்தாலும், ஒரே சீராக நடப்பிக்கிறேன். ஸ்ரீ மகா லட்சுமி எங்கள் வீட்டிலே விளங்கி இருக்கிறப் போலே நீ வாசமாய் இருந்து எங்களுக் கெல்லாம் புத்திமதிகளைச் சொல் லிக் கொண்டு இரு, அம்மா," என்று சொன்ன உடனே தமயந்தியும் அப்படியே சுபாகு மகா ராஜா தாயார் அண்டையிலே மரியாதைகளுடனே ஒரு குறைவும் இல்லாமல், எந் நேரமும் தன் புருஷனைக் கொண்டு வந்து தன்னுடனே சேர்க்க வேண்டும் என்று சொல்லி, ஸ்ரீ மகா விஷ்ணுவையே தியானம் பண்ணிக் கொண்டிருந்தாள்.



### 33. §. NALA NEARLY BETRAYS HIMSELF.

அங்கே அயோத்தியிலே ரிதுபர்ன ராஜா அண்டையிலே சேவித்துக் கொண்டிருக்கிற நளச் சக்கிரவர்த்தி வாகுவன் என்கிற பெயருடனே நல்ல சுயம்பாகி என்று ரிதுபர்ன ராஜா கொண்டாடச் சமையல் அறுசுவைகள் உடனேயும் சமைத்துப் போட்டு, அந்த ராஜாவுக்கு மகா சந்தோஷம் வர நடந்து கொண்டு, தான் தண்ணீரும் சாதமும் சாப்பிட்டு, தாம்பூலமும் வர்ச்சித்து,[1] புஷ்கர ராஜா தன் ராச்சியத்தைப் பறித்துக் கொண்ட துக்கத்தையும் தன்னைச் சேவித்த பேரைத் தான் சேவிக்கிற துக்கத்தையும் நினைத்து, மனம் சோர்வு பட்டு இருக்கிற நாளையிலே, ஒரு நாள் ராத்திரிகாலத்திலே நிலவிலே சயனித்துக் கொண்டு, தன் பெண்சாதியை நினைத்து, தன்னிலே தானே தெய்வத்தை நொந்து சொல்லிக் கொள்ளுகிறான்:—

[1] Reject.

"ஐயையோ, தெய்வமே! என் பெண்சாதியான தமயந்தியைக் காடுகளிலே கஷ்டப் படாத படிக்குத் தன் தாய் தகப்பன்

வீட்டுக்குப் போகச் சொன்னேனே. அவள் அங்கே போகாமல் எங்கே போனுளோ? என்னமாய் இருக்கிறுளோ? நானும் என் சபல புத்தியினுலே அந்தக் காட்டிலே விட்டு வந்தேன்; நான் இனி என்ன செய்யப் போகிறேன்? அல்ல என்று கிலேசப்பட்டு உயிரை இழந்தாளோ? என்னைத் தேடவேண்டும் என்கிற ஆசையினுலே எங்கெங்கே தேடுகிறுளோ? அல்லது மஹா குரூரமான மிருகங்கள் கையிலே அகப்பட்டுக் கொண்டாளோ? ஆ! தெய்வமே! மஹா பொல்லாதவனுமாய்த் துரோகியுமாய் நிர்ப்பாக்கியனுமாய் அக்கிரமனுமாய் இருக்கிற என்னை இவள் ஏன் கோறினுள்? ஐயையோ, தெய்வமே! நான் பண்ணிக் கொண்ட அபராதத்துக்கு இப்படிப் பட்ட அலைச்சல் வராமற் போமோ?" என்று அனேக விதமாகச் சொல்லி, அழுது கொண்டிருக்கிறதை ரிதுபர்ன மகா ராஜா மறைந்திருந்து கேட்டு, நள மகா ராஜாவைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறுன்:—

"ஓ, வாகுகனே! ஏன் பிரீதி உள்ள பெண்சாதியைக் காட்டிலே விட்டு வந்தாய்? இன்று தான் நினைத்தாயோ? இந்தக் காலத்திலே எப்படிப் பட்டவர்களும் ஸ்திரீகளை வேடிக்கையாக வைத்திருக்கிறுர்கள்; உனக்குக் குறை என்ன? இந்த லோகத்தில் அவரவருக்குத் தக்கின ஸ்திரீகளும் உண்டாய் இருப்பார்கள், நீ நினைத்துக் கொண்டு உள் உருகுகிற ஸ்திரீ உன்னிலும் அழகுள்ளவளாய் இருப்பாள் அல்லவா? அவள் உன்னை நினைத்து எத்தனை வேதனைப் படுகிறுளோ, தெரியாதே; அடி பெண்ணே, உன்னைக் காட்டிலே விட்டு வந்தேன் என்று பிரலாபித்தாயே. அந்தக் காட்டிலே விறகு ஒடிக்கப் போன இடத்திலே விட்டு வந்தாயோ? உன்னுடைய பிராண நாயகியைப் பிரிந்து மன்மத பாணத்தினுலே எத்தனை வேதனைப் படுகிறுயோ? பொறுக்க வசமா? ஏன் வாகுகா?" என்று பரிகாசமாகச் சொன்ன ரிதுபர்ன மகா ராஜாவைப் பார்த்து, நள மகா ராஜா

சொல்லுகிறான்: "ஐயா, ராஜேந்திரா! பொழுது போகாமல் இந்தப் பூமியிலே இருக்கிற ராஜாக்களிலே ஒரு ராஜா கதை உண்டு, அந்தக் கதையை நினைத்துக் கொண்டேன் அல்லாமல் எனக்குப் பெண்சாதி ஏது? என் ரூபத்தைப் பார்த்தால் எனக்கே வெட்கமாய் இருக்கிறது. இப்படிப்பட்ட என்னை எவள் ஆகிலும் மனம் ஒருமித்துச் சேருவாளோ? என்னைப் பார்த்து அவள் நகையாளா? அல்ல என்று அவள் என்னைச் சேர்ந்தாலும் இந்த லோகத்திலே இப்படிப் பட்ட புருஷனை இவள் சேர்ந் தாள் என்று சகலமான பேர்களும் அவளை நிந்தியார்களா? ஓய், மகா ராஜரே! நீர் ஏன் என்னைப் பரிகாசம் பண்ணுகி றீர்? ஐயா," என்று அந்த வாகுகன் சொன்னதைக் கேட்டு, ராஜா, "மெய்தான், நமக்கேன் இந்தக் காரியம்?" என்று நினைத்து அப்புறம் போனான். பிற்பாடு நள மகா ராஜா மிகவும் வெட் கப் பட்டு இருந்தான்.

இப்பால் அங்கே வீம ராஜா தன் மகளும் மருமகனும் நாட் டை விட்டுக் காட்டிலே போனார்கள், என்று செய்தி கேட்டு, துக்க சமுத்திரத்திலே முழுகி, "ஐயையோ, அவர்கள் காட் டிலே போன இடத்திலே எங்கே அலைகிறார்களோ? என்ன பாடு படுகிறார்களோ? ஹரிஹரி நாராயணா! பிள்ளைகள் ஒரு இடமும் தாங்கள் ஒரு இடமுமாய்த் திக்கில்லாதவர்கள் போ லே அவமானத்துக்குப் பயப்பட்டு, இப்படி அலையல் ஆச்சுதே, தெய்வமே! நான் என்ன செய்வேன்? இனிமேல் அவர்களை எங்கே தேடுவிக்கப் போகிறேன்? எப்போது என் துக்கம் தீரப்போகிறது?" என்று விசாரப் பட்டு, இனிமேல் நாம் சும் மா இருக்கல் ஆகாது என்று நினைத்து, நல்ல சாஸ்திர விதி களை அறிந்த பிராமணர்களை அழைப்பித்து, அவர்களை நமஸ் காரம் பண்ணிப் பூசைகள் செய்து, அனேக திரவியங்கள் கொடுத்து, தன் மகளையும் மருமகனையும் இருக்கிற இடந் தேடி

அழைத்து வரச் சொல்லி, நாலு திக்குகளிலும் அனுப்பிவைத்தான். அவர்களும் நல்லது என்று புறப் பட்டு, காடுகள், மேடுகள், மலைகள், குன்றுகள், பட்டணங்கள், களக் கிராமங்கள், குக்கிராமங்கள் எல்லாம் தேடிக் காணுமல், முனீஸ்பரர்களுடைய ஆசிரமங்களிலும் தேடிக் காணுமல், எங்கும் திரிந்து வேசாறி வந்து விதர்ப்பபுரம் சேர்ந்தார்கள்.

---

### 34. §. DAMAYANTI FOUND.

அதிலே வீம ராஜா புரோகிதனுடைய குமாரன் கிஷ்ண வர்ணன்[1] என்கிற பிராமணோத்தமன், சகல வித சாஸ்திர சம்பன்னன், சோதிடத்திலே நிபுணனாய் இருக்கப் பட்டவன்.[2] அந்தப் பிராமணனை அழைத்து, "நீர் போய்த் தேடி வாரும்," என்று சொல்லி அனுப்ப, அவன் ஒரு ஏழைப் பிராமணனைப் போலே வேஷம் போட்டுக் கொண்டு, சுபாகு மகா ராஜா பட்டணம் போய்ச் சேர்ந்து, சோசியத்திலே[3] இவனைப் போலே இனி ஆரும் இல்லை, என்று சொல்லத் தக்கதாக நித்தியமும் பஞ்சாங்கமும் சோசியமும் சகலமான பெயரும் மெச்சச் சொல்லிக் கொண்டு, பிரகஸ் பதி[4] பகவான் வந்து அவதரித்தாற் போலே பிராமணருடனே கூடி அந்தப் பட்டணத்திலே வாசமாய், சுபாகு மகா ராஜாவினுடைய வாசற் காரரை உறவு பண்ணிக் கொண்டு, உபாயமாய் அரண்மனைக்குப் போக வரப் பஞ்சாங்கமும் சாஸ் திரங்களும் சொல்லி, இப்படியாக இருக்கவே, ஒரு நாள் சுபாகு மகா ராஜா தன் தகப்பன் திதி வந்தது; அந்தத் திதிக்கு அந்தக் கிஷ்ணவர்ணன் என்கிற பிராமணனை அழைக்க, அவன் அந்த ராஜாவினுடைய அரண்மனையில் உள்வாசலிலே போய் இருக்கிற போது அங்கே சித்திரப் பதுமையைப் போலே நடமாடுகிற

[1] = Mr. Black.

[2] There is an ellipsis of *"There was a man who was."*

[3] Astrology.

[4] Jupiter.

தமயந்தியைக் கண்டு வெகு துயரப் பட்டு பார்த்து, "ஐயோ! ஐயையோ! தெய்வமே! சகல லக்ஷணங்களும் உள்ளவள், தாமரைப் புஷ்பத்தில் வீற்றிருக்கிற மஹா லக்ஷ்மி போன்றவள், தன் புருஷனை ஒரு நிமிஷம் ஆகிலும் பிரியாதவள், நவ கண்டங் களும் ஆளுகிற நளச் சக்கிரவர்த்தியுடைய பட்டத் தேவி, அனேகம் ஸ்திரீகள் சூழ்ந்திருக்கப் பட்டவள், மஹா பாக்கிய வதி, அப்படிப் பட்டவள் இப்போது தன் புருஷனைப் பிரிந்து ஒண்டியாய், அறுதியைப் போலே தலை மயிர்கள் சடைபற்றி இருக்க, உடம்பெல்லாம் புழுதி அடைந்து சரீரம் இளைத்து, போர்வைக்குப் புடவையும் எட்டாமல் உருமாறி இருக்க என் கண்ணிலே பார்க்கல் ஆச்சுதே!" என்று வெகுவாகப் பரி தாபப் படுகிற பிராமணனைத் தமயந்தி தேவி கிட்ட வந்து பார்த் து, தன் தகப்பனார் வீட்டுப் புரோகிதனுடைய குமாரன் என்று அறிந்து, தன் தகப்பனைக் கண்டாற் போலே சந்தோஷத்துட னே கண்டு, தெண்டனிட்டு, "ஐயா! நான் பிறந்து வளர்ந்த அரு மையை நீங்கள் அறிவீர்களே! இதோ தெய்வம் இப்படி என்னைப் பண்ணிப் போட்டது, நான் என்ன செய்வேன்? சுவாமி!" என்று சொல்லித் தமயந்தி அவர் முன்னே நின்று கண்ணீர் ஆறாய்ப் பெருகக் கிலேசப்பட்டாள். இந்தச் சத் தம் சுபாகு மகா ராஜா தாயார் கேட்டுத் தானும் தோழிமாரும் கூடி, தமயந்தி தேவி அண்டைக்கு வந்து, "இது என்ன?" என்று வெகு ஆச்சரியத்துடனே பார்க்க, அந்தப் பிராமணன் தமயந்தி யைத் தேற்றி, அவளுடனே ஒரு வசனம் சொல்லுகிறான்:—

"ஓ, அம்மா! நீ இப்படி மாறு வேஷம் ஆனதென்ன? இந்தப் பூமியிலே நவ கண்டங்களும் ஆளப்பட்ட நள மகா ராஜர் உன் னை விட்டு எங்கே போனார்? நான் கூட உன் அடையாளம் தெரிந்து கொள்ளாமற் போனேன், உன் செல்வம் எங்கே போச்சுது? பிர்ம்மா உன் தலையிலே இப்படி எழுதினானோ? உன் புருஷன் ஆன நள மகா ராஜா புஷ்கர ராஜாவினுடைய

சூதினாலே தன் ராச்சியம் எல்லாம் தோற்று அலைந்து, நீயும் அவரும் காட்டுக்குப் போனீர்கள் என்று செய்தி கேட்ட உடனே உங்கள் தகப்பனார், தாயார், தமையன், உன் பிள்ளைகள், பந்துக்கள் எல்லாரும் வெகு கிலேசப்பட்டு, எங்கெங்கும் தேடி அனுத்து, இங்கே பார்க்க வந்த இடத்திலே உன்னைக் கண்டேன். இனி உன் பட்டணத்துக்கு வா! அம்மா!" என்று தன் புரோகித குமாரன் அழைக்க, அந்த வார்த்தையைக் கேட்டுத் தமயந்தி சற்றே விசாரம் தீர்ந்து சொல்லுகிறாள்:—

"ஐயா, எங்கள் பேரிலே என்ன தப்பு? சூதினாலே புஷ்கர ராஜாவுக்கு ராச்சியம் எல்லாம் தோற்றுச் சகல பாக்கியங்களையும் போக்கடித்துக் கொண்டு அனாதர்களாகி வந்து நான் மாத்திரம் என் தாயாரைச் சேர்ந்திருக்கிறேன், என் புருஷர் எங்கே போனாரோ! நான் அறியேன், சுவாமி? என்று தமயந்தி தன் புரோகிதருடைய குமாரருடனே சொல்லவே, சுபாகு ராஜா தாயார் கேட்டுத் தமயந்தியைக் கட்டிக் கொண்டு, அடி மகளே! பெண்கள் நாயகமே! உன் தாயாரும் நானும் கூடப் பிறந்தவர்கள். நீ என்னை அறியாயோ? அம்மா! எனக்கு நீ மாறுபாடாகச் சொன்ன படியினாலேயும், வேஷம் மாறி இருந்த படியினாலேயும், எனக்குத் தெரியாமற் போச்சுதே! அம்மா! சௌபாக்கியவதியே! இத்தனை ஆபத்துகள் எல்லாம் நீ பட்டாயோ?" என்று வெகுவாகத் தாபந்திரியப் பட்டு, நல்ல வஸ்திராபரணங்கள் அழைப்பித்துப் புரோகித குமாரனுக்கு முன்னே கொடுத்து, சோடச உபசாரத்துடனே அந்தப் புரோகிதனைப் பூசை பண்ணி, வேறே தமயந்தி தேவிக்கு ஆன பூஷணங்களும் நல்ல வஸ்திரங்களும் கெந்த கஸ்தூரி பரிமளாதிகள் எல்லாம் கொண்டு வரச் சொல்லி, அந்தப் பிராமணன் கையிலே கொடுத்து, தமயந்தி தேவிக்கு ஆசீர்வாதம் பண்ணிக் கொடுக்கச் சொல்லி, சுபாகு மகா ராஜா தாயார் சொன்னாள்; அப்படித் தானே அதை வாங்கி தமயந்தி தேவிக்கு அந்தப் பிராமணன்

கொடுத்த போது, அவள் அதை வாங்கிக் கொண்டு தன் சிறிய தாயாருடனே சொல்லுகிறாள்:—

"அம்மா, பிராமணன் கொடுத்ததை வேண்டாம் என்று சொல்லப் போகாது. ஆனபடியினாலே, நான் வாங்கிக் கொண்டேன். அம்மா! நான் என் புருஷனைக் கண்ணாரக் கண்டு நான் சுகமாய் இருக்கிற நாளையிலே இப்படிக் கொத்த வஸ்திரங்கள், ஆபரணங்கள், கெந்த கஸ்தூரி, பரிமளாதிகள் எல்லாம் நான் யோக்கியமாகத் தரிப்பேன்; எனக்கு இப்போது இவைகள் அயோக்கியமான வஸ்துக்களாய் இருக்கின்றன; ஆகையால், நான் தரிக்கிறது இல்லை; மன்மதருக்குச் சரியான ரூபம் உள்ளவருமாய்ச் சகல தர்மங்களும் பரிபாலிக்கிறவருமாய் இருக்கிற என் புருஷர் வருகிற பரியந்தம் நான் தலைமயிர் முடியேன், மஞ்சள் குளியேன், சந்தனம் பூசேன், தாம்பூலம் தின்னேன், கட்டிலின் பேரில் படுக்கேன், பூஷணங்கள் தரியேன், வஸ்திரம் வேறே உடுக்கேன், ஒரு அழகும் செய்து கொள்ளேன்; அதேனென்றால் புருஷன் அருகே இல்லாத பெண்சாதிக்கு இந்தச் சம்பிரமங்கள் எல்லாம் என்னத்திற்கு? பாங்கிமார்கள் ஏன்? தாதிகள் ஏன்? கிளிகள் ஏன்? குளிக்கிறது, பூசுகிறது, சந்தோஷம், விளையாட்டு, நகைப்பு இவைகள் எல்லாம் என்னத்திற்கு? அம்மா!" என்று சொல்லிக் கிலேசப் படுகிற தமயந்தி தேவியைப் பார்த்து, சுபாகு மகா ராஜா தாயார் யோசனை பண்ணிக் கொண்டு, அன்றைய தினம் போக மற்றைநாள் தமயந்தி தேவியை மூடு பல்லக்கிலே ஏற்றி, அவளுடனே கூடச் சிறிது தாதிகளையும் சிறிது ராணுவங்களையும் கூட்டி, அவளுடைய தாய் தகப்பன் இருக்கிற விதர்ப்ப புரத்துக்கு அனுப்பி வைத்தாள்.



**35. §. DAMAYANTI'S RETURN TO HER FATHER'S HOUSE.**

புரோகிதரும் வெகு சந்தோஷத்துடனே தமயந்தி தேவியை விதர்ப்ப புரத்திற்கு அழைத்துக் கொண்டு போய், அரண்மனைக்

குள்ளே அனுப்பி வைத்து, கொலுவாய் இருக்கிற வீம ராஜாவுக்குச் செய்தி சொன்னார்கள். அது கேட்டு வீம ராஜாவும் வெகு சந்தோஷத்துடனே கொலுச் சாவடி விட்டு, அரண்மனைக்குள்ளே போனான். தமயந்தி தன் தகப்பனாரையும் தாயாரையும் சேவித்துப் பிள்ளைகளைக் கண்டு கண்ணீர் வடியத் துக்கப்படுகிறதைப் பார்த்து, தாயும் தகப்பனும், "பயப் படாதே! அம்மா!" என்று சொல்லித் தேற்ற, விசாரந் தீர்ந்து, தமயந்தி தான் பட்ட பாடுகள் எல்லாம் சொல்லத் தொடங்கினாள்:—

"ஓ, ஐயா! ஓ, அம்மா! கேளுங்கள், என்னுடைய புருஷன் விதி வசத்தினாலே புஷ்கர ராஜாவுடனே தப்புச் சூதாடி, ராச்சியம் எல்லாம் அந்த ராஜாவுக்குத் தோற்று, நாங்கள் கெட்டுப் போனோம். 'கெட்டவர்கள் தங்கள் இனத்தைச் சேரல் ஆகாது' என்கிற மானத்தினாலே குரூரமான காடுகளிலே நாங்கள் இருவரும் போகச்சே இரண்டு பொல்லாத பக்ஷிகள் வந்து ராஜாவினுடைய வஸ்திரத்தை அபகரித்துக் கொண்டு போயின. அதின் பிறகு மிகவும் விசாரப் பட்டுக் கொண்டு சகலத்திலேயும் ஏழைமதி[1] ஆகினோம் என்று, இருவரும் ஒரு புடவையைக் கட்டிக் கொண்டு சுவாமியை நோக்கு, சோகம் என்கிற கடலிலே மூழ்கி, எங்கேயாவது ஒரு பட்டணத்திலே போக வெட்கப் பட்டு, மலைக் குகைகளிலே வாசம் பண்ணுவோம் என்று போகச்சே, அங்கே ஒரு வழி பிரிந்து போகிறதைக் கண்டு, என் புருஷர் என்னைப் பார்த்து, 'நீ இந்த வழியே போனால் உன் தாய் வீட்டுக்குப் போய்ச் சேரலாம், நீ என்னுடனே காட்டிலே வாசம் பண்ண மாட்டாய், கந்த மூல பலாதிகளைப் பொசித்து, நிர்வாகம் பண்ணவும் மாட்டாய், புலி, கரடி, சிங்கம் முதலான பயங்கரமான மிருகங்கள் மிஞ்சி இருக்கப் பட்ட இந்தக் காடுகளிலே நீ பயப்படாமல் நின்று சஞ்சரிக்கவும் மாட்டாய், என் பேச்சைத் தள்ளாமல் உன் தாய் தகப்பன்மார் அண்டையிலே போய்ச் சேர்ந்து, பிள்ளை

[1] A wretched condition.

களும் நீயும் சுகமாய் இருங்கள், போ,' என்றார். நான் அவரை விட்டுப் பிரியாமல் அவர் பின்னே தானே காடுகளிலே நடந்து, ஒரு மரத்து நிழலிலே சோர்ந்து, ஆயாசத்தினாலே நான் சரீரம் தெரியாமல் நித்திரை போனேன். அந்த வேளையிலே ராஜா, 'இவள் எத்தனையாகச் சொன்னாலும் நம்மை விட்டுப் பிரிந்து தன் தாய் வீட்டுக்குப் போகாள்; ஆகையினாலே, இவளை இங்கே விட்டுப் பிரிந்து போனோம் ஆனால், தானே போய்ச் சேருவாள்,' என்று நினைத்து, என் பரிதாபத்தைப் பார்க்க மாட்டாமல், என் புடவையிலே ஒரு துண்டு கிழித்துக் கொண்டு, அந்தக் காட்டிலே என்னை விட்டுப் பிரிந்து போய் விட்டார். பிற்பாடு நான் விழித்துக் கொண்டு பார்க்கிற போது என் பிராண நாயகனைக் காணாதபடியினாலே அவ்விடம் எல்லாந் தேடித் தேடி, இனி இல்லாத அவஸ்தைகளும் பட்டுக் கொண்டு அலைந்து, காட்டிலே திரிகிற போது, அவ்விடத்திலே ரிஷிகளைக் கண்டு அவர்களைச் சரணம் அடைந்து, என் மனதிலே இருக்கிற துயரங்களை எல்லாம் அவர்களோடே சொல்லி, துக்கித்து நின்றேன். அதற்கு அவர்கள் எனக்கு அபயாஸ்தங் கொடுத்து, 'நீ பயப்பட வேண்டாம்; அம்மா! உனக்கு ஒன்றுங் குறைவு வராது' என்று, ஞானதிருஷ்டியினாலே பார்த்து, 'சனீஸ்பரர் மாய்கையினாலே இப்படிக்கு அவஸ்தை வந்தது, இனிமேல் சிறிது நாளையிலே அவருக்கே தயவு வரப் போகிறது, நீயும் உன் புருஷனும் உன் பிள்ளைகளும் கூடிச் சுகம் அனுபவிக்கப் போகிறீர்கள்,' என்று சொல்லி, 'இனிமேல் ஒண்டியாய்க் காட்டிலே திரிய வேண்டாம், சுபாகு மகா ராஜா பட்டணம் போய்ச் சேர்', என்று சிறிது தூரம் என்னை இட்டுக் கொண்டு வந்து, பாதை வழியைக் காண்பித்துப் போகச் சொன்னார்கள். அந்த மார்க்கமே புறப்பட்டு, சுபாகு மகா ராஜா பட்டணம் சேர்ந்து, அங்கே என் சிறிய தாயாரிடத்திலே இருந்தேன், அம்மா," என்று தமயந்தி தேவி சொன்னாள். அதைக் கேட்டு அவளு

டைய தாயும் தகப்பனும் வாய் விட்டுப் புலம்பி, மகளைக் கட்டிக் கொண்டு, அதிக விசாரத்துடனே சொல்லுகிறார்கள்:—

"ஓ, அம்மா! நவ கண்டங்களும் ஆளுகிற நள மகா ராஜாவுக்குப் பட்டத் தேவியாய் இருந்தும் கடைசியிலே இந்த வேஷம் ஆனாயோ? மகளே! உன் தோழிமார் எல்லாரும் சுகமாய் இருக்கிறார்களே. உன் தலையில் பிர்ம்ம தேவன் இப்படி எழுதினானோ? உன்னுடைய ஆபத்துகளை எல்லாம் எங்கள் கண்ணினாலே பார்க்கல் ஆச்சுதே. உன்னை இப்படி வைத்துக் கொண்டு எப்படி நாங்கள் பார்க்கப் போகிறோம்? மகளே! நல்ல புண்ணியவான்களிடத்திலே நீ பிறவாமல் மஹா பாவிகள் ஆகிய எங்கள் இடத்திலே ஏன் பிறந்தாய்? மகளே!" என்று சொல்லி, பிறகு அந்தத் தமயந்தியைப் பார்த்து, அவள் தாயார் சொல்லுகிறாள்: "அம்மா! உன் பிள்ளைகள் இவ்விடம் வந்த நாள் முதற் கொண்டு உன் தகப்பனார் கொலுச் சாவடிக்குப் போகிற தில்லை. எந்நேரமும் பிள்ளைகளைப் பார்த்துக் கொண்டு, சோகத்திலே இருக்கிறார். உன் தமையன் அன்னம் ஆகாரம் இல்லாமல் மிகவும் இளைத்துப் போனார். பிள்ளை இல்லை என்று ஓரே துக்கமாக இருந்த எங்களுக்கு முனீஸ்பரர் பிள்ளை வரங் கொடுத்து, இப்படி அலையல் ஆச்சுதே, மகளே!" என்று கிலேசப் பட்டுக் கொண்டிருக்கவே, வீம ராஜா இவர்கள் துக்கத்தைத் தேற்றி ஆதரித்தான். தமயந்தி தேவி தன் பிள்ளைகளைப் பார்த்துப் பின்னும் துக்கிக்கிற போது, அவளை அவள் தமையன் ஆன தபனுபி வந்து கிலேசந் தீரத் தேற்றினான்.

36. §. MESSENGERS SENT TO SEEK NALA.

பிற்பாடு வீம ராஜா தன் மருமகன் ஆன நளச் சக்கிரவர்த்தியைத் தேட நினைத்து, பிராமணரை அழைப்பித்து, தமயந்தி அண்டைக்கு அனுப்பி வைத்தான். தமயந்தியும் அந்தப் பிரா

மணர்களுக்குத் தெண்டன் இட்டு, அவர்களுடனே சொல்லு கிறாள்: "ஓய், சுவாமிகளே! நீங்கள் சுளியாமல் என் பிராண நாயகனைத் தேட வேணும். அதேதென்றால், அவர் முன் போலே காந்தியுடனே இரார்; மாறு வேஷமாக எங்கே ஆவது ராஜாக்கள் வீடுகளிலே சமையல் பண்ணிக் கொண்டிருப்பார். அவரை நீங்கள் அடையாளம் பிடித்துக் காணுகிறது மெத்தப் பிரயாசமாக இருக்கும். ஒரு வேளை பட்டணங்களின் வீதித் திண்ணைகளிலே படுத்திருப்பார். நீங்கள் அங்கங்கே போய், ஒண்டியாய் இருக்கப் பார்த்து, அவர் அண்டையிலே நின்று, நீங்கள் சொல்ல வேண்டியது என்ன வென்றால், 'ஐயையோ, அந்த நள மகாராஜா தன் பெண்சாதியைக் காட்டிலே விட்டுப் பிரிந்து போனதும் அல்லாமல் அவள் கட்டி இருந்த புடவை யிலேயும் பாதி கிழித்துக் கொண்டு அனுதைப் போலே பண்ணிப் போய் விட்டான். அந்தப் பெண்ணுக்கு ஒரு நிந் தை வந்ததானுல் அது ஆரைச் சேரும்?' என்று இப்படி விகட மான வார்த்தைகளாகச் சொல்லுங்கள். அதன் பிற்பாடு அ தற்கு மனம் பொறுக்காமல் எதிர் வார்த்தை சொல்லுவார். அவரைக் குறிப்பாகப் பார்த்துக் கொண்டு, அந்தப் பட்டணத் தின் பெயரும் விசாரித்துக் கொண்டு, சீக்கிரமாக வாருங்கள்; அதன் பிற்பாடு நடக்க வேண்டிய காரியங்களைச் சொல்லு கிறேன். ஓய், சுவாமிகளே! என் பேரில் கிருபை பண்ணிப் போய்வாருங்கள்; வீம ராஜா வயிற்றிலே நான் பிறந்ததல்ல, உங்கள் வயிற்றிலே பிறந்த பாவனையாகப் பார்த்து, நீங்கள் நடப்பிக்க வேண்டியது. நான் அறியாதவள், நீங்கள் சகல சாஸ்திரமும் அறிவீர்கள். உங்களுக்கு நான் சொல்லத் தக்கி னது ஒன்றும் இல்லை. உங்களுக்கும் எங்களுக்கும் பேதம் இல்லாமல் இருக்கிற படியினாலே நான் மனம் விட்டுச் சொன் னேன். இந்த வார்த்தைகளை உங்கள் மனதிலே வைத்துக் கொண்டு, நீங்கள் போய் வர வேணும், ஐயா," என்று தமயந்தி

தேவி வெகு உபசாரத்துடனே அந்தப் பிராமணர்களுக்குச் சொல்லி அனுப்பினாள். அந்தப் படியே அந்தப் பிராமணர்களும் அவ்விடம் விட்டுப் புறப்பட்டுச் சகல தேசங்களிலும் தேடப் போனார்கள். அதிலே ஒரு பிராமணன் தமயந்தி தேவி சொற்படிக்குச் சிறிது பட்டணங்களிலே ராஜ சபையிலே போய், தமயந்தி சொன்னபடியே சொல்லிக் கொண்டு, கடைசியிலே அயோத்தியா புரி பட்டணம் சேர்ந்து, ரிதுபர்ன மகா ராஜா சபையிலே போய் நின்று சொல்லுகிறான்:—

"ஓய் ராஜேந்திரரே! நிஷதபுரத்தை ஆளுகிற நள மகா ராஜா செய்த அக்கிரமத்தை நீர் கேளும்! அதென்ன வென்றால், தம்முடைய பெண்சாதி ஆகிய தமயந்தி தேவி ஆரண்ணியத்திலே நித்திரை போகிற வேளையில் அவள் அறியாமல் அவள் கட்டி இருந்த புடவையில் நாலு முழங் கிழித்துக் கொண்டு, அவ்விடத்திலே தனியே விட்டுப் பிரிந்து, எங்கேயோ போய் விட்டார். அந்தப் பதிவிரதாசிரோமணி ஆனவள் நித்திரை தெளிந்து கண்ணைத் திறந்து பார்க்கிற போது, அண்டையிலே இருந்த தன் புருஷனைக் காணமல், காடுகள் செடிகள் எல்லாம் திரிந்து தேடித் தேடித் திகைத்து எங்கும் காணமல், தெய்வாதீனமாய் ஒரு நிந்தையும் வாராமல் தப்பி, தன் தாய் வீடு போய்ச் சேர்ந்து, அன்று கட்டின புடவையும் விரித்த கூந்தலுமாய், தாம்பூலமும் வர்ச்சித்து அழுக்கடைந்த சரீரத்துடனே கிலேசப் பட்டுக் கொண்டு இருக்கிறாள். அப்படிக் கொத்த மஹா பதிவிரதாசிரோமணியை மனந் துணிந்து ஆரண்ணியத்திலே அநியாயமாய் ஒண்டியாக விட்டுப் பிரிந்து போனதும் அல்லாமல், அவள் கட்டி இருந்த புடவையிலேயும் பாதி கிழித்துக் கொண்டு போகலாமா? ராச்சியத்திலே இப்படிக் கொத்த அநீத நீதியும் உண்டா? பெண்ணைப் பெற்று ஒருவனைத் தேடிக் கொடுக்கிறவர்கள் இப்படிப் பட்ட புருஷனைத் தான் தேடிக் கொடுக்கலாமா? பார்த்தீரோ? ராஜேந்

திரரே!" என்று கர்ணகடோரமான வார்த்தைகளைச் சொல்லி, பின்னையும் அந்தப் பிராமணன் சில வசனங்கள் சொல்லுகிறான்:—

"ஓய் ரிதுபர்ன மகா ராஜரே! அந்த நள மகா ராஜர் தர்ம்ம சொரூபர், சகல தருமங்களும் நீதிகளும் அறிந்த மகா புருஷர், அவரே இப்படிச் செய்தால் இது மெத்த லோக அபவாதம் அல்லவோ? அதற்கு ஆகிலும் பயப் படாமல் தன் பெண்சாதி யை ஒண்டியாக விட்டுப் பிரிந்து போனார். இதுவும் அல்லாம லும் அந்தப் பெண்ணினுடைய தாய் தகப்பனும் மருமகனைக் காணவேணும் என்று சில பிராமணர்களைக் கொண்டு இந்தப் பூச்சக்கிரம் எல்லாம் தேடு வித்தார்கள். அவர்கள் படுகிற துக்கம் என்னாலே சொல்லி முடியாது. இப்படிப் பெண்சாதி யைப் பரதவிக்க விட்டு, எப்படி மனம் பொறுத்திருக்கிறாரோ? புலி பசித்தால் புல்லைத் தின்னுமா? ஓய், மகா ராஜரே!" என்று அந்தப் பிராமணன் நிஷ்டூரமாகச் சொன்னதிற்கு ரிதுபர்ன மகா ராஜன் அந்தப் பிராமணனைக் கும்பிட்டு ஒரு வார்த்தை சொல்லுகிறான்:—

"ஓய், ஐயரே! நள மகா ராஜர் என்ன? சாமான்னியமானவ ரோ? இந்த லோகம் எங்கும் ஏக சக்கிராதிபதியாய் ஆண்ட மகா ராஜர் ஆச்சுதே. அப்படிப் பட்டவரை ஊழ்வினைப் பயன் வந்து பிடித்தால் அவர் எங்கே போனாரோ? நீங்கள் அவரை இப்படி நிந்திக்கலாமா? முன் செய்த வினை ஆரை விட்டது? எப்படிப் பட்டவர்களாலும் தெய்வ எத்தனத்தைத் தப்பித்துக் கொள்ளக் கூடாது. நள மகா ராஜர் செய்த தர்மத்தினாலே அவர் பெண்சாதிக்கு ஒரு நிந்தையும் வாராமல் தன் தாய் வீட் டிலே போய்ச் சேர்ந்தாளே. அதுவே அவருக்கு மஹா பாக் கியம் ஆச்சுது. அந்த நள மகா ராஜர் எந்தத் தேசத்திலே போய் இருக்கிறாரோ? நீங்கள் சீக்கிரமாகப் போய், அவரைத் தேடிக் கண்டு பிடியுங்கள்," என்று அந்தப் பிராமணருக்கு ரிதுபர்ன மகா ராஜா சொல்லி அனுப்பி விட்டான்.

### 37. §. THE BRÂHMAN DETECTS NALA.

அப்போது அருகே இருந்த நள மகா ராஜா இந்த வார்த்தைகளை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்து, வெளியே புறப்பட்டுப் போகிற பிராமணனை மறித்து நிறுத்தி, அவனுடனே ஒரு வசனஞ் சொல்லுகிறான்: "ஓய், பிராமணரே! நள மகா ராஜா வெகு அவஸ்தையிலே அகப் பட்டுக் கொண்டு தன் பெண்சாதி தன்னுடனே கூடக் காட்டிலே கஷ்டப் படாத படிக்கு அவளுடைய தாய் வீடு போய்ச் சேர்ந்து சுகப் படுவாள் என்கிற யோசனையினாலே காட்டிலே விட்டுப் பிரிந்து போனதினாலே குற்றம் அவன் பேரில் என்ன? பெண்சாதி ஆனவள் புருஷனைச் சபைகளிலே இப்படித் தூஷிப்பிக்கத் தகுமா?" என்று சொல்லிக் கிலேசப் பட்டுக் கொண்டு, அப்பாலே போய் விட்டான். அப்போது பிராமணனும் தமயந்தி தேவி சொன்ன வார்த்தையை நினைத்துக் கொண்டு, நள மகா ராஜாவினுடைய விகுர்த ரூபத்தையுங் கண்டு சந்தேகப் பட்டு, வெகு வேகமாய் விதர்ப்ப புரிக்கு வந்து, வீம ராஜாவைக் கண்டு, ஆசீர்வாதம் பண்ணி, தான் நளச் சக்கிர வர்த்தியை எங்கும் தேடிக் காணாமல் ரிதுபர்ன மகா ராஜா பட்டணத்திலே தேடப் போன இடத்தில் நடந்த சங்கதிகளைச் சொல்லக் கேட்டு, ராஜா அந்தப் பிராமணனைத் தன் குமாரத்தி இருக்கிற இடத்துக்கு அழைத்துக் கொண்டு போய் விட, தமயந்தியும் அந்தப் பிராமணனுக்கு நமஸ்காரம் பண்ணி, "நீர் போன இடத்திலே புதுமை ஆகிய வார்த்தைகள் ஏதாகிலும் உண்டானால் தெரியச் சொல்லும்," என்று தமயந்தி தேவி கேட்கும் அளவில் அந்தப் பிராமணன் சொல்லுகிறான்:—

"ஓ, அம்மா! தமயந்தி தேவியே! நான் அநேகம் ராச்சியங்கள் எல்லாம் போய்ச் சபைகளிலே நீ சொன்ன படியே சொல்

விப் பார்த்தால் ஆரும் மறு உத்தரவு சொன்னவர்கள் இல்லை. பின்னையும் காடுகளிலே வான்மீகர்,[1] தமனகர், அகஸ்தியர், கண்ணுவர், விஸ்வாமித்திரர், வசிஷ்டர், ஜமதக்கினி, கௌதமர், முதலான முனீஸ்பரர்களுடைய ஆச்சிரமங்களிலேயும் போய்த் தேடிக் காணமல், அங்கே வாசமாய் இருக்கிற ரிஷிகளை எல்லாங் கேட்டால் 'நள மகா ராஜா இங்கே வர இல்லை' என்று சொன்னர்கள். அதின் பிறகு சத்த நதிக் கரையிலேயும் போய்த் தேடிக் காணமல் கடைசியிலே அயோத்தியா புரிக்குப் போய், அங்கே ரிதுபர்ன மகா ராஜாவைக் கண்டு, அவர் சபையிலே நீ சொன்ன வார்த்தைகளை எல்லாம் சொல்லித் திரும்பி வருகிற போது பின்னேடே ஒருவன் கூனன் போலே வளைவு சரீரமும் கறுத்த மேனியுமாய் வெகு கோபத்துடனே வந்து, என்னை மறித்துக் கொண்டு, என் முகத்தைப்பார்த்து, 'ஓய், ஐயரே! காட்டிலே அந்தப் பெண் வாதைப் பட மாட்டாள் என்றும், தன் தாய் வீடு போய்ச் சேர்ந்தால் சுகமாய் இருப்பாள் என்றும் அந்த நள மகா ராஜா எண்ணி விட்டுப் பிரிந்து போனல் பெண்சாதியானவள் ராஜ சபையிலே இப்படித் தன் புருஷனை அவமானமாகப் பேசுவிக்கிறது நல்லதா?' என்று சொல்லிப் பின் வாங்கிப் போனன். இது சமாசாரம்," என்று அந்தப் பிராமணன் சொன்ன உடனே, தமயந்தி தேவி சந்தோஷப் பட்டு, அவள் "தன் புருஷனே," என்று நிச்சயம் பண்ணிக் கொண்டு, தன் தகப்பனருடனே சொல்லுகிறள்:—

[1] These are all celebrated ascetics.

"ஓய், ஐயா! என் புருஷனைத் தேடப் பிராமணரை அனுப்பி வைத்த போது அவர்களுடனே நான் சொன்னது, 'நீங்கள் போய் ராஜ சபைகளிலே நள மகா ராஜாவைத் தூஷணமாக நிந்தித்துச் சொல்லுங்கள். அதற்குப் பிரதி உத்தரம் ஆர் சொல்லுகிறர்களோ அவர்களை நன்றுகப் பார்த்துக் கொண்டு, அந்தப் பட்டணத்தின் பேரையும் அந்த ராஜா பேரையும் கேட்

டுக் கொண்டு வாருங்கள்,' என்று சொல்லி அனுப்பினேன். இப்படியே அவர்களில் இவர் மாத்திரம் அயோத்தியா புரிக்குப் போய்ச் சேர்ந்து, ரிதுபர்ண மகா ராஜா சபையிலே சொன்ன போது அதற்குப் பிரதி உத்தரம் சொன்ன புருஷரே நள மகா ராஜர் ஆக வேணும்; அவர் அல்லாமல் பின்னை ஒருவர் ஆனால் இந்த வார்த்தைகளைச் சொல்லார். ஆனபடியினாலே நாம் இப்போது செய்ய வேண்டிய தென்ன வென்றால், நான் சொல்லுகிறேன், ஐயா! நம்முடைய புரோகிதனையும் பின்னையும் தெரிந்தவர்கள் சிலரையும் அழைப்பித்து வேத சாஸ்திரங்களைப் பார்க்கச் சொன்னால் அவர்கள் பார்த்துச் சொல்லுவார்கள். அதைக் கேட்டு மனுஷரை அனுப்பி வைப்போம். பிராமணரை அழைப்பியும்! ஐயா!" என்று தகப்பனாருடனே தமயந்தி சொல்லத் தன் பெண் சொன்ன வார்த்தையை வீம ராஜா கேட்டு, மகா சந்தோஷப் பட்டு, அப்படியே சகல சாஸ்திரங்களும் அறிந்த பெரியோர்கள் ஆன பிராமணர்களை அழைப்பித்து, அவர்களைச் சாஸ்திரம் பார்க்கச் சொல்லி, வீம ராஜா உத்தரவு பண்ணினான். அந்தப் படிக்குப் பிராமணாள் சாஸ்திரங்களைப் பார்த்து, நவ கண்டங்களும் ஆளப் பட்ட நள மகா ராஜர் வருவார், நீங்கள் சிந்தனைப் படத் தேவை இல்லை; "ஓய், வீம ராஜரே! அனுப்பி வைக்கத் தக்க மனுஷரை நீர் அனுப்பி வையும். நல்ல வேளையாய் இருக்கிறது," என்று பிராமணாள் சொல்ல, "அப்படியே அந்தப் பிராமணர்களிலே ஒருவரைக் குறித்து, தன் பெண்ணை இந்தப் பிராமணர்களிலே நீ சொல்லத் தக்க விசேஷங்களை எல்லாம் சொல்லி அனுப்பி வை, அம்மா!" என்று வீம ராஜா தன் பெண்ணுடனே சொல்ல, அப்படியே தமயந்தியும் அந்தப் பிராமணாளுக்கு எல்லாம் தெண்டன் இட்டு, அவர்களுக்கு வேணும் என்ற திரவியங்களைக் கொண்டு, சோடச உபசாரங்களும் பண்ணி, தன் தகப்பனார் குறித்த பிராமணனை மாத்திரம் நிறுத்திக் குறைப் பிராமணர்களை எல்லாம்

அவரவர்கள் ஸ்தானங்களுக்கு அனுப்பி விட்டு, குறித்த பிராமணனுக்கும் வேண்டும் என்ற திரவியங்களைக் கொடுத்து, அந்தப் பிராமணனைக் கிட்ட அழைத்து வைத்துக் கொண்டு, தமயந்தி தேவி சொல்லுகிறாள்:—

"ஓய், சுவாமி! நீர் ரிதுபர்ன மகா ராஜர் அண்டைக்குப் போய், விதர்ப்ப தேசத்து வீம ராஜா தன் மாப்பிள்ளையான நள மகா ராஜாவை ஆள்களை அனுப்பி எங்கெங்குந் தேட விட்டு அவர்கள் எங்குந் தேடியும் காணாத படியினாலே வீம ராஜா தன் பெண்ணுக்கு இரண்டாவது சுயம்வரம் சாட்டுவித்தார் என்று சொல்லும். அது முகாந்தரமாய் ரிதுபர்ன மகா ராஜர் இங்கே வருவார், அவர் பிறகே என் புருஷரும் வருவார்; அப்போது பிள்ளைகளை அவர் அண்டைக்கு அனுப்பி வைத்து, அப்போது நடக்கிற சாடையை அறிந்து, அதன் பேரிலே யோசனை பண்ணிக்கொள்ளலாம்," என்று தமயந்தி தேவி அந்தப் பிராமணனுக்குச் சொன்ன உடனே வீம ராஜா தன் பெண் சொன்ன வார்த்தைக்கு மெத்தச் சந்தோஷப் பட்டு, "இதுவே நல்ல யோசனை" என்று சம்மதித்து, அந்தப் பிராமணனை அழைத்து, "சகல யோசனைகளுக்கும் வாசாலகத்துக்கும் சபைக்கும் யோக்கியத்துக்கும் நீரே, மற்றொருவர் இல்லை; ஆனபடியினாலே, நீரே போகவேண்டும்," என்று வீம ராஜா சொன்ன உடனே அந்தப் பிராமணன் "மஹா பாக்கியம், அப்படியே நானே போய் வருகிறேன்" என்று அந்த வீம ராஜா இடத்திலே விடை பெற்றுக்கொண்டு, பிரயாணமாய்ப் புறப் பட்டுப் போய், அயோத்தி பட்டணம் சேர்ந்தான்.



**38.** §. THE BRAHMAN GOES TO OUDE TO PROCLAIM *Damayanti's* SECOND MARRIAGE.

அந்தப் பிராமணன் ரிதுபர்ன மகா ராஜனைக் கண்டு, அவராலே ஆதரணை செய்யப் பட்டு, அவர் சபையிலே இருந்து சமஸ்தமான பேருங் கேட்க ஒரு வார்த்தை சொல்லுகிறான்:—

"ஓய், ரிதுபர்ன மகா ராஜரே! கேளும், சகல ஜனங்களும் கேட்கச் சொல்லுகிறேன், நள மகா ராஜர் தன்னுடைய பூர்வ கர்ம வசத்தினாலே சூதாடி, தன்னுடைய ராச்சியங்கள் எல்லாம் புஷ்கர ராஜாவுக்குத் தோற்று, தன் கனக வஸ்து வாகனங்களும் தோற்று, திக்கில்லாதவன் போலே பெண்சாதியும் தானும் வனவாசமாய்ப் போய், அந்தப் பெண்சாதியை அநியாயமாகக் காட்டிலே விட்டு, எங்கே போனானோ தெரியாது. அந்தப் பெண்சாதி மஹா பதிவிரதாசிரோமணி ஆனபடியினாலே, காடுகள் எல்லாம் தன் புருஷனைத் தேடிக் காணாமல் பிரலாபித்துக் கொண்டு, தன் தாய் வீடு வந்து சேர்ந்தாள். ஓய், ராஜரே! காடுகள் எங்கும் தேடவே மிருக சாதிகள் எடுத்துப் பக்ஷித்துப் போடாமல், இந்தப் பெண்ணினுடைய பாக்கியவசத்தினாலேயோ தெரியாது, அந்தப் பெண் தப்பி உயிருடனே தன் தாய் வீடு வந்து சேர்ந்தாள். ஓய், ரிதுபர்ன மகா ராஜரே! கேளும், வீம ராஜரும் அவராலே ஆனமட்டும் இந்தப் பூமண்டலங்கள் எல்லாம் ஆள்களை விட்டுத் தேடுவித்து, காணாத படியினாலே வீம ராஜா மஹா விசாரப் பட்டு, 'என் மகள் என்ன குற்றம் பண்ணினாள் என்று நள மகா ராஜா காட்டிலே விட்டுப் பிரிந்து போனான்?' என்று மருமகனைத் தூறிக் கொண்டு, தன் பெண் தமயந்தி, 'வேண்டாம், வேண்டாம்' என்று தடுத்துச் சொல்லியும், வீம ராஜா கேளாமல், தன் மகளுக்கு இரண்டாவது சுயம்வரம் சாட்டுவித்தார். ஆனபடியினாலே என்னை உமது அண்டைக்குத் தூதனுப்பிவைத்தார். ஓய், மஹா ராஜரே! அந்தப் பெண் நள மகா ராஜாவுக்கு எவ்வளவும் விரோதமாக நடந்தவள்அல்ல, அநியாயமாகக் காட்டிலே அந்த நள மகா ராஜா தான் விட்டுப் போனான், எங்கள் ராஜர் தன் மகளைச் சிறையிலே வைத்து மூன்று வருஷமாகக் காத்திருப்பாரா? நள மகா ராஜர் செய்த காரியங்களுக்கு எங்கள் ராஜர் இரட்டிப்பாகச்

செய்தார், நீர் இந்தக்ஷணமே வரவேணும்,” என்று சொன்ன உடனே ரிதுபர்ன மகா ராஜா அந்த வார்த்தைகளைக் கேட்டு, 'ஆச்சரியமாக இருக்கிறது' என்று, வெகு சந்தோஷப் பட்டு, அவ்விடத்துக்குப் போகவேண்டும் என்று மனதிலே நினைத்தான்.

அப்போது அந்தப் பிராமணர் சொன்ன வார்த்தைகளைக் கேளாதது போலே நள மகா ராஜா அண்டையிலே இருந்து கேட்டுத் திடுக்கிட்டு, “ஓ, ஓ, இனிமேல் பெண்டுகளை எப்படி நம்பலாம்?” என்று வெகுவாகத் துக்கித்துக் கொண்டு இருக்கவே, அந்த ரிதுபர்ன மகா ராஜா மாறு வேஷமாய் இருக்கிற நள மகா ராஜாவைப் பார்த்துச் சொல்லுகிறான்:—

“ஓ, வாகுகா! நீ கேட்டாயோ, இன்று இந்தப் பிராமணன் தமயந்திக்குச் சுயம்வரம் மறுபடியும் அவள் தகப்பனார் சாட்டி வைத்தார் என்று சொன்ன செய்தியை? ஒரு வேளை அந்தப் பெண் நமக்கு அகப்படும் போலே காணுகிறது, அதனாலே நாம் வெகு சீக்கிரமாகப் போக வேணும், இவ்விடத்துக்கு அவ்விடம் அனேகந் தூரம் இருக்கிறது; அத்தனை தூரம் இருக்கிற படியால் நாம் சீக்கிரமாக எப்படிப் போகப் போகிறோம்? நான் உன்னையே நம்பினேன், நீ போய், சீக்கிரமாக நம்முடைய தேருக்குக் குதிரைகளைக் கட்டிக் கொண்டு வா, அவ்விடம் போனால் எப்படியும் அந்தப் பெண் நமக்கு அகப்படும்,” என்று சொல்லக் கேட்டு, அந்த நள மகா ராஜா முகம் கோணாமல், “ஓய், மஹா ராஜரே! நீர் இன்றையதினம் அந்தப் பட்டணம் போய்ச் சேருகிறதிற்குச் சம்சயப் படுவானேன்? நான் கொண்டு போய் விடுகிறேன்,” என்று சொல்லிக் குதிரை லாயத்துக்குப் போனான். அங்கே முன்னே நளச்சக்கிரவர்த்தியிடத்திற் சேவித்த பௌஷியன் என்கிறவன் இருந்து நள மகா ராஜாவைப் பார்த்துச் சொல்லுகிறான்:—

“ஓ, வாகுகா! நீ அறிவாயோ? வீம ராஜா அந்தப் பதிவிரதா சிரோமணிக்கு இரண்டாவது சுயம்வரம் சாட்டுவிக்கிற

தும், அந்த நள மகா ராஜா தேசம் விட்டுப் போனதும், அவ னைச் சேர்ந்தவர்கள் ராச்சியம் எல்லாம் தேடிக் காணுமல் பிறத்தி யாரைச் சேவிக்கிறதும், இப்படி எல்லாம் பிர்ம்ம தேவன் கற் பித்து இருக்கிற போது நாம் என்ன செய்யப் போகிறோம்? நம்முடைய கோறிக்கை என்றைக்கு ஈடேறப் போகிறது?" என்று சொல்லி, வெகுவாகப் பிரலாபப்படுகிற பௌஷியன் வார்த்தையை நள மகா ராஜா கேட்டு, தெரிந்து, தன் கண்ணி லே நீர் புரள, அதைத் துடைத்துக் கொண்டு, "நம்மைச் சேர்ந்திருந்தவர்கள் எல்லாம் அங்கங்கே சேர்ந்து கஷ்டப் படு கிறதும், நம்முடைய ராச்சியம் எல்லாம் புஷ்கர ராஜா ஆளு கிறதும், பெண்சாதி பிள்ளைகள் விட்டுப் பிரிந்து இப்படி விகுர்த ரூப்மாக கஷ்டப் படுகிறதும், அந்தத் தமயந்திக்கு இரண்டாவது சுயம்வரம் சாட்டுவித்தார்கள் என்கிற செய்தி நாம் கேட்கிறதும், வெகு நன்றுகவே இருக்கிறது; இப்படி எல்லாம் அனுப வித்தே தொலைக்க வேணும்," என்று சொல்லி, நள மகா ராஜா தைரியசாலி ஆனதால் துக்கத்தை விட்டுக் குதிரை லாயத்துக் குப் போய், அங்கே இருக்கிற உத்தம அஸ்வங்களிலே தன் மனதுக்குச் சரியான நாலு அஸ்வங்களைப் பொறுக்கி, அதற் குத் தக்க காணமும் புல்லும் போட்டு, தண்ணீர் காட்டி, தேற்றி, ஓட்டிக் கொண்டு வந்து, மகமேரு பர்வதம் போலே இருக்கிற நவரத்தின கசிதமான ரதத்திலே கட்டி, கொடி குடைகளைக் கட்டி, சகல ஆயுதங்களையும் நிரப்பி, சகல சிங்காரங்களும் பண்ணிக் கொண்டு வந்து, ராஜா முன்னே ரதத்தை நிறுத் தினுன். அதைப் பார்த்து, ரிதுபர்ன மகா ராஜா புன் சிரிப்புக் கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிறுன்:—

"ஓ, வாகுகா! மெத்த இளைத்து வீங்கலாய் இருக்கிற குதிரை களைத் தேருக்குக் கட்டினுய்; நல்ல குதிரைகள் லாயத்திலே இல்லையா? நாம் அந்தப் பெண்ணைக் குறித்துப் போகிறது உனக்கு மனதில்லையோ?" என்று கேட்டதிற்கு ரூபம் மாறி

இருக்கிற நள மகா ராஜா சொல்லுகிறான்:—“ஓய், மகா ராஜரே! இந்தக் குதிரைகள் எப்படி இருந்தாலும் என்ன? குணமே பிரதானம். எத்தனை தூரம் நடந்தாலும் தண்ணீர் வேண்டாது. ராத்திரியும் பகலும் வேசாறில்லாமல் வழி நடக்கும். அந்த வேடிக்கை இன்றைக்கு நீங்கள் பார்க்கப் போகிறீர்கள்,” என்று சொன்னதிற்கு அந்த ரிதுபர்ன மகா ராஜா சந்தோஷப் பட்டு, “நல்லது,” என்று சம்மதித்து, திவ்வியமாகிய வஸ்திராபரணங் களைச் சிங்காரித்துக் கொண்டு வந்து, பிராமணர் ஆசீர்வதிக்க நல்ல சுப முகுர்த்தத்திலே அந்த ராஜா ரதம் ஏறி, அதிக உச் சாகத்துடனே வாகுகனைக் குதிரைகளை ஓட்டச் சொல்லி செலவு கொடுத்தான்:—

கொடுக்கவே, உரு மாறி இருக்கிற நள மகா ராஜாவும் அந் தத் தேரிலே ஏறிக் குதிரைக் கயிறுகளை இடது கையிலே பிடித்து, வலது கையிலே சவுக்கை எடுத்து, குதிரைகளை அதட்டி, தேரை மனோ வேகமாக நடத்தினான். அப்படி அந்த ரதம் நடக்கிற போது அந்த ரத வேகத்தை ரிதுபர்ன மகா ராஜா பார்த்து, ஆச்சரியப் பட்டு, வாகுகனை மெச்சிக் கொண்டாடி னான். அப்போது பார்க்கிற பேர்கள், “சூரிய பகவானுடைய சாரதியான அருணன் எந்த விதமாகச் சூரியனுடைய ரதத்தை நடத்துவானோ அப்படிப் போலே இவன் நடத்துகிறான்,” என்று ஆச்சரியப் பட அந்தக் குதிரைகளுடைய மனது நன்றாய் அறிந் தவன் ஆனபடியினாலே அந்தக் குதிரைகளுக்கு ஆயாசம் வர ஒட்டாமல், அதி வேகமாய் மஹா உல்லாசத்துடனே குதிரை களை அதட்டித் தேரை நடத்தினான். அந்தத் தேரும் சூரி யன் ரதவேகத்திலும் அதிக வேகமாக நடந்து போகிற போது வழியிலே ரிதுபர்ன மகா ராஜாவுடைய உத்தரீயம் மேலே போட்டிருந்த படியினாலே அது ரத அதிர்ச்சியால் நழுவிக் கீழே விழுந்தது. அதை ராஜா திரும்பிப் பார்த்து வாகுகனை அழைத்து “ஓ, வாகுகா? நம்முடைய உத்தரீயம் நழுவி நிலத்தி

லே விழுந்தது, அதை எடுக்க வேணும், சற்றே தேரை நிறுத்து" என்றான். அது கேட்டு உரு மாறிய நள மகா ராஜா குஞ்சிரிப்புக் கொண்டு சொல்லுகிறான்:—

"இப்போது நீர் என்னை அழைத்துத் தேரை நிறுத்து என்று சொன்ன மாத்திரத்துக் குள்ளே உம்முடைய உத்தரீயம் விழுந்த இடத்துக்கு மூன்று யோசனை தூரம் கடந்து இப்புறம் உம்முடைய ரதம் வந்து விட்டதே. இனி எங்கே உத்தரீயம் எடுக்கிறது?" என்று வாகுகன் சொல்லி, அந்த ராஜாவுக்குச் சந்தோஷம் பிறப்பிக்கத் தக்கதாக விநோதமாகப் பேசிக் கொண்டு, அவனுக்கு ஒரு ஆயாசம் இல்லாமலும், குதிரைகளுக்கும் ஆயாசம் இல்லாமலும், தனக்குப் பசி தாகம் இளைப்பு இல்லாமலும், அந்த உரு மாறிய நள மகா ராஜா வெகு சாதுரியன் ஆனபடியினாலே ரிதுபர்ன மகா ராஜா தேரை ஓயாமல் நடத்திக் கொண்டு, சகல தேசங்களையும் தாண்டி விதர்ப்ப தேசத்துக்குச் சமீபத்திலே வந்தான்.



**39. §. THE APPEARANCE OF SANI TO NALA AND ITS CONSEQUENCES.**

வருகிற போது, ரிதுபர்ன மகா ராஜா அந்த ரதவேகத்தை நன்றாகப் பார்த்துக் கொண்டு வந்து, அதிக சந்தோஷப் பட்டுச் சொல்லுகிறான்: "ஓ வாகுகா! நீ மெத்தச் சமர்த்தன்; உன்னுடைய நேர்மையை இத்தனை நாளும் நான் அறியாமற் போனேன், இன்று தான் அறிந்தேன், குதிரைகளுடைய இருதயம் நன்றாக நீ அறிந்தவன், ஓ, ஓ, நீ மஹா கெட்டிக்காரன், இந்த அஸ்வ இருதயம் அறிகிற வித்தையை எனக்கு நீ தெரியச் சொல், நான் ஒரு திவ்வியமான வித்தையை உனக்குத் தெரியச் சொல்லுகிறேன், சாவதானமாகக் கேள்; அது என்னவென்றால், அதோ ஒரு தான்றி விருக்ஷம் விஸ்தாரமாகத் தழைந்து, பூக்கள், காய்கள் நிறைந்து, வெகு வேடிக்கையாக இருக்

கிறது, பார்த்தையா? அந்தத் தான்றி மரத்தின் பேரில் நான் இங்கே இருந்து ஒரு அஸ்திரம் விடுகிறேன், அது போய், இலைக்கொரு துவாரமாகத் தப்பாமல் தொளைத்துக் கொண்டு போம், அதை நீ பார்த்து வரலாம்" என்றான்; அதைக் கேட்டு நள மகா ராஜாவுந் தேரை நிறுத்தித் தாழ இழிந்து, ராஜாவை அஸ்திரம் விடச் சொல்ல, அவனும் ஒரு திவ்வியாஸ்திரத்தை அபிமந்திரித்து, தன்னுடைய வில் நாணிலே தொடுத்து விட்டான். அந்த அஸ்திரம் சிவ்வென்று எழும்பிப் போய், தான்றி மரத்திலே இருக்கப் பட்ட இலைகள் புஷ்பங்களிலே ஒன்றாகிலும் தப்பிப் போகாமல் தொளைத்துக் கொண்டு போயிற்று. நள மகா ராஜா அந்தத் தான்றி மரத்தண்டைக்கு வந்து, பிர்ம்மாண்ட மட்டம் வளர்ந்து இருக்கிற மரத்தைப் பார்த்து, புஷ்பங்கள் இலைகள் எல்லாம் தப்பாமல் தொளை பட்டிருப்பதையும் பார்த்து, ஆச்சரியப் பட்டு, இது மஹா பெரிதான வித்தை என்று சொல்லிக் கொண்டு நிற்கவே, அந்த மரத்தடியிலே சனீஸ்பரன் நள மகா ராஜாவுக்கு மாத்திரம் பிரத்தியக்ஷமாக வந்து எதிரே நின்று; "ஓய்! நள மகா ராஜரே! வாரும், ஐயா!" என்ற உடனே நள மகா ராஜாவும் அவன் அண்டையில் வந்து நிற்க, அந்தச் சமயத்திலே, கார்க்கோடகனும் வந்து முன்னே கடித்த இடத்திலே கடித்து விஷத்தை வாங்கிக் கொண்டு போனான். அப்போது நள மகா ராஜாவுக்குப் பெரிய பாரம் இறங்கினாற் போலே ஆயிற்று. சரீரம் மாத்திரம் கறுப்பாய் இருந்தது. பிறகு சனீஸ்பரன் நள மகா ராஜாவைப் பார்த்துத் துக்கித்து, வெகு மிருதுவாகச் சில வார்த்தைகள் சொல்லுகிறான்:—

"ஓய், நள மகா ராஜரே! ஓய், மன்மத சொரூபரே! ஓய், நவ கண்ட சக்கிராதிபரே! ஓய், ராஜசேகரரே! ஓய், கற்பக விருக்ஷம் போன்ற புண்ணிய புருஷரே! சகல ஜனங்களும் துதிக்கப் பட்டவரே! ராஜ கூட்டங்கள் என்கிற நக்ஷத்திரங்

களுக்குள்ளே சந்திரனைப் போலே விளங்கப் பட்டவரே! ஓய், அகண்டித வீர பராக்கிரமரே! ஓய், நள மகா ராஜரே! உம்மைத் தப்புச் சூதினலே ராச்சியம் எல்லாம் புஷ்கர ராஜனுக்குத் தோற்கப் பண்ணி, அன்னப் பக்ஷிகள் போலே வந்து மேல் வஸ்திரத்தை வாங்கிக் கொண்டு, உம்முடைய பெண்சாதியும் நீரும் ஒரு புடவையைக் கட்டிக் கொண்டு காடுகளிலே அலையச் செய்வித்து, உம்முடைய பெண்சாதியையும் உம்மையும் வேறுக்குவித்து, என்னுடைய சலத்தினலே அனேக மாய்கைகள் பண்ணி, உம்மைச் சேவித்த ராஜாவுக்கு உம்மைச் சுயம்பாகியாகப் பண்ணுவித்து, வெகுவாக உம்மைப் பிரயாசைப்படுத்த நான் வெகு பொல்லாத அபகீர்த்திக்கு உள்ளானேன்.' அதேனென்றால், மஹா பதிவிரதா சிரோமணி ஆகிய தமயந்தி தேவி சுயம்வரத்திலே உன்னை வருவிக்க, நீ அவளைக் கலியாணம் பண்ணிக் கொண்டதற்கு நான் மனம் பொறுக்க மாட்டாமல், அநியாயத்துக்கு உள்பட்டு, அந்தப் பாக்கியவதியையும் உன்னையும் வேறுக்குவித்து, வெகுவாக நான் அலையப் பண்ணினேன். என் புத்திக்கு மோசம் வந்தது, நான் சனிபகவான். நான் பண்ணின அபசாரத்தைச் சொன்னேன், என்னை நீர் கோபித்துக் கொண்டு சபிக்க வேண்டாம், என் தப்புகளை எல்லாம் மன்னித்து, தயவு பண்ணிக் காக்க வேணும்; ஓய், நள மகா ராஜரே! விருதாவிலே உம்மை அலையப் பண்ணினேன், பாவத்துக்குப் பாத்திரன் ஆனேன், சகலரும் நிந்திக்கல் ஆனேன், என் மீதில் தயா திருஷ்டி வையும். உம்முட குணனுபவங்களுக்கு மெச்சினேன், நீர் வேண்டும் என்ற வரத்தைக் கேளும், கொடுக்கிறேன்," என்று சொன்னதிற்கு நள மகா ராஜா அதிக சந்தோஷப் பட்டு, சூரிய குமாரனை சனீஸ்பரனுக்குப் பக்தி விநயத்துடனே நமஸ்காரம் பண்ணி, ஒரு வார்த்தை சொல்லுகிறான்:—

"ஓய், மகானுபாவன் ஆகிய சனீஸ்பரரே! நீர் என்ன? எனக்குப் பிறத்தியாரா? நீர் சூரிய பகவானுடைய குமாரர்; நான் சூரிய வங்கிஷத்து (வமிசத்து) ராஜா. உமக்கும் எனக்கும் பேதம் ஏது? விரோதம் ஏது? ஆகையினாலே, நீர் பண்ணின அகிர்த்தியங்களுக்கெல்லாம் நான் மனம் பொறுத்தேன். பகவான் செயல் இப்படி உண்டாய் இருக்கிற போது ஒருவராலேயும் ஒரு காரியமும் நடவாது. எல்லாம் பகவற் சங்கற்பத்தினாலே நடந்து வருகிறது. அதை நம்மாலே என்ன செய்யலாம்? ஆகையினாலே நீர் என் பேரிலே கிருபை பண்ணி ரக்ஷியும். பரம புருஷர் ஆன சனீஸ்பரரே! நீர் வரம் தருகிறோம் என்ற படியினாலே நான் ஒரு மனுக் கேட்டுக் கொள்ளுகிறேன்; அது என்ன என்றால், உங்களுடைய தயவினாலே எனக் கொன்றும் குறைவில்லை. இனிமேல் இந்தப் பூலோகத்திலே என்னுடைய சரித்திரத்தைச் சொன்னவர்களையும், சொல்லக் கேட்டவர்களையும், என்னுடைய கீர்த்தியை எழுதிப் படித்தவர்களையும், என்னைப் புகழ்ந்தவர்களையும், நீர் தயவுபண்ணிச் சேராமல் இருக்க வேண்டும்; இந்தத் தான்றி மரத்தின் நிழலிலே நின்றவர்கள் பேரில் கிருபை பண்ண வேண்டாம். ஓய், சனீஸ்பரரே! இந்த வரந் தான் எனக்குக் கொடுக்க வேண்டும்," என்று கேட்டதற்குச் சனீஸ்பரன் சந்தோஷப் பட்டு, நள மகா ராஜாவைப் பார்த்துச் சொல்லுகிறான்:—"ஓய், சத்திய சந்தனரே! இப்போது நீர் கேட்ட வரப்படியே கெட்டியாக நான் கொடுக்கிறேன். என்றைக்கும் உம்மை நான் மறக்கிற தில்லை. உம்முடைய கீர்த்தியைப் புகழ்ந்து கொண்டாடினவர்களுடைய ஆயுசும் போக பாக்கியங்களும் அபிவிர்த்தியாய்த் தைரியம் உடையவர்களாய், சுகமாய் இருக்கக் கடவார்கள்! இதற்குச் சந்தேகம் இல்லை. சமுத்திரங்கள் கரை புரண்டாலும், நட்சத்திரங்கள் எல்லாம் உதிர்ந்து போனாலும், நவக்கிரகங்கள் கதி தப்பி நடந்தாலும்,

மகமேருகிரி அசைந்திட்டாலும், உன்னுடைய பாக்கியம் தப்புகிறதே இல்லை. இது சத்திய வசனம் என்றெண்ணிக்கொள்ளும். ஓய், நள மகா ராஜரே! நீர் சீக்கிரத்துக்கு நிஷத புரத்துக்குப் போய், புஷ்கர ராஜாவைக் கெலித்து, உம்முடைய ராச்சிய பந்துக்களையும் கூடிச் சுகமாய் ராச்சிய பரிபாலனம் பண்ணக் கடவீர்," என்று குளிர்ந்த மனதுடனே நள மகா ராஜாவுக்கு வரங் கொடுத்து, சனீஸ்பரன் அந்தரத்தியானமாய் மறைந்து போய் விட்டான். சனீஸ்பரன் அந்த மரத்தின் கீழே நின்றபடியினாலே, அன்று முதல்கொண்டு அந்த விருக்ஷத்துக்கு கலி விருக்ஷம் என்று பேர் விளங்கி இருக்கிறது. சகலமும் அறிந்த பெரியோர்கள் அந்த மரத்தின் நிழலிலே போகார்கள், நிழலைச் சுற்றிக் கொண்டு போவார்கள்.

---

### 40. §. THE ARRIVAL AT *Vitarppa-puram.*

அந்த நள மகா ராஜா சனீஸ்பரன் கையிலே வரம் வாங்கிக் கொண்டு, மலை சுமந்தவனுக்கு மலையை இழித்து விட்டால் எத்தனை சந்தோஷம் பிறக்குமோ, அத்தனை சந்தோஷத்துடனே அதிவேகமாக நடந்து வந்து, ரிதுபர்ன மகா ராஜா உடனே சொல்லுகிறான்: "ஓய், மகா ராஜரே! இந்நேரம் அந்த மரத்து இலைகளை எல்லாம் தப்பாமல் ஒவ்வொன்றாக எண்ணிப் பார்த்தேன், எல்லாம் தப்பாமல் தொளைத்து இருக்கின்றன. அவை முற்றும் பார்த்தபடியினாலே இத்தனை நேரம் சென்றது," என்று சொல்லி, "இது அபூர்வமான வித்தை, இந்த வித்தையை எனக்குத் தயவு பண்ணிச் சொல்லும். நான் உமக்கு அஸ்வ இருதயம் அறிகிற வித்தையைச் சொல்லிக் கொடுக்கிறேன்," என்று சொல்லி, அஸ்வ இருதயம் அறிகிற வித்தையை விபரமாய் ரிதுபர்ன மகா ராஜாவுக்குச் சொல்லி, அவராலே அந்தப் பாணப் பிரயோகம் பண்ணுகிற வித்தையைத் தான்

அறிந்து கொண்டு, எப்போதும் போலே ரதத்தின் பேரிலே ஏறி, ரதத்தை நடத்திக் கொண்டு, விதர்ப்பபுரத்தைச் சேர வரவே, அந்த ரதம் வருகிற சத்தத்தைத் தமயந்தி தேவி கேட்டு, "இப்படிப் பூமி அதிரத் தக்கதாக ரதம் நடத்துகிற சாமர்த்தியம் என் புருஷனுக்கே அல்லாமல், பின்னை ஒருவர் தரமா?" என்று மனதில் நினைத்து, உப்பரிகை மேலே ஏறி, அந்த ரத வேகத்தைப் பார்த்துச் சந்தோஷப் பட்டு, "நம்முடைய புருஷனே," என்று நிதானித்துக் கொண்டு, தனக்கு முன்னே ரிஷிகள் சொன்ன மூன்று வருஷமும் ஆயிற்று என்று தெரிந்து கொண்டவளாய் உப்பரிகை விட்டிறங்கி, அந்தப்புரத்துக்குள்ளே போனாள். ரிதுபர்ன மகா ராஜா வருகிற செய்தி வீம ராஜா கேட்டு, மந்திரி பிரதானிகளுடனே கூட எதிர் கொண்டு போய், ஒருவருக் கொருவர் தேர் விட்டுக் கீழே இறங்கி, வந்தனம் பண்ணிக் கொண்டு, திரும்பவும் தேரிலே ஏறி நடந்து வந்து, விதர்ப்பபுரம் சேர்ந்தார்கள்.

அப்போது வீம ராஜா ரிதுபர்ன மகா ராஜாவுக்குத் தன் அரண்மனையிலே நல்ல விடுதிகள் அமர்த்தி வைத்தான். ரிதுபர்ன மகா ராஜாவும் வெகு வேடிக்கையாக ரதம் விட்டிறங்கி, வாகுகன் தோளின் பேரில் தன் கையைப் போட்டுக் கொண்டு நடந்து, விடுதிக்குப் போனான். பிறகு நள மகா ராஜாவும் தேர் அண்டையிலே வந்து, குதிரைகளை அவிழ்த்துக் கொண்டு போய், தண்ணீர் குடிப்பித்து, உடம்பை எல்லாந் தட்டிக் கொடுத்து, காணமும் புல்லும் வயிறு நிறையப் போட்டு, குதிரை லாயத்திலே கொண்டு போய்க் கட்டிப் போட்டு, "பூமியிலே இருக்கிற அந்தத் தேசாதிபதிகள் சுயம்வரத்துக்கு இன்னம் வந்து ஏன் சேர இல்லை? நாளை வருவார்களோ? என்னமோ?" என்று மனதிலே எண்ணிக் கொண்டு, குதிரை லாயத்திலே தானே இருந்தான். அதின் பிற்பாடு தமயந்தி தேவி

தன் பாங்கிமார்களிலே புத்திசாலியாய் இருக்கிற ஒரு பாங்கியை அழைத்து, ரிதுபர்ன மகா ராஜாவினுடைய சாரதி செய்திகளை எல்லாம் தெரிந்து கொண்டு வரச் சொல்லி, அவளுக்குச் சிறிது விசேஷங்களைக் கற்பித்து அனுப்ப, அவள் பிறகே சிறிது பாங்கிமார்களையும் கூட்டிக் கொண்டு, குதிரை லாயத்திலே இருக்கிற நள மகா ராஜா அண்டைக்குப் போய், விகுர்த ரூபமாய் இருக்கிறதைப் பார்த்து ஆச்சரியப் பட்டு, ஒரு வார்த்தை சொல்லுகிறாள்:—

"ஓய், புண்ணிய புருஷரே! நீர் இப்படி இளைத்திருப்பானேன்? மூன்று வருஷமாய் ரிதுபர்ன மகா ராஜா அண்டையிலே சேவித்துக் கொண்டிருந்தவர் நீர் அல்லவா? உமக்கு இந்த ரூபம் ஏன் வந்தது? ஏதாகிலும் இந்த ரூபம் நீர் பிறந்த போதே வந்ததா? அல்ல என்று நடுவாந்தரத்திலே வந்ததா? அல்ல என்று சமர்த்தர் ஆன சாரதிகளுக்கு இப்படிக் கொத்த ரூபம் தான் உண்டாயிருக்குமோ? அதேனென்றால், சூரியனுடைய ரத சாரதிக்கு இப்படிக் கொத்த ஊனமான ரூபம் இருக்கிறது என்று சாஸ்திரங்களிலே சொல்லக் கேட்டிருப்பேன். அதற்குச் சரியாய் இருக்கிறது; அல்லாமலும், எங்கள் ராஜாவின் மாப்பிள்ளை ஆன நள மகா ராஜா வரவில்லை என்கிற யோசனையினாலே அவரை வர அழைக்கிற நிமித்தியமாய் எங்கள் தமயந்திக்கு இரண்டாவது சுயம்வரம் என்று பேர் உண்டாக்கியும், ரிதுபர்ன மகா ராஜர் தானே வந்தார். எங்கள் நள மகா ராஜர் வராமற் போனாரே. ஐயோ, எங்கள் பெண்ணை நள மகா ராஜா காட்டிலே விட்டுப் போன வெட்கத்தினாலே திரும்பவும் அவள் அண்டைக்கு எப்படிப் போவோம் என்று நினைத்து, அங்கே தானே இருக்கிறாரோ? என்னமோ? அல்ல என்று ஒரு இடத்திலே தான் போய் ஒளித்திருந்தாலும் சிறிது நாளைக்குப் பிற்பாடாகிலும், அந்தப் பெண்ணின் பேரிலே தயவு பிறந்து

வரத்தேவை இல்லையா?" என்று சொல்லி, பின்னாலே வந்த பாங்கிமாரைப் பார்த்துத் தலைமையாக வந்த பாங்கி சொல்லு கிறாள்:—



### 41. §. THE STRATAGEMS TO DISCOVER NALA.

"ரிதுபர்ன மகா ராஜா அண்டையிலே நள மகா ராஜர் இருக் கிறார் என்று நம்ம[1] ராஜாவுக்கு முனீஸ்பரர்கள் சொல்லக் கேட்டு, நள மகா ராஜர் வர வேணும் என்று அந்த ரிதுபர்ன மகா ராஜாவை அழைப்பித்தால், ஓ, ஓ, பார்த்தீர்களோ, அந்த நள மகா ராஜர் வாராமற் பண்ணின மோசம்! இன்னம் அவருடைய செய்தியைக் கேளுங்கள். நீங்கள் அறிந்திருக்க வேணுமே. அந்த நள மகா ராஜருக்கு நம்ம பெண்ணான தமயந்தி பெண்சாதி ஆனால், அவள் பேரிலே எவ்வளவும் ஆசை இல்லாமற் காட்டிலே விட்டுப் போவாரா? அவள் தன் புருஷன் கொடுத்துப் போன பாதி வஸ்திரத்தையே இன்னம் கட்டிக் கொண்டு தரையிலே படுத்து, உண்ணாமலும், நற் புடவை உடுக்காமலும், நித்திரை பண்ணாமலும், அழுக்கு உடம்புடனே இருந்து கொண்டு, அவள் அலைகிறாளே! அவருக்கு அவள் பேரிலே ஆசை இராதா? நள மகா ராஜா ரிதுபர்ன மகா ராஜர் அண்டையிலே சேவித்துக் கொண்டு இருக்கிறார் என்று நாம் வெகுவாய் நம்பி இருந்தோமே, நள மகா ராஜா ரிதுபர்ன மகா ராஜர் பிறகே ஏன் வரவில்லை? நம்முடைய பெண் மீதில் அவருக்கு என்ன கோபமோ? தெரியவில்லையே! அவர் இங்கே வந்தால் குற்றஞ் சொல்லுகிறவர்கள் ஆர்? நம்ம அரண்மனையில் வந்து சுகமாய் இரரரா? இங்கும் அங்கும் அலைவானேன்? தம் அரண்மனை, தம் ராச்சியம், தம் அம்மான், தம் மைத்துனன், தம் மாமியார், தம் பெண்சாதி, தம் பிள்ளைகள் இப்படியாக இருக்கச்சே, அவர் எப்படி வேறு பண்ணலாம்? அந்த நள மகா ராஜா இனி ஆகிலும் வாரரோ? நம்ம பெண்ணின்

[1] = நம்முடைய.

கலி தீராரோ? தம்மை நம்பின பேரை ரக்ஷியாரோ? ஓ, ஓ, பெண்களே! நாம் அறிய அந்த நள மகா ராஜருக்கு நம்ம பெண் ஒரு தப்பும் செய்ததில்லை; ஆனாலும், அவள் பண்ணின தப்பு உங்களுக்கு நான் தெரியச் சொல்லுகிறேன், கேளுங்கள்!" என்று தலைமையாக வந்த பாங்கி சொல்லுகிறாள்: "அது என்ன வென்றால், முன்னே சுயம்வர காலத்திலே தேவர்களை மாலை இட ஒப்பாமல், தனக்கு மாலை இட்டது ஒரு தப்பு; பிறகு காட்டிலே விட்டுப் போனதிற்கு அங்கேதானே இராமல் தாய் வீடு வந்து சேர்ந்தது ஒரு தப்பு; அவரைப் பிரிந்த பிற்பாடு பிராணனைப் போக்கடித்துக் கொள்ளாமல், இந்த மட்டுக்கும் சரீரத்தை நிறுத்தினது ஒரு தப்பு; இந்தத் தப்புகளை எல்லாம் மாமனாரை ஆகிலும் பார்த்துப் பொறுத்துக் கொண்டு இங்கே வராமல், தனக்குச் சரிப்போன இடத்திலே ஏன் திரிகிறார்? இப்படிக் கொத்த கோபம் எங்கே செல்லும்? ஓ, ஓ, பாங்கிமார்களே! இந்த அநியாயத்தை எங்கே ஆகிலும் கண்டீர்களோ, கேட்டீர்களோ? சொல்லுங்கள்!" பிள்ளைகளைப் பெற்று, ராச்சியத்தை ஆண்டு, நவ கண்ட சக்கிரவர்த்தி என்று பேரும் பிரதிஷ்டையும் உண்டாய், சகல நியாயங்களும் அறிந்த மகா ராஜா கேட்டு, புன் சிரிப்புக் கொண்டு, அவர்களுக்குத் தெரியாத படிக்கு நிஷ்டூரமாக அவர்களுடனே ஒரு வார்த்தை சொல்லுகிறான்: "ஓ, பெண்களே! இத்தனை நேரமாய் நீங்கள் என்னுடனே சொல்லுகிற வார்த்தைகள் நள மகா ராஜாவை அழைப்பிக்கச் சொல்லிச் சொல்லுகிறதாகக் காணுகிறது. அப்படி நீங்கள் என்னுடனே சொல்லுகிறதென்ன? அது என்னாலே ஆகுமா? நான் ஒரு ராஜாவிடத்தில் சேவித்துக் கொண்டிருக்கிற ஊழியக் காரன். என்னாலே எந்தக் காரியமும் நடவாது. அதல்லாமலும், அந்த நள மகா ராஜா உங்கள் பெண்ணைக் காட்டிலே கஷ்டப் பட மாட்டாள் என்றும், தன் தாய் வீடு போய்ச்

சேருவாள் என்றும் விட்டுப் பிரிந்து போனால், நீங்கள் அவரைப் பேயன் ஆக்கித் தூறுகிறீர்கள். உங்கள் பெண்ணுக்கு அவர் மஹா உபகாரம் பண்ணினால், அது உங்களுக்கு அபகாரமாய்த் தோன்றினது. ஆனால் என்ன ஆச்சுது? அவரை அழைப்பிக்கிற யோசனை ரிதுபர்ன மகா ராஜருக்கே தெரியும். இந்த வார்த்தைகளை எல்லாம் அவருடனே போய்ச் சொல்லுங்கள். உங்கள் பெண் அவர் அண்டைக்குத் தான் அல்லவோ சொல்லி அனுப்பி வைத்தாள். நீங்கள் புத்தி இல்லாமல் என்னைக் கேட்டீர்கள். அப்படிக் கேட்கலாமா? போங்கள்! என்று சொன்னதிற்கு அந்தத் தாதிமார்கள் அவ்விடம் விட்டுத் திரும்பி வந்து, தமயந்திக்குக் குதிரை லாயத்திற்கு போன இடத்திலே நடந்த செய்திகளை எல்லாம் சவிஸ்தாரமாகச் சொன்னார்கள் அவர்களுடனே தமயந்தி:—

"ஓ, ஓ, பாங்கிமார்களே! தப்புகள் எல்லாம் நம்மிடத்திலே இருக்கச்சே அவரைச் சொல்லுவானேன்? அவர் ரிதுபர்ன மகா ராஜர் அண்டையிலே சுயம்பாகியாயும் சாரதியாயும் இருக்கிறதை நான் அறிந்திருந்தும் சொல்லி அனுப்பினது ஒரு தப்பிதம் அல்லவோ? அவர் என் பாக்கிய வசத்தினாலே அந்த ராஜாவின் பிறகே நம்முடைய ஊர் வந்து சேர்ந்து நீங்கள் போய்ச் சொன்ன வார்த்தைகளைக் காதிலே கேட்டு, மனதிலே நிறுத்தாமல் என் பேரிலே தானே குற்றமாய்ச் சொன்னதென்ன? அது உங்களுக்குத் தெரியுமா? அவர் மஹா சமர்த்தன் ஆனபடியினாலே உங்கள் பேச்சுக்கு இடங்கொடாமல், இனி என்ன சமாசாரம் என்று மனது ரோசி, இப்படிச் சொல்லி இருக்கிறார்; அதனாலே ஒரு குறைவும் இல்லை. நீங்கள் இன்னம் ஒரு தாம் அவரண்டைக்குப் போய், அவர் சமைக்கிற உபாயங்களை எல்லாம் பார்த்து வாருங்கள்" என்று சொன்னாள். அப்படியே அவர்களும் "நல்லது" என்று திரும்பவும் குதிரை லாயத்துக்குப் போய், அவ்விடத்திலே நள மகா ராஜாவுடைய

சமையல் வேலைகளை எல்லாம் பார்த்திருந்து வந்து, தமயந்தியுடனே சொல்லுகிறார்கள்: "கேட்டாயோ, அம்மா! அவ்விடத்து விநோதங்களையும் உச்சிதங்களையும் நாங்கள் எங்கேயும் கண்டதில்லை; எங்கேயும் கேள்விப் பட்டதும் இல்லை. அதென்ன வென்றால், அவர் போசனமும் பதார்த்தங்களும் சமைக்கிற நேர்ப்பு நாங்கள் என்ன என்று சொல்லப் போகிறோம்? பானைகளை அடுப்பின் பேரிலே வைத்தால் தண்ணீர் ஊற்றுப் போலே சுரக்கிறது. அடுப்பிலே அக்கினி போடாமலே எரிகிறது. அவர் சமைக்கிற காய் கறிகள் வாசனை ஊரெல்லாம் சூழ்ந்து கொள்ளுகிறது. அநேக விதமான பதார்த்தங்கள் உச்சிதங்களாகச் சமைக்கிறார்; பார்த்தால் இருளைப் போலே சரீரம் கறுத்து இருக்கிறார். அந்த மர்மம் உனக்குத் தெரியும் அல்லாமல் எங்களுக்குத் தெரியாது. அம்மா! பெரியவர்களுடைய ஆசீர்வாதத்தினாலேயும், தெய்வ பலத்தினாலேயும் உங்கள் கோறிக்கைப் பலத்தினாலேயும் உன் தாய் தகப்பனார் செய்த தபோ பலத்தினாலேயும் உன் நோன்புப் பலத்தினாலேயும் தெய்வ பலத்தினாலேயும் எங்கள் கோறிக்கைப் பலத்தினாலேயும் அவர் உன் புருஷரே ஆக வேணும். அம்மா, உன்னை நாங்கள் பார்த்துப் படுகிற துக்கம் தீர்ந்து, நீயும் உன் புருஷனும் கூடிச் சுகமாய் இருக்கச்சே நாங்கள் எங்கள் கண்ணாலே பார்க்கப் பாக்கியமும் உண்டாகும் போலே காணுகிறது," என்று சொன்ன உடனே தமயந்தியும் யோசனை பண்ணிப் பின்னும் சொல்லுகிறாள்: "ஓ, ஓ, பாங்கிமார்களே! இன்னம் அதுக்கொரு உபாயம் இருக்கிறது. அது என்ன வென்றால், நீங்கள் இன்னம் ஒரு தரம் போய் அவர் சமைக்கிற சாதமும் பதார்த்தங்களும் உபாயமாகக் கேட்டு வர வேணும்; வாங்கி வந்தீர்கள் ஆனால் அதைச் சாப்பிட்டுப் பார்த்து எல்லாம் சொல்லுகிறேன், போங்கள்," என்றாள். அவர்களும் "நல்லது" என்று அப்படியே நள

மகா ராஜா அண்டைக்குப் போய்க் கேட்கிறார்கள்:—"ஓய், சாரதி சிரேஷ்டரே! புண்ணிய புருஷரே! உம்மைப் பார்த்தால் எங்களுக்கு வெகு சந்தோஷமாய் இருக்கிறது. இங்கே வாரும். எங்கள் வார்த்தைகளைக் கேட்டு எங்கள் பேரிலே தயவு பண்ணி, நாங்கள் கோரி வந்த மனுவை அட்டி பண்ணாமல் நடப்பிக்க வேணும். அது என்ன வென்று கேட்டீர் ஆனால், சொல்லுகிறோம், கேளும்! எங்கள் வீட்டிலே சாதமும் கறிகளும் இல்லாமல் உம்மைக் கேட்க வர இல்லை; உம்முடைய தர்மத்தினாலே வேண்டிய பதார்த்தங்கள் எல்லாம் இருக்கின்றன. அவைகளை நாங்கள் எத்தனை நேத்தியாகச் சமைத்தாலும், அவைகளை வேண்டாமல், எங்கள் பெண் தண்ணீரும் சாதமும் மூன்று வருஷமாகச் சாப்பிடுகிறாள். இப்போது இந்தச் சாதமும் கறிகளும் கொடுத்தீர் ஆனால் சாப்பிடுவாள் போலே இருக்கிறது. இந்தத் திவ்வியமான வாசனை உடனே இருக்கிற சாதமும் கறியும் சாப்பிட்டு வெகுநாள் ஆச்சுதாம். கொஞ்சம் சாதமும் கறிகளும் தயவு பண்ணும் புண்ணிய புருஷரே!" என்று அந்தப் பாங்கிமார்கள் கேட்டார்கள். அதற்கு நள மகா ராஜா நகைத்து, "ஓ, ஓ, பாங்கிமார்களே! இந்தச் சாதமும் கறிகளும் எங்கள் பெண் கேட்கிறாள் என்று நீங்கள் வெகு அருமையாகக் கேட்க வேண்டுமோ? நீங்கள் கேட்டால் இல்லை என்று சொல்லுவேனோ? நான் அப்படிச் சொல்லுகிறது இல்லை. தன்னிடத்திலே உண்டான பதார்த்தங்களை எவர்கள் இச்சையாய்க் கேட்கிறார்களோ, அவர்களுக்கு எவ்வளவாகிலும் இல்லை என்னாமல் கொடுக்கச் சொல்லியும் கொடாமற் போனால் பரம சண்டாளர் என்றும் தரும சாஸ்திரத்திலே முறை இடுகிறது. ஆகையினாலே, நீங்கள் கேட்டபடிக்குக் கறிகளும் சாதமும் கொடுக்கிறேன். கொண்டு போய்க் கொடுங்கள்," என்று சொல்லி, எழுந்திருந்து, வண்டக சாலைக்குப் போய்த் தட்டுகளிலே நல்ல சாதமும் கறிகளும் வைத்துக் கொண்டு வந்து, தாதிகள் கையி

லே கொடுத்து, "நீங்கள் போங்கள்" என்று சொல்லி அனுப்பி வைத்தான். அவர்கள் சந்தோஷத்துடனே அதை வாங்கிக் கொண்டு போய், தமயந்தி தேவி கையிலே கொடுத்தார்கள். அந்த அம்மாள் அதை வாங்கிச் சாப்பிட்டு, ருசி பாகத்தைப் பார்த்துச் சந்தோஷப் பட்டு, தன் புருஷனே என்று நிதானித்து, இனிப் பிள்ளைகளை அவரண்டைக்கு அனுப்ப வேண்டும் என்று நினைத்து, தன் பெண்ணையும் பிள்ளையையும் அழைப்பித்து, அவர்களுக்குச் சிறிது வார்த்தைகளைக் கற்றுக் கொடுத்து, தாதிகளைப் பிறகே கூட்டி அனுப்பி வைத்தாள். அவர்களும் குதிரை லாயத்திற்குப் போய், நள மகா ராஜா அண்டையிலே நின்றார்கள்.

---

## 42. §. HIS CHILDREN SENT TO HIM.

அவர்களைக் கண்டு, நள மகா ராஜா மிகவும் துக்கக்கிராந்தனாய், அந்தத் துக்க சாகரத்திலே மூழ்கி, சகிக்க மாட்டாமல், பிள்ளைகளைச் சேர அழைத்து, மார்போடே கட்டி அணைத்து, மடியிலே எடுத்து வைத்துக் கொண்டு, சரீரம் எல்லாம் கையினாலே துடைத்து, உச்சியை மோந்து, முத்தமிட்டுக் கொண்டு, தாராளமாகக் கண்களிலே தண்ணீரை உதிர்த்தார். அது கண்டு பாங்கிமார்கள் சிரித்து, "இப்படி இவர்களைக் கண்டு அழுவானேன்? ஓய், சாரதி சிரேஷ்டரே!" என்று பாங்கிமார்கள் கேட்க, நள மகா ராஜா அவர்களைப் பார்த்து, கம்பின குரலுடனே ஒரு வார்த்தை சொல்லுகிறான்:—"ஓ, ஓ, பாங்கிமார்களே! இவர்களைப் போலே எனக்கும் இரண்டு பிள்ளைகள் உண்டு. அவர்களை நான் விட்டுப் பிரிந்து அநேக நாள் ஆச்சுது. ஆனபடியினாலே, அந்த நினைவு வந்து கண்களிலே தண்ணீர் சொரிந்தேன். இப்படி ஒருவரைச் சேவிக்கிறது ஒரு பிழைப்பா? நான் பிள்ளைகளைப் பார்த்து மூன்று வருஷம் ஆச்சுது. என் கர்ம வசத்தினாலே பெண்சாதி பிள்ளைகளையும் ஊரையும் விட்டு,

ஒரு இடத்திலே போய்ச் சேவித்துக் கொண்டிருக்கிறேன். ஒரு தரம் ஆகிலும் போய்ப் பார்க்கக் கூட இல்லை. நான் இப்படி என் வயிறு வளர்த்துக் கொண்டு பிழைக்கிறேன். இந்தப் பிள்ளைகளுக்கு ஏதாகிலும் கொடுப்போம் என்றால், எனக்கு வீடு இங்கே இல்லை. கையிலேயும் ஒன்றும் இல்லை. என்ன செய்வேன்?" என்று சொல்லிப் பிள்ளைகளை முத்தம் இட்டு, "போங்கள், அப்பா! அம்மா!" என்று சொன்ன போது, பாங்கிமார்கள் அந்த நள மகா ராஜாவைப் பார்த்துச் சொல்லுகிறார்கள்:—

"ஓய் மஹாத்மரே! சத்திய சந்தனரே! ஓய், சுவாமி! இந்தப் பிள்ளைகள் நள மகா ராஜருடைய பிள்ளைகள். இதுகளும் இப்படித் தான் தகப்பனை விட்டுப் பிரிந்து இருக்கிறதுகள். அந்த ராஜா இந்தப் பிள்ளைகளும் பெண்சாதியும் இப்படி அலைய விட்டு, பர தேசம் போகலாமா? அது உமக்கு நன்றாய் இருக்கிறதா? அவர் தாம் எப்படி மனது சகித்துக் கொண்டு இருக்கிறாரோ, தெரியவராது. அவர் எத்தனை கல் நெஞ்சாகிலும் இந்தப் பிள்ளைகளைப் பார்த்த உடனே நெஞ்சு கரைந்து நீராய் உருகிப் போகாதோ? இப்படி எத்தனை நாள் என்று இந்தப் பிள்ளைகள் தகப்பனை விட்டுப் பிரிந்திருக்கும்? சொல்லும்! இந்த மட்டுக்கும் அந்த நள மகா ராஜா வராமற் போனார் அல்லவோ? இனி ஆகிலும் அந்த மகா ராஜா வராவிட்டால், அந்தப் பெண் பிராணனை வைத்திருக்க மாட்டாள். பிற்பாடு இந்தப் பிள்ளைகள் திக்கில்லாமல் அலைந்து போம். இனி ஆர் முகத்தைப் பார்க்கப் போகிறதுகள்? நவ கண்டமும் ஆளப் பட்ட நள மகா ராஜருடைய பிள்ளைகள் இந்தப் பூமியிலே என்ன பாடு படத் தலையிலே எழுதி இருக்கிறதோ, தெரியாதே. லோகோத்திரமாய் இருக்கப் பட்ட இந்தப் பிள்ளைகளுக்கு இப்படிப் பட்ட பிரயாசம் வந்தது. நீர் பார்த்தீரா?" என்று பாங்கிமார்கள் சொன்ன உடனே நள மகா ராஜாவுக்கு மேலு

மேலும் துக்கம் வந்து, பரவசனாய்த் தாராளமாய்க் கண்ணீர் தாரை தாரையாகச் சொரிய அழுது, குரலும் கம்மிப் போய், கை கால்கள் அசந்து, பூமியைப் பார்த்துக் கொண்டிருந்தார். அதைக் கண்டு பாங்கிமார்களும் சகிக்க மாட்டாமல், சீக்கிரமாக அந்தப் பிள்ளைகளை அழைத்துக் கொண்டு போய், தமயந்தி தேவி அண்டையிலே விட்டுப் போன இடத்திலே நடந்த செய்திகளை எல்லாம் சவிஸ்தாரமாகச் சொன்னார்கள். அது கேட்டுத் தமயந்தி இனி சும்மா இருக்கப் போகாது என்று சொல்லி, தன் தகப்பனை அழைப்பித்து, இந்தச் செய்திகளை எல்லாம் ஆதியோடே அந்தமாகச் சொல்லி, தன் புருஷனை வெளிப் படுத்த வேண்டும் என்று சொன்னதிற்கு, வீம ராஜாவும் வெகு சந்தோஷத்துடனே, "நல்லது அம்மா," என்று சொல்லி, மந்திரிகளை அழைப்பித்து, "ஓய் மந்திரிமார்களே! நீங்கள் ரிதுபர்ண மகா ராஜா அண்டைக்குப் போய், எங்கள் ராஜா உங்களுடைய தேர்ப் பாகனைப் பார்க்கத் தக்கதாக அழைத்து வரச் சொன்னார் என்று சொல்லி, அவருடைய சாரதியை அழைத்துக் கொண்டு வாருங்கள், போங்கள்," என்று சொல்லி அனுப்பினான். "நல்லது," என்று அவர்களும் ரிதுபர்ண மகா ராஜா அண்டைக்குப் போய், நமஸ்காரம் பண்ணிச் சொல்லுகிறார்கள்:—



43. §. THE DISGUISED KING SENT FOR BY HIS FATHER-IN-LAW.

"ஓய், ராஜேந்திரரே! நீங்கள் அயோத்தி பட்டணம் விட்டுப் புறப் பட்டு விதர்ப்ப புரத்திற்கு இத்தனை சுறுக்காய் உங்கள் தேர் வந்த வேகத்திற்கு எங்கள் ராஜா மெச்சிச் சந்தோஷப் பட்டு, அந்தத் தேரை ஓட்டி வந்த சாரதி எப்படிக் கொத்தவனோ, அவனைப் பார்க்க வேணும் என்கிற யோசனையாய் உம்முடனே சொல்லி, உம்முட சாரதியை எங்கள் ராஜா அழைத்து வரச் சொன்னார். தயவு பண்ணி உங்கள் சாரதி

யை அனுப்பி வைக்க வேண்டும்" என்றார்கள். அது கேட்டு ரிதுபர்ன மகா ராஜா யோசனை பண்ணி, நம்முடையை சாரதியுடனே அவருக்கு என்ன வார்த்தை இருக்கின்றது, ஏதாகிலும் நமக்குச் சொல்லி அனுப்பவோ தெரியாது என்று நினைத்து, அந்த க்ஷணத்திலே தானே வாகுகனைத் தன்னிடத்துக்கு அழைப்பித்து, "ஓ, வாகுகா! நீ தேரோட்டி வந்த அதிசயத்துக்கு வீம ராஜா மெச்சி, உன்னைப் பார்க்க வேணும் என்று மஹா சந்தோஷத்துடனே அழைத்து வரச் சொன்னார் ஆம். இதோ, அவருடைய மந்திரிகள் வந்திருக்கிறார்கள். அவர்கள் பின்னே நீ போய், வீம ராஜாவைக் கண்டு வார்த்தை சொல்லி வா! போ!" என்று அனுப்பி வைத்தான். "நல்லது," என்று மாறு வேஷங் கொண்டிருக்கிற அந்த நள மகா ராஜாவும் மந்திரிகள் பிறகே போகிற போது, அந்தப் பட்டணத்துச் சனங்கள் எல்லாம் அந்த வார்த்தைகளைக் கேட்டு, மனதிலே சந்தோஷத்தை அடைந்து, அங்கங்கே கும்பு கும்பாய்க் கூடி ஒருவருக் கொருவர், "ஓ, அம்மா! ஓ, தங்கைச்சி! ஓ, மாமி! ஓ, மச்சி!" என்று கூப்பிட்டு, தங்களுக்குத் தோன்றின படிக்குச் சொல்லிக் கொள்ளுகிறார்கள்; அது எப்படி என்றால், பார்த்தையா? அம்மா! மஹா பதிவிரதா சிரோமணியான தமயந்தியை ராஜாதி ராஜராகிய நள மகா ராஜர் காட்டிலே விட்டுப் பிரிந்து எப்படிப் போய் விடுவார்? தேவேந்திரன் முதலான தேவர்களை எத்தனைக்கில்லை என்று அவர்கள் சொரூபத்தைப் பாராமல் திரஸ்கரித்து, தம்மை அவள் மாலை இட்டதிற்கு அவர் பண்ணின மரியாதை பார்த்தையா? அம்மா! கர்ம வசத்தினாலே ராச்சியம் போனாலும் என்ன? தன் மாமனார் வீடு வந்து சேர்ந்து சுகமாய் இராமல் பயங்கரமான காடுகளிலே ஏன் போனார்? வெளிகள் எல்லாம் திரிந்து அலைவானேன்?" என்று இப்படிச் சொல்லிக் கொள்ளுகிற பேரும்; அதிலே சிறிது பேர், "ஓ, தங்கையே! கேட்டையோ? பூலோ

கத்து மனுஷரும் தேவர்களுங் கூட ஊழ் வினைப் பயனைத் தப்பித்துக் கொள்ள மாட்டார்கள், முன்னே ஈஸ்வரனைப் போல் ஒத்தவன் இமைய கிரியிலே இருக்க இல்லையா? ஸ்ரீராமன் சீதா லட்சுமணருடனே கூடக் காட்டிலே பதினாலு வருஷம் வாசம் பண்ண இல்லையா? தேவேந்திரன் திரிலோக நாயகனாய் இருந்து, அகலியா தேவிக்காகக் கௌதமர் கையிலே என்ன பாடு பட்டார்?" இப்படி ஊழ் வினையால் பிரயாசைப் பட்டவர்கள் கணக்கில்லையே. அரிச்சந்திரனைப் போலொத்தவன் என்ன பிரயாசைப் பட்டான்? அப்படிப் போலே நள மகா ராஜாவுக்கும் இப்படிக் கொத்த பிரயாசை வந்தது" என்றும், "ஆனாலும் என்ன? இப்படிப் பட்ட அக்கிரமமான விசேஷத்தை நாம் கேட்டதில்லையே, இது மெத்த அநியாயம்" என்றும், அதிலே பின்னை யொருத்தி, "இவருக்கு அம்மான் வீடு வேறும், தன் வீடு வேறும் ஆகப் பார்க்கலாமா? இங்கே வந்திருந்தால் தாழ்ச்சி என்ன?" என்றும், "அந்தத் தமயந்தி காட்டிலே புருஷனைக் காணாமல் சீவனை விடப் போகச்சே, ரிஷீஸ்பரர்கள் கண்டு, 'ஓ, அம்மா! நீ ஏன் சீவனை விடுகிறாய்? மூன்று வருஷத்திலே உன் புருஷனும் நீயுங் கூடிச் சுகமாக எப்போதும் போலே ராச்சியம் ஆளப் போகிறீர்கள்,' என்று அபயாஸ்தம் கொடுத்த படியினாலே தப்பி வந்தாள். அவளைக் கண்ணிலே கண்டோம்" என்றும், அந்த ரிஷீஸ்பரர்கள் சொன்ன தவணையும் இன்றுடனே சரி ஆச்சுது, நள மகா ராஜர் இது வரைக்கும் வராமற் போனார், பெரியவர்களான ரிஷிகள் பேச்சும் தப்பிப் போச்சுது, அல்லவா? இப்படிப் பண்ணலாமா? இப்போது நள மகா ராஜர் வந்தால் தான் தமயந்தி பிழைப்பாள்; இல்லாவிட்டால், அந்தப் பெண்ணைக் கண்ணிலே பார்க்க மாட்டோம், ஒரு வேளை அவர் வராமற் போய், அவள் சீவனை விட்டால், அந்த ஸ்திரீ ஹத்தி தோஷம் அவள் தகப்பனுக்கோ, அல்ல என்று புஷ்கர ராஜா

வுக்கோ, இல்லாவிட்டால் கொண்ட புருஷனுக்கோ, அல்ல என்று இருவரையும் இசைவித்த அன்னபக்ஷிக்கோ தெரியாது. எப்படியும் அந்தப் பெண் கொலை ஒருவரைச் சுற்றுமே ஒழிய, விருதாவிலே போக மாட்டாது. விஷ மருந்துகள், ஆயுதங்கள், இப்படிக் கொத்த பொல்லாத வஸ்துக்களை எல்லாம் அவள் கண்ணிற் காணாமல் ஒளித்து வைத்து இருக்கிறது. குளங்கள், கிணறுகள், தூரவுகள், மடுக்கள், இவைகள் அண்டையிலேயும் சேவகரைக் காவல் வைத்திருக்கிறது. அவளுடைய தாயும் தந்தையும் இத்தனை எச்சரிக்கையுடனே இருக்கிறார்கள். இத்தனைக்கும் அவள் தப்பித்துக் கொண்டு சீவனை விட்டால், உடனே அவள் தாயாரும் தந்தையும் சீவனை விடுவார்கள். அவர்களுடனே தமயந்தியினுடைய தமையனும் சீவனை விடுவான். அப்புறம் தெய்வ எத்தனம் எப்படியோ! சனங்கள் செய்த பாக்கியம் என்னமோ தெரியாது!" என்றும், இப்படிப் பல பல விதமாக பட்டணத்திலுள்ள பேர்கள் எல்லாம் ஒரே பேச்சாய்ப் பேசிக் கொள்ளுகிறதை நள மகா ராஜா தன் காதுகளிலே நாராசம் விட்டாற் போலே கேட்டு, விசனப் பட்டுக் கொண்டு, வீம ராஜா அண்டைக்கு வந்து, கண்டு, கை குவித்து நின்று, "ஓ, ஓ, சுவாமி! தேவரீர் இந்த வேளை என்னை ஏன் அழைத்தனுப்பினீர்? என்றால் என்ன காரியம் நடக்க வேண்டியது? அதைச் சொல்லும், நான் போக வேணும்" என்று உருமாறிய நள மகா ராஜா கேட்டான்.



**44.** §. NALA AND THE WHOLE FAMILY TOGETHER.

அதைக் கேட்டு, வீம ராஜா குஞ்சிரிப்புக் கொண்டு, தான் இருந்த சிங்காதனம் விட்டிழிந்து, அந்த உருமாறிய நள மகா ராஜாவுக்கு வேறே ஒரு நவரத்தின சிங்காசனம் போடுவித்து, அதிலே "இரும்," என்று சொன்னான். அப்போது நள மகா

ராஜா வீம ராஜாவைப் பார்த்து, "ஓய், சுவாமி! தேவரீர் இப்படிக் கொத்த மரியாதைகள் எனக்குப் பண்ணலாமோ! நான் என்ன? சம்பந்தியா? அல்லது மாப்பிள்ளையா? நான் உமக்குச் சரியான ராஜாவா? நான் ஒரு ராஜாவினுடைய தூதன்? எனக்குச் சிங்காசனம் என்னத்திற்கு? ஏதாகிலும் சொல்ல வேண்டிய விசேஷம் உண்டானால் சொல்லி அனுப்பி விடுங்கள்; ரிதுபர்ண மகா ராஜா ஒண்டியாய் இருக்கிறார். சுயம்வரம் என்று இன்றையதினம் வெகுதூரம் வந்தோம், சரீரம் மெத்த வேசாறி இருக்கிறது. செலவு கொடுங்கள்! நான் போகிறேன்," என்று சொல்லிக் கொண்டிருக்கும் போது, அந்த நள மகா ராஜருடைய மாறு ரூபத்தைத் தமயந்தி தேவி அப்பாலே இருந்து பார்த்து, முகத்திலே அறைந்து கொண்டு, கண்ணீர் தாரை தாரையாய் வடியக் கோ என்றழுகிற பரிதாபத்தை நள மகா ராஜா பார்த்து, "ஓ, ராஜரே! என்னை நீர் ஏன் அழைப்பித்தீர்? இந்தப் பெண் ஏன் அழுகிறாள்? இது என்ன காரணம்? எனக்குச் சீக்கிரமாகச் செலவு கொடும், நான் போகிறேன்," என்று தீவரப் படுகிற போது, தமயந்தி தேவி அதிக விசாரத்துடனே உருமாறி இருக்கிற தன் புருஷன் அண்டையிலே வந்து, வெகுவாகப் புலம்பி அழுகிற போது, அது கண்டு நள மகா ராஜா மனதிலே ரோஷமும் துக்கமும் மேலுமேலும் உண்டாய்த் தமயந்தியைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறான்:—

"ஓய், பெண்ணே! பாக்கியவதியே! உன் மனதிலே உண்டான விசாரம் எல்லாம் தீர்க்கத் தக்கதாக உன் தகப்பனார் இரண்டாவது விவாகம் பண்ணச் சுயம்வரம் சாட்டி வைத்தாரே. இனி ஏன் விசாரப் படுகிறாய்?" என்று விரோதமாய்க் கன்ன கடோரமான வார்த்தைகளைச் சொல்லி, "இந்தப் பேச்சுகள் நான் சொன்னதிற்கு உங்கள் தகப்பனருக்குக் கோபமாய் இருக்குமோ?" என்று சொன்னதினாலே இவரே நள மகா ராஜர் என்று

வீம ராஜா நிச்சயமாக அறிந்து கொண்டு, இரண்டு பிள்ளைகளையும் உருமாறி இருக்கிற நள மகா ராஜா மடியிலே வைத்து, கையைப் பிடித்திழுத்து, சிங்காசனத்தின் பேரில் உளுக்கார வைத்து, தன் மகளைப் பார்த்துக் கிலேசப் பட, பிள்ளைகளும் கோ என்று அழ, தபனுபி என்கிற மைத்துனனும் வந்து கிலேசப்பட, இப்படியாகக் கிலேசப் படுகிற போது வீம ராஜா நள மகா ராஜாவைப் பார்த்து, "ஓய், மகா ராஜரே! நான் என்ன, புத்தி இல்லாதவனு? நீர் ரிதுபர்ன மகா ராஜா அண்டையிலே இருக்கிற செய்தியைக் கேட்டு, உம்மை வர அழைக்கிற நிமித்தியம் இந்த எத்தனம் பண்ணினதே அல்லாமல் வேறொன்று இல்லை; அப்படி நான் நிசமாகச் சுயம்வரம் சாட்டி வைத்தால் இன்னேரம் ஐம்பத்தாறு தேசத்து ராஜாக்களும் வந்திரார்களா? எவர்கள் ஆகிலும் வந்திருக்கிறுர்களா? நீர் அதை நன்றுக விசாரியும். ஓய், ராஜசேகரரே! நீர் அறியாத யோசனை நான் என்ன சொல்லப் போகிறேன்? இந்தக் காரியம் நான் செய்ததில் என்ன தப்புகள் இருந்தாலும் மன்னித்து, என் பெண்ணின் பேரிலே தயவு வையும்," என்று வீம ராஜா வேண்டிக் கொள்ளக் கேட்டு, நள மகா ராஜா அழுகிற பிள்ளைகளை எடுத்து, ஆதரணை பண்ணி, பிறகு தலையை எடுத்து, தமயந்தி தேவியைப் பார்த்து, குசோத்தியமாக ஒரு வார்த்தை சொல்லுகிறுன்:—

"ஓய், பெண்ணே! ராஜ பத்தினியே! ஆண் பிள்ளைகளுக்கு ஆபத்து வருகிறது மெத்த அருமை அல்ல. ஆபத்தினுலே நள மகா ராஜா தான் எங்கேயோ போய் விட்டானே, அந்த நள மகா ராஜாவே வேண்டும் என்று பிரதிக்கினை என்ன? அவனுக்குச் சரியான பேர் இல்லையோ? அந்த நள மகா ராஜா உன்னைக் காட்டிலே ஒண்டியாய் விட்டுப் போனுனே. அப்படிப் பட்ட பகையாளியின் மேலே ஆசை இனி உனக்கு என்னத்துக்கு? மனதுக்குச் சம்மதியான பேரை நானே அழைத்து

வர மாட்டேன். நள மகா ராஜாவை மாத்திரம் அழைத்து வர மாட்டேன். நள மகா ராஜா நான் என்று உன் தகப்பனார் என் பேரிலே நிபம் சொல்லுகிறார். நான் இப்படிக்குக் குரூபி ஆனால் அந்த நாளிலே நீ சேருவாயா? நீ காட்டிலே இலைகளும் காய்களும் தின்று செடியின் கீழே அலைய மாட்டாய் என்று உன்னை உன் தாய் தகப்பன் வீட்டுக்கு நள மகா ராஜா போகச் சொன்னால், நீ 'போக மாட்டேன்' என்று பின் தொடர்ந்தால், 'வேண்டாம்' என்று உனக்கு வழி காட்டி 'உன் தாய் வீடு போய்ச் சேர்' என்று விட்டுப் போனால், அதுவே ஒரு பெரிய தப்பாக எண்ணி, இத்தனை சுறுக்காகக் கலியாணத்துக்கு நீ எத்தனம் பண்ணினால் இனி அவருக்கு வெட்கம் இல்லையா? அவரும் உன்னைப் போலே வேறே பெண்சாதிக்கு எத்தனம் பண்ணி, ஆள் அனுப்பக் கண்டோம். ஓய், பெண்ணே! உன் புருஷன் அப்படி அல்ல என்று உனக்கு வெகு தப்பிதம் தான் செய்திருந்தாலும் உன் பிள்ளைகளைப் பார்த்தாவது பொறுக்க வேண்டாமோ? ஆனால் என்ன ஆயிற்று? நான் வழக்குச் சொல்ல வந்தேனோ? இல்லை, உன் தகப்பனார் என்னைப் பார்த்து 'நீ தான் நள மகா ராஜா' என்று சொல்லவே எனக்கு நகைப்பு வருகிறது," என்று சொன்ன உடனே தமயந்தி தேவியும் நள மகா ராஜாவுடைய சிலையும் தன்னுடைய சிலையும் ஒத்துப் பார்த்து, கிழித்திருக்கிற அடையாளத்தையுங் கண்டு, "ஓய், மகா ராஜரே! இந்தச் சிலையுடனே தானே என்னைப் பார்க்கிலும் அதிக துக்கம் அனுபவித்தீரோ?" என்று தமயந்தி முகத்திலே அறைந்து கொண்டு, நின்ற நிலையிலிருந்து வெட்டிச் சாய்த்த மரம் போலே நள மகா ராஜா பாதங்களிலே தொப்பென்று விழுந்து, கோ என்றலறிப் பெருங் களைப் பட்டுத் தேறி, முன் இருந்த இருப்புகளைச் சொல்லி, புகழ்ந்து, துக்கம் பொங்கிப் பொங்கி வர, நள மகா ராஜா முகத்தை உற்றுப் பார்த்துச் சொல்லுகிறாள்: "ஓய்,

ராஜேந்திரரே! என் கண்மணியானவரே! நான் இப்படிக் கொத்த கொஞ்சமான புத்தியால் நாகத்துக் கேதுவாக மறு கலியாணம் பண்ணிக் கொள்ள நினைப்பேனோ? நீர் எவ்விதமாகிலும் வர வேண்டும் என்று இப்படிக் கொத்த வார்த்தை பிறப்பித்தேன். அல்ல என்று இந்த எத்தனம் நான் பண்ண வேண்டும் என்று நிசமாய் நினைத்தேனே ஆனால், நான் இப்படி இந்த வேஷத் துடனே இருப்பேனோ? என் மனதிலே வேறே ஒருவரைக் கலி யாணம் பண்ணிக் கொள்ள நினைத்ததே இல்லை! இதற்குச் சாக்ஷி பூமிதேவி, ஆகாச வாணி, அக்கினி, வாயு, சூரிய சந்தி ரர்கள், அஷ்டதிக்குப் பாலகர், முதலான தேவர்கள்! இவர்கள் அறியாதது ஒன்று இல்லையே. ஓய், ராஜேந்திரரே! நான் உனக்கு வஞ்சனை நினைத்ததே உண்டானால், பிராமணனைக் கொன் றவன் போகிற கதியிலேயும், புருஷனைத் துரோகம் பண்ணின பெண்சாதி போகிற கதியிலேயும், பொன் திருடினவன் போகிற கதியிலேயும், கோள் சொல்லுகிறவன் போகிற கதியிலேயும், வழி கட்டிப் பறித்துக் கொண்டு வதைசெய்கிறவன்போகிற கதி யிலேயும், பொய்ச் சாக்ஷி மண்ணோரம் சொன்னவன் போகிற கதி யிலேயும், தெய்வத் துரோகம் பண்ணினவன் போகிற கதியிலே யும், கோஹத்தியை ஸ்திரீ ஹத்தியை சிசு ஹத்தியை என்கிற மகா பாதகங்களைப் பண்ணினவன் போகிற கதியிலேயும், ஸ்ரீ மகா விஷ்ணு அறிய நான் போகக் கடவேன்! வேறொன்றும் நீங்கள் நினைக்க வேண்டுவது இல்லை, சகல நியாயமும் சம்பூரண மாக அறிந்திருக்கப் பட்ட தேவரீரே என்னிடத்தில் இப்படிச் சந்தேகப் படலாமா? இந்த க்ஷணத்திலே தானே நான் தேவர் களும் அறிய அக்கினியிலே புகுந்து வெளிப் பட்டு, உம்மு டைய மனது கலக்கம் தீர்ந்த பிற்பாடு உம்முடைய கிருபைக் குப் பாத்திரை ஆகிறேன்" என்று சொல்லி, அதிக துக்கத்து டனே பூமியிலே விழுந்து, கோ என்று புலம்ப, அது கண்டு

பெண்ணும் பிள்ளையும் கோ என்று புலம்ப, அப்போது அந்த அகோரமான துக்கத்தைப் பார்த்து, வீம ராஜா பெண்சாதியும் வீம ராஜாவும் தபனுபி என்கிற தமயந்தியின் தமையனும் கோ என்று புலம்பினார்கள். அதைப் பார்த்து, நள மகா ராஜாவும் கண்களிலே தண்ணீரைத் தாரை தாரையாக உதிர்த்துக் கிலேசப் பட்டான்.



45. §. THE DIVINITIES APPEAR. ALL CLEARED UP.

அப்போது சத்திய லோக நாயகர் ஆகிய பிர்ம்ம தேவர் அன்ன வாகனரூடராயும், கயிலாச பதி ஆகிய சாம்பவ மூர்த்தி ரிஷப வாகனரூடராயும், சுவர்க்க லோக நாயகர் ஆகிய தேவேந்திரர் அயிராவத ரூடராயும், சகல தேவாதி தேவர்கள் உடனேயும் கூடி வந்து, ஆகாச வீதியிலே நின்று நள மகா ராஜாவைக் கூப்பிட்டு, எல்லாரும் ஒரே வார்த்தையாகச் சொல்லுகிறார்கள்: "ஓய், நள மகா ராஜரே! ஓய், ராஜாதி ராஜர்களுக் கெல்லாம் அதிபதியான மகா ராஜரே! எங்களுடைய வார்த்தைகளைக் கேளும், உம்மைப் போல் ஒத்த சத்திய சந்தனான ராஜர் இப்படிக் கொத்த நினைவு நினைக்கிறது தகாது. உம்முடைய பெண்சாதி ஆன தமயந்தி தேவி மஹா பதிவிரதை ஆயிற்றே. இந்தப் பெண் பேரிலே நீர் இப்படி விரோதமான பொல்லாத கொஞ்ச வார்த்தைகள் சொல்ல வேண்டாம். ஓய், நள மகா ராஜரே! இதோ பார்த்தீரா? சனீஸ்பரன் தன் கெர்வம் எல்லாம் அடங்கி வெட்கப் பட்டிருக்கிறான். இதோ கார்க்கோடகன் உனக்கு வந்த தீங்கெல்லாம் தீர்த்து, பூர்வ ரூபத்தை வெளியாக்க உன்னைப் பிரார்த்திக்கிறான். ஓய், மகா ராஜரே! நீர் எங்களைப் பார்த்து உம்முடைய கிலேசத்தை விட்டு விடும். இந்தத் தமயந்தி தேவி அந்தக் காட்டிலே பிராணனை விடவேண்டும் என்று

அனேக விதமாக எத்தனம் பண்ணினாள். அப்படி வராத படிக்கு மூன்று வருஷமாக நாங்கள் பாதுகாத்து, ரக்ஷித்து, இன்று உமக்கு ஒப்பித்தோம். இனிமேல் நீர் புஷ்கர ராஜாவைச் செயித்து, உம்முடைய பெண்சாதியும் பிள்ளைகளும் நீரும் சுகசீவிகளாய் முன்னே இருந்தாற் போலே சகல தர்ம்மங்களையும் பரிபாலனம் பண்ணிக் கொண்டு, சுகமாக எங்களுக்கு எல்லாம் பிரீதியாக எக்கியங்களைப் பண்ணிக் கொண்டு, அபிவிர்த்தியாக இருங்கள். கடைசியிலே நீரும் உம்முடைய பெண்சாதியும் சுவர்க்கலோகம் வந்து சேருவீர்கள். இப்போது, பூர்வ ரூபத்தைத் தரியும்," என்று சகல தேவர்களும் ஒரே வார்த்தையாகச் சொல்லக் கேட்டு, நள மகா ராஜா ஆனந்த பாவசனாய்த் தலையை எடுத்து, ஆகாச வீதியிலே இருக்கிற தேவர்களைப் பார்த்து, மஹா பயபத்தி வினயத்துடனே அனேக சாஷ்டாங்க தெண்டங்கள் பண்ணி, எழுந்திருந்து, கைகளைக் கட்டிக் கொண்டு, அந்தத் தேவர்களை வெகு கெந்த புஷ்ப அக்ஷதைகள் தாம்பூலம் நைவேத்திய தூப தீபங்களினாலே பூசித்து, சரீரம் புளகிக்க அநேக நேரம் தோத்திரம் பண்ணின உடனே, கார்க்கோடகன் மாய ரூபமாய் வந்து, நள மகா ராஜாவுடைய சரீரத்திலே இருக்கிற விகுர்த ரூபத்தை வாங்கிக் கொண்டு போனான். அப்பொழுது நள மகா ராஜா தான் கட்டிக் கொண்டிருக்கிற பாதிப் புடவையுடனே களங்கம் இல்லாமல் பால சூரியனைப் போலே பூர்வ ரூபந் தரித்தான். அப்போது தமயந்தி புருஷனைக் கண்குளிரப் பார்த்து, பய பத்தி விசுவாசத்துடனே நமஸ்காரஞ் செய்தாள். தேவர்கள் எல்லாரும் பாரிசாத புஷ்பங்களைச் சல சல என்று வருஷித்தார்கள். தேவ துந்துமி திமி திமி என்று முழங்கினது. கெந்தர்வர்கள் பாடினார்கள். தும்புரு நாரதர் வீணைகள் வாசித்தார்கள். ரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை, தானியமாலி, கருணைவதி முத

லான தேவதா ஸ்திரீகள் நாட்டியம் பண்ணினார்கள். பின்னை யும் சுப சகுனங்கள் வெகுவாக உண்டாயின. அப்போது வீம ராஜா முதலான மற்றும் உண்டான பேர்கள் எல்லாரும் மஹா சந்தோஷப் பட்டார்கள். பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், தேவேந்திரன் முதலான பேர்கள் எல்லாரும் சந்தோஷத்துட னே நள மகா ராஜாவையும் தமயந்தி தேவியையும் குளிர்ந்த பார் வையினாலே பார்த்து, "சாஸ்விதமான கீர்த்திப் பிரதிஷ்டையை அடைந்து, சுக சீவிகளாக இருக்கக் கடவீர்கள்!" என்று ஆசீர்வாதம்பண்ணி, தங்கள் தங்கள் தானங்களுக்கு எழுந்தரு ளினார்கள்.



## 46. §. RECONCILIATIONS AND EXPLANATIONS.

அந்த நேரத்தில் ரிதுபர்ன மகா ராஜா இந்தப் பூர்வோத்த ரம் எல்லாம் கேட்டு, வெகு ஆச்சரியத்துடனேயும், பயபக்தி யுடனேயும், சந்தோஷத்துடனேயும் புறப்பட்டு, ஓடிவந்து, நவ கண்ட சக்கிர வர்த்தியான நள மகா ராஜாவுக்குச் சாஷ்டாங்க மாகத் தெண்டன் சமர்ப்பித்து, அவர் ஆதாரணை உண்டாய்க் கிட்ட உட்கார்ந்து சொல்லுகிறான்: "ஓய், நள மகா ராஜரே! உம்மை நான் இத்தனை நாளும் அறியாமல் உம்முடைய கையினா லே எனக்கு வேண்டிய வேலைகளைச் செய்வித்துக் கொண்டு, கொ ஞ்சமான பேச்சுகளையும் பேசிக் கொண்டிருந்தேன். அதனாலே அனேகம் தோஷங்கள் எனக்கு வந்து சேர்ந்தன. நான் என்ன செய்யப் போகிறேன்? ஆனால், 'மனம் அறியாமல் ஒரு காரியம் செய்து விட்டால், அதற்குத் தோஷம் இல்லை' என்று தரும சாஸ்திரத்திலே சொல்லுகிற படியினாலே எனக்குத் தோ ஷம் இல்லை. நான் அனேகமாக அபராதம் உமக்குச் செய் தாலும் தேவரீர் பொறுத்துக் கொள்ளக் கடவது! சகல நியா யங்களும் அறிந்தவர்களுக்கு நான் சொல்ல வேண்டியது என்ன

இருக்கிறது? நீங்கள் மஹானுபாவாள். உங்களுடைய கீர்த்திப் பிரதாபத்தை அறிந்தவர்கள் ஆர் இருக்கிறார்கள்? நீங்கள் தரும சொரூபிகள்; ஆகையினாலே நான் மனம் அறியாமல் ஏதாகிலும் தப்புப் பண்ணி இருந்தால், அதை மன்னித்து என் பேரிலே தயவு வையுங்கள்," என்று வெகுவாய்த் தோத்திரம் பண்ணுகிற போது, அது கேட்டு, நள மகா ராஜா குஞ்சிரிப்புக் கொண்டு, சந்தோஷ சித்தனாய், ரிதுபர்ன மகா ராஜாவைத் தன் மார்புடனே தழுவிக் கொண்டு, "ஓய் ராஜரே! நீர் இப்படி அனேகவிதமாக இதவு வசனங்கள் சொல்ல வேண்டாம். நீர் மஹா சற்சனர், தர்ம்ம சொரூபர், துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனர், உம்முடைய தயவினாலே நான் என்னுடைய கோறிக்கையை ஈடேற்றிக் கொண்டேன். என்னுடைய விரதம் உம்மாலே நிறைவேறினது, நீர் மஹா புண்ணிய புருஷர்," என்றுசொல்லி, ரிதுபர்ன மகா ராஜாவைக் கொண்டாடினான். அதைக் கேட்டு, வெகு சந்தோஷத்துடனே நள மகா ராஜா கையிலே விடை பெற்றுக் கொண்டு, ரிதுபர்ன மகா ராஜா அயோத்தியா புரிக்குப் போயினான்.

பிற்பாடு, வீம ராஜா மருமகனுக்கு விலை இல்லாத பூஷணங்களையும் வஸ்திரங்களையும் அழைப்பித்து, வெகுமானமாகக் கொடுத்து, சந்தோஷம் பண்ணி வைத்தான். பிறகு நள மகா ராஜா மனதிலே இருந்த களங்கத்தை விட்டு, நிறைந்த மனதுடையவராய் வெகு சந்தோஷத்தை அடைந்து, தான் பட்ட பாடுகளை எல்லாம் மாமனாருக்கு ஆதியோடே அந்தமாகத் தெரியச் சொல்லி, பெண்சாதியுந் தானும் ஏக மனதுடையவர்களாய் மஹா சந்தோஷத்துடனே பிள்ளைகளை முத்தம் இட்டுக் கொண்டு, மஹா வைபோகத்துடனே இரண்டு நாள் அங்கே தானே மாமனார் வீட்டிலே இருந்தார்கள். மூன்றாம் நாள் மாமி மாமனார் மைத்துனன் இவர்கள் கையிலே செலவு வாங்கிக் கொண்டு, வஸ்திராபரண அலங்கிருதனாய் பெண்சாதியுங் கூட அழைத்துக் கொண்டு, நல்ல சுப முகூர்த்தத்திலே புறப்பட்டு, சுப சகுனங்களைப் பார்த்

துக் கொண்டு, உச்சாகமும் பிரபலமுமாக ரதம் ஏறி, மஹா வேகத்துடனே நடத்தி, தன் பட்டணமான நிஷத புரத்துக்குப் போய், புஷ்கர ராஜாவைக் கண்டு, வந்தனம் பண்ணிக் கொண்டு, அவனைப் பார்த்து நள மகா ராஜா ஒரு வார்த்தை சொல்லுகிறான்:—



**47.** §. THE INTERVIEW BETWEEN NALA AND HIS OLD ANTAGONIST.

"ஓய், புஷ்கர ராஜரே! நீர் மஹா ஐஸ்வரிய சம்பன்னர், மஹா பலசாலி, வீராதி வீரர், தேவரீர் பூர்வகாலத்திலே என்னுடனே கபடச் சூதமாடி, என்னுடைய ராச்சியம் சம்பத்துகளை எல்லாம் பறித்துக் கொண்டு, ஊரிலேயும் இருக்க ஒட்டாமல், துரத்துவித்த மகா ராஜர் அல்லவோ? நாங்களும் கர்ம வசத்தினாலே வந்த விதியைத் தள்ளக் கூடாமையால் அனேகம் பிரயாசைகளைப் பட்டோம். ஆகையால் இன்னம் ஒரு தரம் சூதாடவேண்டும் என்கிற ஆசையினாலே வந்தேன். தேவரீர் தயவு பண்ணும்!" என்று சொல்லி, நள மகா ராஜா மிருது வசனமாகக் கேட்கிற போது புஷ்கர ராஜா குஞ்சிரிப்புக் கொண்டு சொல்லுகிறான்:—

ஓய், நள மகா ராஜரே! முன்னே நான் என் பாக்கிய வசத்தினாலே உம்முடனே சூதாடி, ராச்சியத்தையும் சகல பாக்கியங்களையும் கெலித்தேன். நீர் உம்முடைய கர்மவசத்தினாலே ராச்சியத்தை எனக்குத் தோற்று விட்டுப் பரதேசியாய்ப் போய் விட்டீர். இப்போது திரும்பவும் வேடிக்கையாகச் சூதாடவேண்டும் என்று வந்தீர், அல்லவோ? என்ன வஸ்துவைப் பந்தயமாக வைத்து ஆடப் போகிறீர்? சொல்லும்!" என்று விரோதமாக முன் பின் யோசனை பண்ணாமல் கண்டதுண்டமாய்ச் சொல்லுகிற போது, அது கேட்டு நள மகா ராஜாவும் வெகு ரோஷத்துடனே சொல்லுகிறான்:—"ஓய், புஷ்கர ராஜரே? சூதாடுகிறதிற்குப் பந்தயம் என்ன கொண்டு வந்தாய், என்று

கேட்டீர் அல்லவோ? இதோ என் பெண்சாதியைப் பந்தயம் வைத்து ஆட வந்தேன். சீக்கிரமாக நீர் யோசனை பண்ணுமல் என்னுடனே சூதாட வாரும்! எங்கே போகப் போகிறீர்? உம்மை விட மாட்டேன், வாரும்! வாரும்!" என்று அதிக கோபத்துடனே நள மகா ராஜா புஷ்கர ராஜாவை அழைக்கிறபோது, அது கேட்டு, புஷ்கர ராஜா கெர்வத்தினலே இது தெய்வ எத்தனம் என்று அறியாமல், கல கல என்று நகைத்து, அந்த க்ஷணமே சாரையும் பலகையும் அழைப்பித்து, நள மகா ராஜாவை உளுக்காரச் சொல்லி, சூதாடினன். அப்போது நள மகா ராஜாவும் சனீஸ்பரனை நினைத்து, வெகு நேர்ப்புடனே சாக்கிரதையாய் உபாயத்தினலே சூதாடி, அரண்மனைகள், ஆஸ்தான மண்டபங்கள், பொக்கிஷ பண்டாரங்கள், ரத கெஜ துரக பதாதிகள் சகலமும் வரிசை வரிசையாகக் கெலித்து, புஷ்கர ராஜாவைக் கோமணுண்டி ஆக்கி, மகா ரோஷத்துடனே இரண்டு கண்களும் கோவைப் பழம் போலே செவக்க பல்லுகளைப் படபடென்று கடித்து, அந்தப் புஷ்கர ராஜாவைப் பார்த்துச் சொல்லுகிறன்:—"ஓய், புஷ்கர ராஜரே! சற்றுகிலும் தயை தாக்ஷணியம் இல்லாத மனசுடையவரே! நீர் அந்த நாளையிலே சூதாடி என் ராச்சியத்தைப் பறித்துக் கொண்டு, வெளியிலே ஓட்டி விட்டீரே. அப்போது, பக்ஷிகள் வந்து என்னுடைய பச்சை வடத்தைப் பறித்துக் கொண்டு போன இடத்திலே நான் ஒண்டியாய் இருந்தாற் போலே, இப்போது நீரும் ஒண்டியாய்க் கை கட்டிக் கொண்டு என் எதிரிலே நிற்கல் ஆச்சுதே. மேருவும் அணுவாம், அணுவும் மேருவாம்; தரித்திரன் தனவான் ஆவான், தனவான் தரித்திரன் ஆவான்; அதற்குத் திஷ்டாந்திரம் இதுவே, அறிந்து கொள்ளும்! நீர் மெத்தக் கடின சித்தர். முன்னே சனீஸ்பரருடைய மாய்கையினலே என் சம்பத்தை எல்லாம் உமக்குத் தோற்றேன், அல்லவா? இப்போது நீர் கெலிக்க எம்மாத்திரம் மனுஷர்? உமக்கு நிற்க இடமும் இல்லாமற்

போச்சுது. பார்த்தீரோ? எப்படிப் பட்ட சாமார்த்தியம் உள்ளவன் ஆனாலும், இந்த லோகத்திலே நல்லதும் பொல்லாததும் அனுபோகம் பண்ணவே வேண்டும். ஆருக்கும் கெர்வம் ஆகாது. முன்னே நான் சூதாடித் தோற்றபோது ஒரு வீட்டிலே புகுந்தால், அங்கே இருக்க ஒட்டாமல் என் வஸ்திரங்களையும் பறித்துக் கொண்டு, ஊருக்குப் புறம்பே ஓட்டி விட்டீர். அதற்கு நான் பயப்படாமல் அப்போதே ஊருக்கு வெளியே மூன்று நாள் தனியே என் பெண்சாதியுடனே அன்ன பானாதிகள் இல்லாமல் இருந்த போது பட்டணத்து ஜனங்களில் எங்கள் அண்டைக்கு ஒருவரையும் வர ஒட்டாமல் கட்டுப் பண்ணுவித்தீர் அல்லவா? உமக்கு நான் பண்ணின தப்பென்ன? நான் சூரிய வங்கிஷத்து ராஜா அல்லாமல் பிறத்தியான் அல்லவே! எங்களுக்குச் சனீஸ்பரராலே ஆபத்து வந்தால், நீர் இப்படிப் பண்ணலாமா? நீர் இப்படிப் பட்டவர் என்று தெரிந்தாலும் இப்போது உம்மை நான் அப்படிப் பண்ணுவேனா? ஆனாலும், நீர் என்ன செய்குவீர்? உம்மை ஏன் விருதாவிலே தூற வேண்டும்? நாங்கள் பண்ணின கருமம் நாங்களே அனுபவித்தோம். உம்மாலே ஒரு காரியமும் நடந்ததே இல்லை. எல்லாம் ஈஸ்வர சங்கற்பத்தினாலே நடக்கிற காரியமே அல்லாமல், ஒருவர் எண்ணத்தினாலேயும், புத்தியினாலேயும் ஒரு காரியமும் ஆகிறது இல்லை. அவரவர்கள் செய்த பாவ புண்ணியங்களுக்குத் தக்க படியே நடக்கும்," என்று நள மகா ராஜா நயமும் பயமுமாக நல்ல வார்த்தைகளைச் சொல்லி, அந்தப் புஷ்கர ராஜாவுக்கு ரத்தின பூஷணங்களும், திவ்விய வஸ்திரங்களும் வெகு மானமாகக் கொடுத்து, சந்தோஷம் பண்ணுவித்து, அவனை அவன் பட்டணத்துக்கு அனுப்பிவைத்தார். அவனும் நள மகா ராஜாவுக்குப் பயபத்தி விசுவாசத்துடனே சாஷ்டாங்கமாகச் சேவித்து, அவர் இடத்திலே செலவு வாங்கிக் கொண்டு, மகா சந்தோஷத்துடனே தன் பட்டணம் போனான்.

### 48. §. RESTORATION TO THE KINGDOM.

பிற்பாடு நள மகா ராஜா தன் பட்டணத்தை எல்லாம் அலங்கரிக்கச் சொல்லி, குடிகளுக்குச் செலவு கொடுத்தான். அப்படியே அவர்களும் அரண்மனைகள், ஆஸ்தான மண்டபங்கள், அந்தப் புரங்கள், கோட்டை கொத்தளங்கள் சமஸ்தமானவைகளும் நவரத்தின கசிதமாகத் தேவேந்திரனுடைய அமராபதி பட்டணம் போலவும், குபேரனுடைய அளகாபுரி பட்டணம் போலவும் சிங்காரித்து, எங்கே பார்த்தாலும் கர்ப்பூர விளக்குகளை ஏற்றுவித்து, வெகு சிங்காரமாக வாழை கமுகுகள் நாட்டி, புஷ்ப தோரணங்கள் கட்டுவித்து, வீதிகள் எங்கும் பனி நீர்களைத் தெளிப்பித்து, அனேக வேடிக்கைகளாகப் பட்டணம் எங்கும் சிங்காரம் செய்வித்தார்கள். அதைப் பார்த்து நள மகா ராஜா மகா சந்தோஷத்தை அடைந்து, தமயந்தியையும் கூட்டிக் கொண்டு, நல்ல சுப முகுர்த்தத்திலே அரண்மனைக்குள்ளே பிரவேசித்து, அனேகம் பிராமணர்களுக்குத் திருப்தி அடையச் சுவர்ன தானமும் வஸ்திராபரணங்களும் கொடுத்து, போசனமும் செய்வித்து, வெகு சந்தோஷத்துடனே பட்டந் தரித்து, ராச்சியத்தை ஆண்டு கொண்டு, சுகமாய் இருந்தான். அப்போது மந்திரிகள், பிரதானிகள், சேனாதிபதிகள், தளவாய்கள், சினேகிதர்கள், பந்து ஜனங்கள், மற்றும் உண்டான பெயர்களும் நள மகா ராஜாவினுடைய சமுகத்திலே வந்து தெண்டன் இட்டு, வெகுவாகக் கிலேசப் பட்டுச் சொல்லுகிறார்கள்: "ஓய், ராஜபோக தேவேந்திரரே! ராஜமார்த்தாண்டரே! தயா சமுத்திரரே! ஓய், சுவாமி! உம்மைக் காணாமல் சூரியனைக் காணாத தாமரைப் பூப்போல் நாங்கள் சரீரம் வாடி, மதிமயங்கி, மனிதர்களுடைய தாரதம்மியம் அறியாத புஷ்கர ராஜாவைச் சேவித்து, அவன் கையிலே அனேகம் பாடுகள் பட்டோம். அவன் அண்டையிலே கை கட்டி இருக்கப் பிர்ம்மா இப்படி எங்கள் தலையிலே எழுதினனே என்று,

வெகு விசாரப் பட்டுக் கொண்டிருந்தோம், ஐயா! இது அல்லாமலும் தேவரீர் எங்கள் தாயான தமயந்தி தேவி உடனே கூடப் பட்டணத்துக்குப் புறத்திலே மூன்று நாள் பட்டினி இருந்த போது நாங்கள் வெகு தாபத்திரயப் பட்டு, உங்களுக்குச் சாப்பாடு கொண்டு வருவோம் என்றால், மஹா பாதகன் ஆன புஷ்கரன் ஆக்கினையால் கொண்டு வராத பாவிகள் ஆனோம். அந்தரங்கமாய் ஆகிலும் வருவோம் என்றால், வேவுகாரர்களை வைத்திருந்தான். ஆதலால் பயப்பட்டிருந்தோமே அல்லாமல், தேவரீரை அலக்ஷயம் பண்ணினது நாங்கள் அல்ல. நாங்கள் வெகு பாதகர்கள், மஹா நீச புத்தி உள்ளவர்கள். சஞ்சல சித்தர்கள். தேவரீருடைய சமுகத்துக்கு எப்படிப் போகப் போகிறோம் என்று, வெகுவாய் வெட்கப் பட்டுக் கொண்டு வந்தோம். எங்களை உங்கள் கிருபாதிருஷ்டியினாலே பார்த்து இரக்ஷிக்க வேணும்" என்று, வெகுவாகப் பிரலாபித்துச் சொன்ன மந்திரிகள் பிரதானிகள் மற்றும் உண்டான பேர்கள் எல்லாரையும் நள மகா ராஜா பார்த்துக் குஞ்சிரிப்புடனே சில வார்த்தைகள் சொல்லுகிறான்:—"ஓ, ஓ, மந்திரிகளே! பிரதானிகளே! புற ஜனங்களே! கேளுங்கள், அந்த நாளிலே சனீஸ்பரர் நம்முடைய பேரிலே சலங் கொண்டு இப்படி வெகு மாய்கைகள் பண்ணினார். அது நானே அறிய மாட்டாமல் போனேன், நீங்கள் அறியமாட்டுவீர்களா? நாங்கள் பண்ணின கருமத்தை நாங்களே அனுபவித்தோம். நீங்கள் வீணாகக் கிலேசப் படுவானேன்? நீங்கள் அறிவீர்களா? அவரவருக்குப் பிர்ம்ம தேவன் விதித்த படிக்கு அனுபவிக்க வேண்டுமே அல்லாமல் தப்பித்துக் கொள்ளக் கூடாதே. புஷ்கர ராஜா தான் என்ன செய்ய மாட்டுவான்? சனீஸ்பரர் தாம் என்ன செய்ய மாட்டுவார்? நீங்கள் தாம் என்ன செய்ய மாட்டுவீர்கள்? நீங்கள் அனைவரும் அல்லும் பகலும் எங்கள் நிமித்தியமாகக் கிலேசப் பட்டுக் கொண்டு லோக கர்த்தாவை நீங்கள் வேண்

டிக்கொண்டிருந்த படியால் அந்தப் பகவான் எங்கள் பேரி லே தயாதிருஷ்டியை வைத்துக் காப்பாற்றினன். அதனால் நாங்கள் எப்போதும் போலே திரும்பவும் ராச்சியத்தைக் கெலித்துக் கொண்டு, உங்கள் முகங்களைப் பார்த்தோம். உங் களிடத்திலே என்ன தப்பிதம்? ஒன்றும் இல்லை, நீங்கள் இ னிமேல் எந்தக் காரியத்துக்கும் பயப்பட வேண்டாம். வேறு சிந்தனைகள் இல்லாமல், நம்முடைய காரியங்களிலே அதிக சாக்கி ரதையாக இருந்து நடந்து கொள்ளுங்கள். இனிமேல் நீங்கள் சுகப்படுவீர்கள், சந்தோஷமாகப் போங்கள்'!" என்று சொல்லி, தாம்பூலங் கொடுத்து, நள மகா ராஜா அவர்களை ஆதரணை பண் ணினன்.



**49.** §. THE LEVEE OF SUPJECT KINGS. CONCLUSION.

அந்த வேளையிலே ஐம்பத்தாறு தேசத்து ராஜாக்களும் அவ ரவர்கள் ரத கெஜ துரக பதாதிகளுடனேயும் பதினெட்டு மேள வாத்தியங்களுடனேயும் வெகு ஆடம்பரமாக திவ்விய வஸ் திரங்கள், திவ்விய ஆபரணங்கள், மொஹராக்கள், நவரத்தினங் களும் அனேக உச்சிதங்களாக இருக்கப் பட்ட பழ வகைகளும் காணிக்கையாக எடுப்பித்துக் கொண்டு, சாஷ்டாங்கமாகத் தங் கள் கிரீடங்கள் அவர் பாதத்திலே பட நமஸ்காரம் பண்ணி, ராஜ கூட்டங்கள் எல்லாம் தாங்கள் கொண்டு வந்த காணிக்கைகளைச் செலுத்தி, கை கட்டிக் கொண்டு நிற்கிற போது, நள மகா ராஜா சந்தோஷமாக அவர்களைப் பார்த்து, ஆதரணை பண்ணி, "ஓ, ஓ, ராஜ கூட்டங்களே! நீங்கள் மஹானுபாவர்கள், அல்லவோ? உங் களை இத்தனை நாளைக்குப் பிற்பாடு காணக் கிடைத்தது. நீங்கள் உளுக்காருங்கள்," என்று சொல்லி, நள மகா ராஜா அவரவர்களுக் குத் தக்க சிங்காதனங்களைப் போடுவித்தார். அவர்களும் தங் களுக்குப் போடுவித்த சிங்காதனங்களில் உட்கார்ந்து கொண் டு, நள மகா ராஜாவைப் பார்த்து, வெகுவாகத் தோத்திரம் பண்ணு

கிறார்கள்:—"ஓய், நவகண்ட சக்கிர வர்த்தியாகிய மஹா ராஜரே! ராஜ மார்த்தாண்டரே! ராஜ பரமேஸ்வரரே! ராஜ கெம்பீரரே! ராஜ குலதிலகரே! ஓய், சுவாமி! தேவரீர் எங்கள் எல்லாரை யும் விட்டுப் பட்டணத்தையும் ராச்சியத்தையும் விட்டு என்ன காரியத்தினாலே இப்படிக்குப் பிரயாசமான யாத்திரை போனீர்? இத்தனை காலமும் எங்கே இருந்தீர்? நீர் இங்கே இல்லாதது எங்களுக்கு எல்லாம் சூரியன் இல்லாத பகலைப் போலவும், சந்தி ரன் இல்லாத ராத்திரியைப் போலவும், தாமரை இல்லாத குளம் போலவும், நட்சத்திரங்கள் இல்லாத ஆகாசம் போலவும், அலை இல்லாத சமுத்திரம் போலவும், பலாதிகள் இல்லாத தோப்பு கள் போலவும், பக்ஷிகள் இல்லாத வனங்கள் போலவும், பேரி கை இல்லாத தண்டு போலவும், வாசனைகள் இல்லாத புஷ்ப சந்தனாதிகளைப் போலவும், வஸ்திராபரணங்கள் இல்லாத ஸ்திரீ யைப் போலவும், புருஷன் இல்லாத பெண்சாதியைப் போல வும், தேவாலயம் இல்லாத ஊரைப் போலவும், கறி அமுதில்லாத போசனம் போலவும், மழை இல்லாத பயிரைப் போலவும், தாய் இல்லாத பிள்ளையைப் போலவும், பொறுமை இல்லாத தபசைப் போலவும், குரு இல்லாத வித்தையைப் போலவும், இதுவரைக்கும் இருந்தது. அந்தப் புஷ்கர ராஜா உம்மைக் கள் ளச் சூதாட அழைத்து, அவன் உம்மைச் செய்த அவமானத் துக்கு அப்போது தானே அவனைக் கொல்ல வேண்டி இருந் தது, தப்பிப் போச்சுது. அந்தத் துரோகியை இப்போதும் காவல் வசம் பண்ணாமல் அனுப்பி விடுவானேன்? எங்களுக்கு அவன் பேரை நினைத்தால், அவனைப் பிடித்துக் காவல் வசம் பண்ணிப் போட்டு, அவனுடைய ராச்சியத்தையும் பறித்துக் கொண்டு, அந்த ராச்சியத்திலேயும் அவனை இருக்க ஒட்டாமல் துரத்திவிட வேண்டும் என்கிறதாய் வெகு ரோஷம் எங்களுக்கு வருகிறது, இத்தனை ரோஷம் உள்ளவர்கள் முன்னேதானே செய்தீர்களா? என்று தேவரீர் நினைக்கப் போகிறீர். உம்மு

டைய ஆக்கினைக்குப் பயப்பட்டு இருந்தோம். அல்ல என்று நாங்கள் அப்படி முன் பின் யோசனை பண்ணுமல் ஒரு காரியம் செய்ததே உண்டானல், பார்த்தீர்களா, நள மகா ராஜா புஷ்கர ராஜாவுக்கு ராச்சியத்தைக் கொடுத்தாற் போலே கொடுத்து, உடனே தன் மனுஷர்களை அனுப்பி, ராச்சியத்தைப் பறித்துக் கொண்டான் என்கிற அபகீர்த்தி தேவரீருக்கு வரப் போகிற தென்று நினைத்து, நாங்கள் பயந்திருந்தோம்," என்று சொன்ன வார்த்தைகளை நள மகா ராஜா கேட்டுச் சிரித்து, ராஜ கூட்டங் களைப் பார்த்து, ஒரு வார்த்தை சொல்லுகிறுன்.—

"ஓய், ராஜாக்களே! அந்தப் புஷ்கர ராஜர் நமக்குத் துரோகம் பண்ணினுர் என்று சொல்லி, அவரை நாம் தெண்டிப்பானேன்? அவரவர்கள் செய்த பாவ புண்ணியங்களை அறிந்து, எம தர்ம ராஜாவே அவர்களை விசாரிக்கப் போகிறுன். அப்படி இருக் கிற போது விருதாவாய் நாம் ஏன் நிந்தைக்கு உட்பட வேண் டும்? அந்தப் புஷ்கர ராஜா செய்த பாவம் அவரே அனுபவிக் கப் போகிறுர். நமக்கு ஒருவன் அபகாரம் பண்ணினுலும் அவ னுக்கு நாம் பிரதி உபகாரம் பண்ண வேண்டும். அதுவே அவ னை நாசம் பண்ணும், இதற்குச் சமுசயம் இல்லை. அவனவன் செய்த பாவ கருமங்களை அவனவன் அனுபவிக்கிற போது நாம் செய்த பாவ கருமங்களை நாம் அனுபவிக்க வேண்டுமோ? அப் போது, வஞ்சனை பண்ணின புஷ்கர ராஜா இப்போது வஞ்சனை பண்ணமாட்டுவாரா? விதி வசத்தை யாராலே தள்ளக் கூடும்? மஹா யோகீஸ்வரர்களையும் விடாது," என்று தாம் பட்ட பாடுகளை எல்லாம் சொல்லிக் கொண்டிருக்கவே, அப்போது பௌஷ்டி யன் என்கிற சாரதி வந்து, நள மகா ராஜாவின் பாதத்திலே தொப்பென்று விழுந்து, வெகுவாகப் பிரலாபித்துச் சொல்லுகி றுன்:—"ஓய், சுவாமி! தேவரீரிடத்திலே நான் ஊழியம் பண் ணிக் கொண்டிருக்கிற போது பயபத்தியுடனே உங்கள் ஆக் கினைக் குட்பட்டிருந்தேனே; என்னுடனே ஒரு வார்த்தை ஆகி லும் சொல்லாமல் போனீர்களே. உங்களுடைய பிள்ளைகளை நான் அழைத்துக் கொண்டு போய், விதர்ப்ப புரத்திலே விட்டு

வந்து, உங்களைத் தேடிக் காணாமல் அயோத்தியா புரிக்குப் போயிருந்தேன். அப்போது ரிதுபர்ன மகா ராஜர் உங்களுடைய விருத்தாந்தங்களை எல்லாம் அறிந்து அவர் வெகுவாய் விசாரப்பட்டு, என்னுடனே 'பார்த்தையா பௌஷியனே! நள மகா ராஜர் நம்மைச் சேவித்துக் கொண்டிருந்தார். அது நாம் அறியாமல் போனோம், நீயும் சொல்லாமல் போனாய். அந்த நள மகா ராஜாவின் கையினாலே நான் வெகு வேலைகளைச் செய்வித்துக் கொண்டேன்,' என்று சொல்லித் துக்கித்து உங்களை அனேக விதமாகக் கொண்டாடினார். அந்த ராஜாவினிடத்திலே தான் நான் சேர்ந்து, தேவரீர் எப்போது வெளிப் படப் போகிறீர், என்று தெய்வத்தையே தோத்திரம் பண்ணிக் கொண்டிருந்தேன்," என்று சொன்ன பௌஷியனைப் பார்த்து, நள மகா ராஜா குஞ்சிரிப்புக் கொண்டு சொல்லுகிறான்: "ஓ, பௌஷியனே! கடவுளினுடைய கிருபையினாலே நவ கண்டங்களும் ஆளும் படிக்கு எப்போதும் போலே நமக்குச் சித்தித்தது. நீ புண்ணிய புருஷன், எனக்கு ஒரு நாளும் ஒரு தாழ்ச்சியும் வாராது," என்று சொல்லி, பௌஷியனை மெச்சி, வந்த ராஜாக்களுக்கு எல்லாம் தனகனக வஸ்து வாகனாதிகள் அபிரிமிதமாய் வெகுமானங்கள் கொடுத்து, சகல ராஜாக்களையும் அவரவர் தேசங்களுக்கு அனுப்பி விட்டு, பெண்சாதி பிள்ளைகளுடனே கூடிச் சேவித்து, யாகங்கள், எக்கியங்கள், ஓமங்கள், தான தருமங்களைச் செய்துக் கொண்டு, துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனஞ் செய்து, தரும மார்க்கமாகக் குடிகள் கையிலே ஆறில் ஒரு கடமை வாங்கிக் கொண்டு, அவர்களுக்கு ஒரு சிந்தனையும் இல்லாமல் இரக்ஷித்து, மாதமும்மாரி பொழியச் சகல தானியங்களையும் அபிவிர்த்தியாக விளைவித்து, தாய் தகப்பனைப் போலே அந்தப் பட்டணத்து ஜனங்களை எல்லாம் போஷித்துக் கொண்டு, மஹா கீர்த்திப் பிரதிஷ்டையுடனே இராச்சிய பரிபாலனம் பண்ணிக் கொண்டு சுகமாய் இருந்தான்.

END OF THE HISTORY OF NALA

END OF THE THIRD BOOK.